

**SIR SATYENDRA PRASANNA SINHA.**

ஸர் ஸத்யேந்த்ர ப்ரஸன்ன ஸின்ஹா.

THE GUARDIAN PRESS

# ஜனோபிமானி.

(முன்பு ‘பிழைக்கும் வழி’ யென்று வழங்கியது.)

**THE PEOPLE'S FRIEND.**

FORMERLY KNOWN AS THE ‘PRACTICAL LIFE.’

ஜி. எ. வைத்யராமன், பி. எ.,
பத்ராதிபர்.

G. A. VaidyaRaman, B. A.,
EDITOR.

புஸ்தகம் 7. Vol. 7. — ராக்ஷஸஸ௵, மார்கழிமீ, DECEMBER, 1915. — ஸஞ்சிகை 16. No. 16.

## The People's Friend.

An illustrated Tamil monthly devoted to public welfare and popular education.

The ‘People's Friend’ is subscribed for by Government for use in the agricultural stations and by several Local Boards and Municipalities for the use of the teachers and pupils in the schools under their control.

RATES OF SUBSCRIPTION POST FREE.

| | Inland. Rs. A. P. | | Foreign. Rs. A. P. |
|---|---|---|---|
| Per annum ... | 4 0 0 | ... ... | 6 0 0 |
| Single copy ... | 0 6 0 | ... ... | 0 8 0 |
| Sample copy | 0 6 0 | ... ... | 0 8 0 |

RATES OF ADVERTISEMENT.

| | | | |
|---|---|---|---|
| 1 Page | ... | 5 0 0 | per month. |
| ½ do | ... | 2 8 0 | do |
| ¼ do | ... | 1 4 0 | do |
| 1/10 do | ... | 1 0 0 | do |

The above rates are all *net* and subject to no discount whatever. Orders should be accompanied with advance.

**Notice to Contributors:**—The Editor solicits contributions on subjects relating specially to agriculture, trade, industry and popular, scientific and technical education. Articles should be written in plain colloquial Tamil on one side of the paper only and on half margin. Accepted articles will be paid for on publication. It will be understood that the publishers may, at their discretion, republish in book form articles which have been paid for at the time of publication in the journal.

No money should be paid to any Agent. All remittances and letters should be addressed to the Publishers, Messrs. G. A. VaidyaRaman & Co., 3 & 4, Kondi Chetty Street, Georgetown, Madras,

## ஜனோபிமானி.

பொது ஜனங்களின் அறிவைப் பரவச்செய்து அவர்களுடைய க்ஷேமத்துக்காக உழைத்துவரும் ஒரு மாஸாந்தரத் தமிழ்ப் பத்ரிகை.

விவஸாயப் பண்ணைகளின் உபயோகத்துக்காக கவர்ன்மெண்டாரும், ஸ்கூல்களில் உபாத்யாயர்கள் மாணுக்கர்கள் இவர்களுடைய உபயோகத்துக்காக பல லோகல் போர்டுகளும் முனிஸிபாலிட்டிகளும் ‘ஜனோபிமானி’யை வாங்கிவருகிறார்கள்.

தபால் சார்ஜ் உள்பட சந்தா விவரம்.

| | உள் நாடு. | | அந்ய நாடு. |
|---|---|---|---|
| வர்ஷம் 1-க்கு ... | 4 0 0 | ... | 6 0 0 |
| தனிப்ரதி ... | 0 6 0 | ... | 0 8 0 |
| மாதிரி காபி ... | 0 6 0 | ... | 0 8 0 |

சந்தாப்பணத்தை ஒரு ஏஜெண்டினிடத்திலும் கொடுக்கக்கூடாது. ஸகல பணத்தையும் எங்களுக்கு நேரில் அனுப்பிவிடவேண்டும்.

விளம்பர விகிதங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 பக்கத்திற்கு | | மாஸம் | ஒன்றுக்கு | 5 0 0 |
| ½ | ,, | ,, | ,, | 2 8 0 |
| ¼ | ,, | ,, | ,, | 1 4 0 |
| 1/10 | ,, | ,, | ,, | 1 0 0 |

**வ்யாஸம் எழுதுபவர்கள் கவனிக்கவேண்டியவை.**

விவஸாயம், வ்யாபாரம், கைத்தொழில் விஷயங்களைப்பற்றி வ்யாஸங்கள் தேவை. அவைகள் ஒப்புக்கொள்ளப்பட்டால் ப்ரசுரமானதும், எழுதினவர்களுக்கு தக்க ஸம்பாவனைசெய்யப்படும். ஒவ்வொரு வ்யாஸத்தையும் கடுதாசியின் ஒரேபக்கத்தில் ஒருபாதியை விட்டு மறுபாதியில் மட்டும் எழுதவேண்டும். பேசும் தமிழ்தான் தேவை. கடினமான தமிழ் உதவாது.

ஸம்பாவனை செய்திருக்கும் வ்யாஸங்களை நாங்கள் எங்கள் இஷ்டப்படி எந்த விதம் வேண்டுமானாலும் மறுபடி ப்ரசுரிக்க அதிகாரமுண்டு என்பதை நிருபநேயர்கள் அறியவேண்டும்.

ஜி. எ. வைத்யராமன் அண்ட் கம்பெனி,
3 & 4, கொண்டி செட்டித் தெரு;
ஜார்ஜ் டவுன், மதராஸ்.




ஜனபிமானி.

புஸ்தகம் 7.] ராக்ஷஸஞு மார்கழிமீ. [ஸஞ்சிகை 16.

## THE COST OF WAR.

## யுத்தத்தின் சேலவு.

சென்ற ஜூன் மாஸத்து 'ஜனபிமானி'யில் யுத்தத்தில் ஸம்பந்தப்பட்ட தேசங்களுக்கு யுத்தத்தினுல்எவ்வளவு செலவு நேரிடுமென்பதைப் பற்றித் தெரிவித்தோம். ஸமீபத்தில் ப்ரிட்டிஷ் பார்லிமெண்டில் ப்ரதம மந்த்ரியாகிய மிஸ்டர் ஆஸ்க்வித் இங்கலண்டானது யுத்தத்துக்கு எவ்வளவு செலவழித்திருக்கிற தென்பதைப்பற்றியும், இந்த வர்ஷம் ஏப்ரல் மாஸம் முதல் யுத்தச் செலவு எவ்வளவு அதிகரித்திருக்கிற தென்பதைப் பற்றியும் தெரிவித்தார்.

சென்ற ஸெப்டம்பர் மாஸம் 15ந்-தேதியன்று ப்ரிட்டிஷ் வரவு செலவு மந்த்ரி பார்லிமெண்டை 375-கோடிரூபாய் யுத்தத்துக்காக செலவழிக்க அதிகாரம் கொடுக்கும்படி கேட்டார். இதற்கு முன்னுல் இந்த வர்ஷத்தில் மூன்று தடவை பணஞ் செலவழிக்க அதிகாரம் கொடுக்கும்படி கேட்டிருக்கிருர். ஆக இந்த வர்ஷம் நான்கு தடவை கேட்டதையும் சேர்த்துப்பார்த்தால் இந்த வர்ஷத்துக்கு நாளதுவரையில் பார்லிமெண்டார் செலவுசெய்ய அனுமதி கொடுத்திருக்கும் தொகை 1,350-கோடி ரூபாயாகும். சென்ற வர்ஷத்தில் யுத்தத்துக்காகச் செலவழிந்திருக்கும் தொகையையும் சேர்த்தால் மொத்தத்தொகை 1,893 கோடி ரூபாயாகும்.

இந்தியாவைப் போலவே இங்கலண்டிலும் ரெவின்யூ வர்ஷமென்பது ஒரு வர்ஷத்தில் ஏப்ரல் மாஸம் முதல் அடுத்த வர்ஷம் மார்ச்சுமாஸம் 31-ந் தேதி முடியவாகும். மேலே 'இந்த வர்ஷ' மென்றது 1915-ம் வர்ஷம் ஏப்ரல் மாஸம் 1-ந் தேதி முதல் அடுத்த 1916-ம் வர்ஷம் மார்ச்சு மாஸம் 31-ந் தேதி முடியவாகும்.

சென்ற வர்ஷம் ஆகஸ்ட்மாஸம் முதல் இந்த வர்ஷம் மார்ச்சுமாஸம் 31-ந் தேதி முடிய இங்கலண்டின் யுத்தச் செலவு மொத்தம் 543 கோடி ரூபாயாகும். தினப்படிச் செலவு சராசரியில் கிட்டத்தட்ட $2\frac{1}{4}$-கோடி ரூபாயாகும்.

ஆனுல் இந்த வர்ஷம் ஏப்ரல் மாஸம் முதல் சராசரி தினப்படிச் செலவு அதிகரித்துக் கொண்டு வந்திருக்கிறது. இன்னும் அதிகரிக்கும் என்றும் தெரிகிறது. சென்ற ஏப்ரல் மாஸம் 1-ந் தேதியிலிருந்து ஜூலை மாஸம் 17-ந் தேதி வரையில் 450-கோடி ரூபாய் செலவழிந்திருக்கிறது. சராசரி தினப்படிச் செலவு 4-கோடியே 35-லக்ஷம் ரூபாயாகும். இந்தக் காலத்துக்குள்ளும் செலவு ஒரே சீராயில்லை. ஏப்ரல் மாஸம் 1-தேதியிலிருந்து ஜூன் மாஸம் முடிய சராசரி தினப்படிச்செலவு 4-கோடி ரூபாயாக இருந்தது. ஜூலை மாஸம் 1-ந் தேதியிலிருந்து ஜூலைமாஸம் 17-ந் தேதி முடிய சராசரி தினச்செலவு $4\frac{1}{2}$-கோடி ரூபாயாகும்.

ஜூலை மாஸம் 8-ந் தேதியிலிருந்து ஸெப்டம்பர் மாஸம் 11-தேதி முடிய 56-நாளுக்கு 292-கோடி ரூபாய் செலவழிந்திருக்கிறது. இந்தக் காலத்தில் யுத்தச் செலவு சராசரியில் தினமொன்றுக்கு 5-கோடியே 35-லக்ஷம் ரூபாயாக இருந்தது.

இவ்விதம் யுத்தச் செலவு அதிகரித்ததற்கு சில அம்சங்கள் காரணமாயிருந்தன. முதலாவது தரைப்படைக்கும் கப்பல் படைக்கும் ஏராளமாய்ப் பணம் செலவழிந்திருக்கிறது. மேற்சொன்ன கணக்குகளின்படி ஏப்ரல் மாஸம் 1-ந்

தேதி முதல் ஸெப்டம்பர் மாஸம் 11-ந் தேதி முடிய மொத்தச் செலவு 750-கோடி ரூபாயாகி றது. இந்தத் தொகையில் 557½-கோடி ரூபாய் கப்பல் படைக்கும் தரைப்படைக்கும் செல வழிந்திருக்கிறது.

இரண்டாவது அம்சமென்னவென்ருல்; பாங்க் அப் இங்க்லண்ட் என்னும் பாங்கியார் ப்ரிட்டிஷ் கவர்ன்மெண்டார் கேட்டுக்கொண்டதன் மேல் சில தொகைகளை அன்யதேசங்களுக்குக் கடனாக கொடுத்திருந்தார்கள். அவைகளுக்காகவும் வேறு சில்லரை பாபத்துக்களுக்காகவும் கவர்ன்மெண்டார் ஷை பாங்கிக்கு 75-கோடி ரூபாய் செலுத்தினுர்கள்.

மேலே சொன்னபடி கவர்ன்மெண்டாரின் வேண்டுகோளின்மேல் பாங்க் அப் இங்க்லண்ட் அன்யதேசங்களுக்குக் கடன் கொடுத்திருப்பதேயல்லாமல் கவர்மெண்டார் ப்ரத்யேகமாய் 45-கோடி ரூபாய் அன்ய நேச அரசுகளுக்குக் கொடுத்திருக்கிறுர்கள். இதைத்தவிர ப்ரிட்டிஷ் ராஜ்யத்தைச் சேர்ந்த நாடுகளுக்கு 42-கோடி ரூபாய் கடன் கொடுத்திருக்கிறுர்கள்.

இவைகளைத்தவிர வேறு சில சில்லரைபாபத்துக்களுக்காக 30 கோடி ரூபாய் செலவழிந்திருக்கிறது.

## THE GROWTH OF PLANTS AND ANIMALS.

## சேடிகளும் ப்ராணிகளும் வளருவது.

இந்த உலகத்தில் அநந்தகோடி ஜீவராசிகள் இருக்கின்றன. இவைகளின் அநேகம் சீக்ரத்தில் வ்ருத்தியடைந்து ஸந்ததியை அபிவ்ருத்தி செய்யக்கூடியவையா யிருக்கின்றன. இப்படி இந்த பூமியில் ஜீவராசிகள் கணக்கற்றனவாகவும், அவைகளில் அநேகம் ஸந்ததியை சீக்ரம் வ்ருத்தி செய்யக்கூடியவையாயு மிருப்பதால், அவைகளில் ஒவ்வொன்றும் தான் அழிந்துபோகாமலிருப்பதற்காகப் படும்பாடு ரொம்ப அதிகமாயிருக்குமென்று சொல்லலாம். இவைகளில் ஒன்று மற்றொன்ருல் அழிந்து, அந்த வகை ஜீவராசியே பூமியில் இல்லாமல் போகாதபடி இயற்கையிலேயே ஏதாவது ஸாதனங்கள் இருக்கவேண்டும். இவ்வித ஏற்பாடுகள் ஒன்றுமில்லாவிட்டால், ஏதாவது ஒரு ஜீவராசி ரொம்ப வேகமாய் அபிவ்ருத்தியடைந்து மற்ற ஜீவராசிகள் தங்கி யிருப்பதற்கே இடமில்லாமல் போகக்கூடும். ஆனல் எந்த ஜீவராசியாவது, யாதொரு தடையுமில்லாவிட்டால் அவ்வளவு வேகமாயும் அபரிமிதமாயும் அபிவ்ருத்தியடையுமா என்று சிலருக்கு ஸந்தேக முண்டாகலாம். உண்மையில் சில ஜீவராசிகள் மேற்குறித்தபடி ரொம்ப அபிவ்ருத்தியடையுமென்று பலர் கணக்கிட்டிருக்கிறுர்கள்.

இதற்கு ப்ராணிவர்க்கத்திலும், தாவரவர்க்கத்திலும் சில உதாரணங்கள் கொடுக்கிறோம். அதிசீக்ரமாய் தனது வம்சத்தை வ்ருத்திசெய்யக்கூடிய பிராணிகளுள் குழிமுயல் ஒன்றாகும். குழிமுயலானது, அது பிறந்து 6-மாஸகாலமானவுடனேயே குட்டிபோட ஆரம்பித்துவிடுகிறது. ஒரு வர்ஷத்தில் அது 8, 9-தடவை குட்டிபோடும். மொத்தத்தில் ஒரு வர்ஷத்துக்கு 56-குட்டிக்குக் குறையாது.

குழி முயலின் வம்ச வ்ருத்தி விஷயமாய் ஒரு டாக்டர் கணக்குப்போட்டதில் ஒரு ஜோடி குழிமுயல்கள் 3-வர்ஷகாலம் மற்ற ஜீவராசிகளால் யாதொரு உபத்ரவமு மடையாமலிருந்து குட்டிபோட்டுக்கொண்டேயிருந்து, அவைகளின் குட்டிகளும், அந்தக்குட்டிகளின் வம்சங்களும் குட்டிபோட்டுவந்து, எல்லா குழிமுயல்களும் உயிருடன் இருந்தால், அந்த மூன்று வர்ஷகாலத்திற்குப் பிறகு முதலில் சொன்ன இரண்டு குழிமுயல்களின் ஸந்ததிகள் 1,37,18,000-க்குக் குறையாதென்று தெரியவந்தது. இவைகள் தங்கியிருப்பதற்கே ஏராளமான இடம் வேண்டியிருக்கும். ஆனல், இந்தக் குழிமுயல்களை மற்ற

ம்ருகங்களும் பறவைகளும் கொன்று தின்றுவிடுவதால் அவைகள் மேற்சொன்ன அளவுக்கு வ்ருத்தியடைவதில்லை. ஆனால் இவைகளுக்கு விரோதிகள் இல்லாத இடங்களில் இவைகள் ரொம்ப வ்ருத்தியாகி மனிதருக்கு பெருந்தீங்கு செய்கின்றன. ஸுமார் 60-வருஷங்களுக்கு முன்னால் ஒரு ப்ரிட்டிஷ் குடியானவன் ஆஸ்ட்ரேலியாவுக்கு சில காட்டுக் குழிமுயல்களைக் கொண்டுபோய் அங்கே அவைகளை வெளியில் விட்டான். அவைகள் காடுகளில் போய் ஏராளமாய் வ்ருத்தியாகி, தற்காலம் ஆஸ்ட்ரேலியாவின் விவஸாயத்துக்கு ரொம்ப இடையூறாக இருந்து வருகின்றன. அந்த தேசத்தில் குழிமுயல்களைக் கொன்று தின்னக்கூடிய பக்ஷிகளும் ம்ருகங்களும் ரொம்ப குறைவென்று தெரிகிறது. இதனாலும், குழிமுயல்களுக்கு ஆகாரவஸதிகள் ரொம்ப அதிகமாயிருப்பதாலும், மற்ற சீதோஷ்ண நிலைமைகள் அவைகளின் அபிவ்ருத்திக்கு ஸாதகமாயிருப்பதாலும், அவைகள் ரொம்ப அபிவ்ருத்தியாகி இருக்கின்றனவென்று தெரிகிறது.

பற்பல பயிர் வகைகளை பல பூச்சிகள் நாசம் செய்து வருகின்றன. பூச்சிகளால் பயிர்களுக்கு ஏற்படும் நாசம் ரொம்ப அதிகந்தான். ஆனால் பூச்சி வகைகளில் ஏதாவது ஒன்று மாத்ரம் யாதொரு இடையூறுமில்லாமல் அபிவ்ருத்தியடையுமானால் அவைகளால் விவஸாயத்துக்கு எவ்வளவு பாதகமேற்படுமென்பதைப் பார்த்தால், நாம் பூச்சிகளால் அதிக கெடுதல் அடையாததைப் பற்றி ஸந்தோஷப்படத்தான் வேண்டும். ஏனென்றால் இந்தப் பூச்சிகள் ரொம்ப தீவிரமாக அபிவ்ருத்தி யடைகின்றன. உதாரணமாக 'ஒய்ட் பட்டர்ப்ளை' என்ற ஒரு தட்டாரப் பூச்சியை எடுத்துக் கொள்வோம். இது ஒரு தடவையில் 40-முட்டைகள் இடும். இந்த 40-முட்டைகளில் பாதி ஆண் என்றும் பாதி பெண் என்றும் வைத்துக்கொள்வோம். இவைகளில் பெண் முட்டைகள் குஞ்சு பொரித்துப் பெரியனவானால், பெரியனவாகிய பூச்சிகளும் மறுபடியும் முட்டையிடும். இவைகளின் வம்சமும், முதலில் சொன்ன தட்டாரப் பூச்சி மறுபடியும் முட்டையிடுவதிலிருந்து உண்டாகும் பூச்சிகளின் வம்சமும் சேர்ந்து, 3-வர்ஷ காலத்தில் 100-கோடி தட்டாரப் பூச்சியாகும். இவைகளெல்லாம் ஒரே கூட்டமாய்ப் பறக்குமானால் உலகத்தில் மிகப்பெரியபட்டணமாகிய லண்டனையும் மறைத்து இருட்டாக்கி விடுமாம்.

காட்லிவர் ஆயில் என்று ஒரு எண்ணெயை அநேக வ்யாதியஸ்தர்கள் வாங்கி சாப்பிடுகிறார்களல்லவா? இந்த எண்ணெய் காட் என்று சொல்லப்பட்ட ஒரு மீனின் ஈரலிலிருந்து கிடைக்கிறது.

இந்த மீனின் முட்டைகள் ரொம்ப நுட்பமானவை. ஒரு தடவையில் இடும் முட்டைகள் மாத்ரம் 70-லக்ஷத்துக்கு குறையாவென்று ஒருவர் கணக்கிட்டிருக்கிறார். அவர் சொல்லுவதென்னவென்றால், ஒரு பெண் காட்மீன் தன் ஆயுள் காலமுழுவதும் இடக்கூடிய முட்டைகளெல்லாம் குஞ்சு பொரித்து மீனாகி அவையும் ஒரு தடவை மட்டும் முட்டையிட்டு அவைகளிலிருந்து மீன்களுண்டானால், அவைகளெல்லாம் தங்கி யிருப்பதற்கு இங்கிலண்டுக்கும் ப்ரான்ஸுக்கும் மத்தியிலுள்ள இங்க்லீஷ் சானல் என்னும் கடல் போதாதாம். இந்தக் கடல் 350-மைல் நீளமும் 21-முதல் 100-மைல் அகலமும் உள்ளது. ஆனால் இந்த மீன் இவ்வளவு வ்ருத்தியடையாததற்கு இரண்டொரு காரணங்கள் தடையாயிருக்கின்றன. எல்லா ஜலராசிகளும் காட்மீனின் முட்டைக் கூட்டங்களைத் தின்கின்றனவாம். அதோடு, ஆண் காட்மீனே இந்த முட்டைகளைத் தின்கின்றதாம். ஆகையால் காட்மீன் முட்டை இந்த ஆபத்துகளுக்குத் தப்பி மீனாவது ரொம்ப அரிது.

'ஹெட்ஜ் மஸ்டார்ட்' என்று ஒரு செடி கடுகு வர்க்கத்தைச் சேர்ந்தது. இது ஸாதா

ரணமாய் தரிசு நிலங்களில்தான் வளருமாம். இதனால் விவஸாயிகளுக்கு விசேஷமான கெடுதிகள் ஒன்றும் நேரிடுவதில்லை. ஆனால் இந்தச்செடி ஸ்வயேச்சையாய் வளர்ந்து அதன் விதைகள் முளைத்து செடிகளாகி அந்தச் செடிகளிலிருந்து உண்டாகும் விதைகளும், அவற்றிலிருந்து உண்டாகும் விதைகளும் முளைத்து செடிகளாகி இப்படியாக ஒன்றும் அழிந்து போகாமல் மூன்று வர்ஷகாலம் வ்ருத்தியடைந்து வருமானால், எவ்வளவு செடிகளிருக்கலாம்? இதைப்பற்றி ஒருவர் கணக்குப்போட்டுப் பார்த்ததில் ஒரு செடியிலிருந்து மூன்று வர்ஷகாலத்தில் உண்டாகும் செடிகள் அடர்த்தியாய் முளைத்திருப்பதாக வைத்துக்கொண்டால், அவைகள் இருப்பதற்கே நமது பூமியில் தரைப்பாகம் எவ்வளவு விஸ்தீரணமோ, அதைப்போல் 2,000-மடங்கு வீஸ்தீரணமுள்ள நிலம் வேண்டியிருக்கு மென்று தெரிகிறது. இவ்வளவு வேகமாய் அபிவ்ருத்தியடையும் ஒரு செடி ஏன் தரிசு நிலங்களில் மாத்ரம் ஸ்வல்பமாகக் காணப்படுகிறது? இதற்கு அநேக காரணங்களிருக்கலாம். விதைகளில் ஒரு பாகத்தை பறவைகள் தின்றுவிடுகின்றன. பெரும்பாகமான விதைகள் பூமியில் விழுந்ததும், மற்ற செடிகளால் முளைக்க முடியாமல் போய் அழிந்து போகின்றன.

கல்லுருவிகள் என்று ஒரு ஜாதிச் செடியிருக்கிறது. இதற்குப் புஷ்பங்களும் விதைகளும் கிடையா. இவைகளின்வம்சம் வ்ருத்தியாவதற்கு வேறு உபாயங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதன் இலைகளில் 'ஸ்போர்ஸ்' என்று சொல்லப்பட்ட நுட்பமான செடி மூலங்களிருக்கின்றன. விதைகளிலிருந்து ஸாதாரண செடியுண்டாவது போலவே இந்த செடி மூலங்களிலிருந்து கல்லுருவிச் செடிகள் உண்டாகின்றன. 'ஸ்போர்ஸ'—கள் இலையின் அடிப்பாகத்தில் ஒரு வித மூடியால் மூடப்பட்டு மறைந்திருக்கும். ஸ்போர்ஸ்கள் தக்கபருவம் அடைந்தவுடன் மூடி வெடித்து, அவைகள் வெளியில் சிதறிவிழும். வெகு மெதுவாய்க் காற்றடித்தபோதிலுங்கூட அந்தக் காற்றில் ஸ்போர்ஸ்கள் பறந்து நாலாவிடங்களிலும் போய்த் தங்கும். அங்கங்கே தங்கிய விடங்களில் இருந்துகொண்டு முளைப்பதற்கேற்ற வஸதிகளிருந்தால் முளைக்கும்.

ஸாதாரணமாய் கல்லுருவியில் உள்ள ஸ்போர்ஸ—களின் தொகை ரொம்ப ஏராளமானது. ஒரு கல்லுருவி ஜாதியில் ஒரு செடியில் மாத்ரம் 5-கோடி முதல் 10-கோடி வரையில் ஸ்போர்ஸ் என்னும் செடிமூலங்கள் இருக்கின்றன. அங்கியாப்டரிஸ் என்ற இன்னொரு ஜாதிச் செடியில் ஒரு இலையில் மாத்ரம் 400-கோடி ஸ்போர்ஸ் (செடிமூலங்கள்)இருக்கின்றனவாம். இந்த அங்கியாப்டரிஸ்செடியின் ஒரு இலையில் மாத்ரம் உள்ள செடிமூலங்களை முளைக்கவிட்டால், அவைகளின் செடிகள் முளைத்திருப்பதற்கு மாத்ரம் 20-லக்ஷம் ஏக்கரா நிலம் வேண்டியிருக்குமாம்.

மேலே சொன்னபடி எல்லா ஜீவராசிகளுக்குமே வம்ச வ்ருத்திக்கேற்ற அம்சங்கள் ஏராளமாயிருப்பதில்லை. தென்னை, பனை, முதலிய பெரிய மரங்களின் ஒரு வர்ஷத்து விதைகள் முன் சொன்ன செடிகளின் விதைகளைப்போல் ஏராளமாயிருப்பதில்லை யென்பது யாவருக்கும் தெரிந்தது. அந்த விதைகள் முளைத்து, செடிகள் பெரியனவாகி மறுபடி விதையுண்டாவதற்கும் அதிக காலம் வேண்டியிருக்கிறது.

ம்ருகங்களுக்குள் யானைதான் ரொம்ப தாமஸமாக வம்ச வ்ருத்தியடையும் ஜந்து. யானை முப்பதாவது வர்ஷத்துக்குப் பிறகுதான் குட்டி போட ஆரம்பிக்கிறது. மேலும் ஒரு பெண் யானை தனது ஜீவ்ய காலத்துக்குள் ஸாதாரணமாய் 6-குட்டிதான் போடுமென்று சொல்லுகிறார்கள்.

ஒரு ஆண்யானையும் ஒரு பெண் யானையும் சேர்ந்திருந்து, அவைகளும், அவைகளுக் குண்டாகும் யானைக்குட்டிகளும் மற்ற ஜீவராசிக

ளால் யாதொரு தடையுமில்லாமல் வம்சத்தை வ்ருத்தி செய்துகொண்டே போவதாயும், ஒவ்வொரு யானையும் 100-வர்ஷகாலம் உயிருடன் இருப்பதாயும் வைத்துக் கொண்டால், முதல் யானைகள் குட்டி போட்ட 740-வதுவர்ஷமுதல் 750-வது வர்ஷத்துக்குள் 1-கோடியே 90-லக்ஷம் யானைகள் இருக்குமாம். இந்த எண்ணைப்பார்த்து அநேகர் மலைக்கக்கூடும். ஆனல் இந்த எண்ணத்தனை யானைகள் வ்ருத்தியாவதற்கு, முதலில் சொன்ன ஜீவராசிகளுக்கு வேண்டியிருந்தது போல் இரண்டு, மூன்று வர்ஷங்கள் போதாமல் 750-வர்ஷங்கள் வேண்டியிருக்கிற தென்பதை கவனித்தால் இவ்வளவு மலைப்பு ஏற்படாது. இத்தனையானைகளும் தங்கியிருப்பதற்கு அதிக இடமும் வேண்டியதில்லை. ஒரு பெரிய யானை 10-அடி நீளமும் 5-அடி அகலமும் உள்ள ஓரிடத்தில் ஸௌகர்யமாய் நிற்கக்கூடும். ஒவ்வொரு யானைக்கும் இதற்கு இரண்டுமடங்கு இடம் கொடுத்தாலும் 75-சதுரமைல் விஸ்தீரணமுள்ள பூமி போதும். ரொம்ப தாமஸமாய் வம்ச வ்ருத்தியடையும் யானைக்கே இவ்வளவு பெரிய இடம் வேண்டியிருக்கும்போது 3-வர்ஷத்தில் 1-கோடியே 18-லக்ஷம் குட்டிகள் வ்ருத்தியடைந்த முயலினம் 750-வர்ஷகாலம் மற்ற ஜீவராசிகளால் தொந்தரவு அடையாமல் வ்ருத்தியடைந்தால் எத்தனை முயல்கள் இருக்கும்? அவை தங்கியிருப்பதற்கு மாத்ரம் இந்த பூமியைப்போல் ஆயிரக்கணக்கான பூமிகள் வேண்டியிருக்குமென்று தாராளமாய்ச் சொல்லலாமல்லவா?

மற்ற ஜீவராசிகளின் ஸாதாரண வம்ச வ்ருத்திக்கு பாதக மேற்படாதபடி ஒவ்வொரு ஜீவராசியின் அமிதமான வம்ச விருத்தி எப்படித் தடைப் படுகின்றது என்பதை திட்டமாய்ச் சொல்லுவதற்கில்லை. ஸாதாரணமாய் ம்ருகங்கள் வ்ருத்தியாவதற்குத், தடையாயிருப்பது போதுமான உணவு கிடைக்காமலிருப்பதே. அரை குறையாய் பட்டினி கிடக்கும் ஒரு ஜீவராசியை இன்னொரு ஜீவராசி தனக்கேற்ற உணவென்று தின்று விடுகிறது. செடி வர்க்கங்களிலோ வென்றால், எல்லா விதைகளும் முளைக்கலாமென்றால், அவைகள் தங்கி முளைப்பதற்கே இடம் போதாது. செடிகள் வளரக்கூடிய இடங்களில் ஒவ்வொரு பாகத்திலும் எத்தனையோ செடிகள் இருக்கின்றன. முளைப்பதற்கு அநேக விதைகள் பூமியினுள்ளே காத்துக் கொண்டிருக்கின்றன. ஏதாவது ஒரு செடி அழிந்து போனல் அதனடியில் கிடந்த விதைகள் போட்டி போட்டு வளர ஆரம்பித்து, ரொம்ப பலமுள்ள விதை சீக்ரம் வளர்ந்து நோய்ப்பட்ட விதையை வளர விடாமல் செய்து விடுகிறது. இதனல் அநேக விதைகளும், பெரிய செடிகளால் வளர்ச்சி தடுக்கப்பட்ட சிறு செடிகளும் முளைக்காமலும் அழிந்தும் போகின்றன. இவ்விதம் பலதடைகள் இருப்பதால் தான் ஒரு ஜீவராசியும் மற்ற ஜீவராசிகளை அழித்து விடும்படியாய் அவ்வளவு சீக்ரமாக அபிவ்ருத்தியடைய முடிவதில்லை.

## SIR SATYENDRA PRASANNA SINHA.

## ஸர் ஸத்யேந்த்ர ப்ரஸன்ன ஸின்ஹா.

கல்கத்தாவில் ப்ரபல பாரிஸ்டராயிருக்கும் ஸர் ஸத்யேந்த்ர ப்ரஸன்ன ஸின்ஹா இந்த வர்ஷத்து காங்க்ரெஸுக்கு ப்ரெஸிடென்டாக இருந்தார். அவர்தான் 1909-ம் வர்ஷத்தில் ராஜ ப்ரதிநிதியின் நிர்வாக ஸபையில் முதல் இந்திய மெம்பராக நியமிக்கப்பட்டவர். 1911-ம் வர்ஷத்தில் அந்த வேலையை ராஜிநாமா செய்து விட்டார்.

மிஸ்டர் ஸின்ஹா வங்காளத்திலுள்ள காயஸ்தா ஜாதியை சேர்ந்தவர். அவர் ஒரு பெரிய ஜமீன்தார் வம்சத்தைச் சேர்ந்தவர். இந்த வம்சத்தின் ஒரு பிரிவு வங்காளத்தைச் சேர்ந்த பீர்பம் ஜில்லாவிலுள்ள ரெய்ப்பூர் என்னும் ஊரில் வெகு காலமாகக் குடியிருந்து வருகிறது. ஸின்ஹாவின் தகப்பனர் ஸிடிகாந்த ஸின்ஹா

என்பவர். அவர் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரின் கீழ் ஸப்ஜட்ஜ் வேலை பார்த்துவந்தார். அவருக்கு ஸத்யேந்த்ரர் உள்பட நான்கு குமாரர்கள் பிறந்தார்கள். ஸத்யேந்த்ரர் கடைசிப் புத்ரர். அவர் இரண்டுவயதா யிருக்கும்போதே ஸிடிகாந்த ஸின்ஹா காலகதி யடைந்துவிட்டார். குடும்பத்தைக் காப்பாற்றவேண்டிய பாரம் ஸத்யேந்த்ரருடைய தாயாரைச் சேர்ந்ததாயிற்று. மூத்த புத்ரர் சீக்ரம் பீர்பம் ஜில்லாவில் ஸர்கார் வக்கீலாக அமர்ந்துகொண்டார். இரண்டாவது புத்ரர் குடும்ப கார்யங்களை கவனித்து வந்தார். மூன்றாவது புத்ரர் முதலில் ஸாதாரணக் கல்வி பயின்று பிறகு கல்கத்தாவில் வைத்யப் பரீக்ஷைக்குப் படிக்கலானார்.

ஸத்யேந்த்ரர் பால்யத்தில் பீர்பம் ஜில்லா கவர்ன்மெண்ட் பாடசாலையில் வாசித்து 1877-ம் வர்ஷத்தில் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறினார். அவர் பள்ளிக்கூடத்தில் வாசித்து வந்தபோது ரொம்ப புத்திசாலி யென்று பேர் வாங்கினார். மெட்ரிகுலேஷன் பரீக்ஷையிலும் தமது பள்ளிக்கூடத்தில் இரண்டாவதாகத் தேறினார்.

மெட்ரிகுலேஷன் பரீக்ஷை முடிந்ததும், ஸத்யேந்த்ரர் உயர்தரக் கல்வி கற்றுக்கொள்ள கல்கத்தாவுக்குப் போனார். அங்கே ஏற்கனவே அவருடைய அடுத்த தமையன் வைத்யத்துக்கு வாசித்துக்கொண்டிருந்தார். 1879-ம் வர்ஷத்தில் அவர் எப். ஏ. பரீக்ஷையில் தேறினார். 1880-ம் வர்ஷத்தில் அதாவது 17-வது வயஸிலேயே அவருக்குக் கல்யாணமாயிற்று.

வைத்யப் பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்த 3-வது புத்ரராகிய நரேந்த்ர ப்ரஸன்ன ஸின்ஹாவுக்கு அவர் தகப்பனார் பதினாறாயிரம் ரூபாய் வைத்துவிட்டுப்போனார். அவருக்கு மெஜாரிட்டி அதாவது சட்டப்படி வயது வந்தவுடன் அந்தத் தொகை முழுவதும் அவர் வசம் சேர்ந்தது. அதன்மேல் நரேந்த்ரனும் ஸத்யேந்த்ரனும் அந்தப் பணத்தை வைத்துக்கொண்டு இங்க்லண்டுக்குப் போவதென்று ரகஸ்யமாய்த் தீர்மானித்து, ரகஸ்யமாகவேவேண்டிய ப்ரயத்தனங்களெல்லாம் செய்துமுடித்து, 1881-ம் வர்ஷத்தில் ஒருவரிடமும் சொல்லாமல் கப்பலேறினார்கள். இந்த விஷயம் அவர்களுடைய பந்துக்களுக்கு வெகுகாலம் தெரியாமலிருந்தாலும், புறப்படுவதற்கு சற்று முன்னால் பந்துக்களுக்குத் தெரியவே, அந்த பந்துக்கள் சிறுவர்களை இங்க்லண்டுக்குப் போகாமல் தடுப்பதற்காகக் கல்கத்தாவுக்கு வந்தார்கள். ஆனால் வருவதற்கு முன்கப்பல் கல்கத்தாவைவிட்டுப் புறப்பட்டுவிட்டது. உடனே அந்த பந்துக்கள் பக்கத்திலுள்ள டையமண்ட் ஹார்பர் வரையிலும்போய் அவர்களைத் திருப்பிக்கொண்டுவர எண்ணியும், அந்த உறவினர் அந்த இடத்துக்கு வருவதற்கு ஒரு மணி முன்னாலேயே பையன்கள் ஏறியிருந்த கப்பல் அந்த இடத்தைவிட்டுப் போய்விட்டது.

இங்க்லண்டுக்குப் போய்ச்சேர்ந்ததும், ஸத்யேந்த்ரர் பாரிஸ்டர் பரீக்ஷைக்குப்படிக்க ஆரம்பித்தார். அவருக்கு ஏற்கனவே லாடின்பாஷை தெரியுமாதலால் 'ரோமன் லா' என்னும் சட்டவிஷயத்தைப் படிப்பது ஸுலபமாயிருந்தது. அவர் தமது ஸாமர்த்யத்தால் பரீக்ஷகர்களை ஸந்தோஷப்படுத்தி, அவர்களுடைய நன்மதிப்பையடைந்தார். அவருக்கு அநேக வெகுமதிகளும் உபகாரச்சம்பளங்களும் கிடைத்தன. 1886-ம் வர்ஷத்தில் அவர் பாரிஸ்டர் பரீக்ஷையில் தேறினார்.

ஸத்யேந்த்ரர் சட்டத்துக்குப் படித்ததே யல்லாமல் சில ஐரோப்பிய பாஷைகளையும் கற்றுக்கொண்டு ஐரோப்பாவிலுள்ள அநேக இடங்களுக்குப் போய்வந்தார். 1886-ம் வர்ஷம் இந்தியாவுக்குத் திரும்பிவந்து கல்கத்தா ஹைக்கோர்ட்டில் அட்வகேட்டாகச் சேர்ந்து வேலை பார்த்து வந்தார். ஆரம்பத்தில் மிஸ்டர் ஸத்யேந்த்ர ப்ரஸன்ன ஸின்ஹாவுக்கு தக்க வரும்படி

வரவில்லை. அக்காலத்தில் கல்கத்தா ஹைகோர்ட்டில் டபள்யூ. ஸி. பானர்ஜி, மனமோஹன்கோஸ், ஸர் தாராகநாத் பலித் முதலிய பல தேர்ந்த கனவான்கள் வக்கீல் உத்யோகம் செய்து வந்தார்கள். அவர்களுக்குமுன் மிஸ்டர் ஸின்ஹா ப்ரகாசித்து ரொம்ப வரும்படியடைவது முடியாமல் போயிற்று. 1894-ம் வர்ஷத்தில் ஒரு கேஸில் அவர் ஒரு அட்டர்னியை ரொம்ப ஸாமர்த்யமாகக் குறுக்கு விசாரணை செய்த போதுதான் அவருடைய கீர்த்தி பரவலாயிற்று. அதுமுதல் அவருக்கு அநேக வ்யாஜ்ய வழக்குகள் கிடைத்தன. வரும்படியும் அதிகமாக ஏற்படலாயிற்று.

1906-ம் வர்ஷத்தில் அவர் கல்கத்தா அட்வகேட் ஜெனரலாக ஆக்ட் செய்ய நியமிக்கப்பட்டார். 1908-ம் வர்ஷத்தில் அவ்வேலை காயமாயிற்று. இந்தக் காலத்தில் அவருக்கு ஏராளமான வரும்படி கிடைத்து வந்தது. இங்கிலண்டிலுள்ள வக்கீல்களுக்குக் கூட அவ்வளவு வரும்படி கிடைக்கவில்லையாம் அவர் க்ரிமினல், ஸிவில் ஆகிய இரண்டுவித கேஸ்களையும் கவனித்து வந்தார். அந்தக்காலத்தில் கல்கத்தா ஹைகோர்ட்டில் எதாவது ஒரு பெரிய வழக்கு வந்தால், அந்தவழக்கில் யாராவது ஒரு கக்ஷிக்காரர் மிஸ்டர் ஸின்ஹாவை வக்கீலாக வைத்துக் கொள்ள முன் வராமலிரார்.

மிஸ்டர் ஸின்ஹாவுக்கு தெளிவான அறிவும், விஷயங்களை எடுத்துச் சொல்வதில் ரொம்ப ஸாமர்த்யமும் உண்டு. அவர் சாக்ஷிகளைக் குறுக்கு விசாரணை செய்வதில் தேர்ந்தவர்.

முன் சொன்னபடி அவர் 1909 ம் வர்ஷத்தில் ராஜ ப்ரதிநிதி ஸபையில் சட்ட மெம்பராக நியமிக்கப்பட்டார். ஆனால் அவர் தமது உத்யோக காலமாகிய 5-வர்ஷமும் வேலை பார்க்காமல் 1½-வர்ஷகாலத்துக்குப் பிறகு வேலையை ராஜிநாமா செய்து விட்டார்.

மிஸ்டர் ஸின்ஹாவுக்கு 1915-ம் வர்ஷத்தில் ஸர் பட்டம் கிடைத்தது.

மிஸ்டர் ஸின்ஹா ஒரு காங்க்ரெஸ் அபிமானியானாலும், காங்க்ரெஸ் நடவடிக்கைகளில் கலந்து கொள்ள அவருக்குப் போதுமான ஸாவகாசம் கிடைப்பதில்லை. இதனால் அவர் காங்க்ரெஸ் மீட்டிங்குகளுக்கு அடிக்கடி போக முடியவில்லை. அவர் மிதவாதக் கக்ஷியைச் சேர்ந்தவர்.

## FACTORY LABOUR IN INDIA.

## இந்திய தொழில் சாலைகளில் கூலியாட்கள்.

சென்ற 1912-13-ம் வர்ஷத்தில் இந்தியாவில் 7,113-தொழில்சாலைகள் இருந்தன. இவைகளில் 21,05,824 வேலையாட்கள் வேலைசெய்து வந்தார்கள்.

மற்ற தொழில்களைவிட நெசவு ஸம்பந்தமான தொழில்களில்தான் அதிகவேலையாட்கள் வேலை செய்து வந்தார்கள். இந்தத் தொழில்களில் மொத்தம் 5-லக்ஷம் கூலியாட்கள் வேலைசெய்து வந்தார்கள். இவர்களுள் 2-லக்ஷம்பேர்கள் சணல் ஸம்பந்தமான தொழில்களில் அமர்ந்திருந்தார்கள்.

ஸாமான்களை ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குக் கொண்டுபோகும் தொழில்களில் 1-லக்ஷம் பேர்களிருந்தார்கள். ஆகாரம், பான வகைகள் தயார்செய்யும் தொழில்சாலைகளில் 50-ஆயிரம் வேலையாட்களும், தாதுப்பொருள்கள் ஸம்பந்தப்பட்ட தொழில்களில் 30,000-வேலையாட்களும் இருந்தார்கள். ரஸாயனப் பொருள்கள், சாயங்கள், சாயம்போடுதல் இவைகள் ஸம்பந்தப்பட்ட தொழில்களில் 20,000பேர்கள் வேலைசெய்து வந்தார்கள். இவர்களின் தொகை வரவரக் குறைந்துகொண்டே வருகிறது. இதற்குக் காரணம் மனித உதவி அதிகம் வேண்டியிராத யந்த்ரங்கள் அதிகமாக உபயோகத்துக்கு வந்திருப்பதே. கல் கண்ணாடி ஆகிய

இவைகள் தயார்செய்யும் வேலைகளிலும், கடுதாசி செய்தல், அச்சடித்தல் ஆகிய இந்த வேலைகளிலும் தனித்தனியே 20,000-பேர்களுக்குமேல் வேலைசெய்து வருகிறார்கள். இந்த எண்கள் இந்தியா முழுவதுக்குமாகும். ஒவ்வொருமாகாணத்திலும் எத்தனை தொழில்சாலை வேலையாட்கள் இருக்கிறார்களென்பது தெரியவில்லை. மேற்சொன்னபடி இந்தியாவில் அநேக தொழிலாளிகள் இருந்தபோதிலும், ஒருவர்ஷம் முழுவதும் கணக்குப் பார்க்கும்போது தினப்படி சராசரியில் 8,69,000 பேர்கள்தான் தொழில்சாலைகளில் வேலைசெய்து வருவதாகத் தெரிகிறது. இது தொழில்சாலை இன்ஸ்பெக்டர்கள் தயாரித்த கணக்காகும். இதில் வங்காளத்தில் சராசரியில் தினந்தோறும் 3,20,000-பேர்கள் தொழில்சாலைகளில் வேலைசெய்துவருகிறார்கள். பம்பாய் ராஜதானியில்சராசரியில் தினசரி 2,59,000 பேர்கள் தொழில்சாலைக்கு வருகிறார்கள். சென்னை ராஜதானியிலோ, சராசரியில் தினப்படி தொழில்சாலைக்கு வருகிறவர்களின் தொகை 65,000-தான். மற்ற மாகாணங்களில் தினசரி வேலைக்கு வரும் ஆட்களின்தொகை பின்வருமாறு:—ஐக்ய மாகாணத்தில் 54,000; பர்மாவில் 50,000; மத்ய மாகாணத்தில் 47,000; பஞ்சாப்பில் 32,000.

மேலே குறித்த கணக்குகள் சரியானவையென்று சொல்லக்கூடாது. இந்தியாவில் ஜனஸங்க்யைக் கணக்கிடும்போது ஜனங்களுடைய தொழிலின்னதென்று குறிப்பிட்டிருப்பதைக் கொண்டு, இன்ன தொழில்களில் இத்தனை பேர்கள் அமர்ந்திருக்கிறார்களென்று தீர்மானமாய்ச் சொல்வது கஷ்டமாயிருக்கிறது. இதற்குக் காரணங்கள் பின்வருமாறு:—

(1) அநேக ஜனங்கள் ஒரு வர்ஷத்திலேயே பருவகாலத்துக்குத் தகுந்தபடி தங்கள் ஜீவன மார்க்கத்தை மாற்றிக்கொள்ளுகிறார்கள். உதாரணமாக ஒரு ஆள் ஒரு மாஸம் வயல்களில் வேலை செய்யும் விவஸாயக் கூலியாளாகவும், இன்னொரு மாஸத்தில் மண்வெட்டிக் கொட்டுபவனாகவும், வேறு மாஸங்களில் குயவனாகவும், உப்புக் காய்ச்சுகிறவனாகவும் நெல் குத்துகிறவனாகவும், பல்லக்குத் தூக்குகிறவனாகவும், இருக்கக்கூடும். ஜனக் கணக்கெடுக்கிறவர்கள் அவனை எந்தத் தொழிலைச் சேர்ந்தவனாக எண்ணுவார்களென்பது, எந்தக்காலத்தில் அதாவது என்ன வேலையிலமர்ந்திருக்கும்போது கணக்கெடுக்கிறார்களென்பதைப் பொறுத்திருக்கும்.

(2) சிலர் ஒரே காலத்தில் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாத பல தொழில்களை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இதனால் ஜனக் கணக்கெடுக்கும்போது, அவர்கள் தாங்கள் இன்ன தொழில்களில் அமர்ந்திருக்கிறார்களென்பதை வ்யக்தமாய்ச் சொல்லமுடிவதில்லை.

(3) சிலருடைய தொழில்கள் ஒன்றுக்கொன்று நெருங்கிய ஸம்பந்தமுள்ளனவாக இருக்கின்றன. உதாரணமாக சில இடங்களில் ஜனங்கள் லேவாதேவித் தொழிலோடு தான்ய விற்பனையையும் வைத்துக்கொள்ளுகிறார்கள். இந்த இரண்டு தொழில்களும் ஒரே தொழிலின் பாகங்களாக இருப்பதுண்டு. இவற்றுள் எந்தத் தொழில் செய்வதாக கணக்கில் போட்டுக் கொள்வதென்பதில் ஸந்தேகமுண்டாகலாம்.

(4) சில ஜனங்கள் உண்மையில் வேறு தொழில் செய்து வந்தபோதிலும் தங்களுடைய ஜாதித் தொழிலை செய்து வருவதாகத் தெரிவிக்கிறார்கள். உதாரணமாக பரியாரி ஜாதியைச் சேர்ந்த ஒருவன் விவஸாயம் முதலிய வேறு தொழில் செய்து வந்தபோதிலும், என்ன தொழில் என்று கேட்டால், பரியாரித் தொழில் என்று சொல்லுவதுண்டு. இங்க்லண்டு, முதலிய ஐரோப்பிய நாடுகளிலும் தொழில் கணக்கு எடுப்பதில் இந்தக் கஷ்டமிருக்கிறதென்று தெரிகிறது.

## REDEMPTION OF PRIOR DEBTS.
## பழைய கடன்களை அடைத்தல்.

நிலஸ்வான்கள் பெருந் தொகைகளைக் கடன் வாங்கி, வெகுகாலம் அவைகளைத் திருப்பிச் செலுத்தாமல் மேன்மேலும் கடனை அதிகரித்துக்கொண்டு வருவதை உத்தேசித்து, அவர்கள் சீக்ரம் அந்தக் கடன்களை எப்படி அடைக்கும்படி செய்கிற தென்பதைப்பற்றி கோவாபரேஷன் அபிமானிகள் பலர் ஆலோசனை செய்து வருகிறார்கள். வடக்கே மத்ய மாகாணங்களில் உள்ள நிலஸ்வான்கள் ஏராளமாய்க் கடன் பட்டு அடைக்க முடியாமல் திண்டாடி வருகிறார்கள். இப்போதுள்ள மாதிரியில் கோவாபா ரேஷனால் அவர்களுக்கு அதிக ஸௌகர்யம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. அவர்களுடைய நிலைமையை உயர்த்த ஏதாவது ஒரு வழி செய்யாவிட்டால், கோவாபரெடிவ் முயற்சி கடைத் தேறுவதற்கே பாதகமாய் முடியுமென்று சிலர் எண்ணி இது விஷயமாய் ஆலோசித்து வந்தார்கள்.

இது விஷயமாக அந்த மாகாணங்களின் ரெஜிஸ்ட்ராராகிய மிஸ்டர் க்ராஸ்த்வெய்ட் என்பவர் ஒரு ஸ்கீம் (ஏற்பாடு) தயார் செய்திருக்கிறார். அதை இங்கு விவரிக்கிறோம்.

மத்ய மாகாணங்களில் நிலஸ்வான்கள் கடன் விஷயமாய் கஷ்டப்படுவதற்கு இரண்டு காரணங்களிருக்கின்றன. நிலஸ்வான்கள் கடன் வாங்கத் தங்கள் நிலங்களை பெந்தகம் வைத்தால், பெந்தக் காரர்களில் சிலர் அந்த நிலங்களை எப்படியாவது தாங்கள் அடைய வேண்டுமென்று எண்ணி, அந்த எண்ணத்திற் கேற்ப, க்ருத்ரமங்கள் செய்வதோடு, கடன் வஸூல் செய்வது விஷயத்தில் ரொம்ப கடுமையாக இருக்கிறார்கள். வேறு சிலர் நிலங்களை அபேக்ஷிக்கிறதில்லை. பணந்தான் அவர்களுக்கு முக்யமாயிருக்கிறது. கொடுத்த கடன் திரும்பி வருவது கஷ்டமென்று எண்ணி அவர்கள் ரொம்ப வட்டி கேட்கிறார்கள்.

இவைகளை உத்தேசித்து, சிறு நிலஸ்வான்களைச் சேர்த்து ஒரு கோவாப்ரெடிவ் ஸங்கம் ஏற்படுத்துவது ரொம்ப ச்லாக்யமாகும். இந்த ஸங்கத்தின் லேவாதேவித் தொழிலை இரண்டு பிரிவாகப் பிரிக்கவேண்டும். (1) நபர் ஜாமீன் பேரில் ஸ்வல்பகாலத்தவணை ஏற்படுத்திக் கடன் கொடுத்தல். (2) ஸொத்து, நபர் ஆகிய இரண்டு ஜாமீன்கள் பேரில் நீண்டகாலத் தவணை ஏற்படுத்திக் கடன் கொடுத்தல். கால் நடைகள், விதைகள் முதலியவைகளை வாங்கக் கொடுக்கும் கடன்கள் அதாவது போட்ட பணத்தை சீக்ரம் (ஒரு வர்ஷத்திலேயே) எடுக்கக்கூடிய விவஸாயத் தொழிலுக்குக் கொடுக்கும் கடன்களெல்லாம் முதல் வகுப்பைச் சேர்ந்தனவாயிருக்க வேண்டும். எந்தத் தொழிலில் போடும் முதலைக்கொண்டு சீக்ரம் பணமெடுத்து கடனையடைக்க முடியாதோ அதற்கு நீண்டகாலத் தவணைக் கடன்கள் கொடுக்கவேண்டும்.

தற்போது உள்ள கோவாபரேஷன் ஏற்பாட்டில் ஒரு நிலஸ்வான், அந்தந்த வர்ஷத்துச் செலவுக்காக வன்றி, வேறு பெரிய செலவுகளுக்காக நிலத்தை பெந்தகம் வைத்து ஸென்ட்ரல் பாங்கிலிருந்து கடன் வாங்கினால், அதை அவன் 3-வர்ஷத்துக்குள் அடைத்துவிட வேண்டியிருக்கிறது. ஆனால் அவனால் உண்மையில் அடைக்க முடிவதில்லை. அதற்காக அவன் கடனைத் திருப்ப வேண்டிய காலம் வந்தவுடன் புதிதாக ஒரு கடன் வாங்கி பழைய கடனை அடைக்கிறான். இப்படி ஒவ்வொரு தடவையும் செய்வதால் முதலோடு வட்டியும் சேர்ந்து கடன் அதிகமாகிறது.

இதற்கு மிஸ்டர் க்ராஸ்த் வெய்ட் பின்வரும் ஏற்பாட்டைத் தெரிவிக்கிறார். நிலஸ்வான்கள் கடனை 3-வர்ஷத்துக்குள் அடைக்கமுடியாததலால், அவனுக்கு 16-வர்ஷகாலம் தவணைகொடுக்கவேண்டும். அதோடு ஒவ்வொரு வர்ஷமும் நிலஸ்வான் வட்டிப்பணத்தோடு முதலில் ஒருபாகத்தைச் செலுத்தவேண்டும். இப்படி வட்டியையும் முதலில் ஒருபாகத்தையும் செலுத்துவதால்

16-வர்ஷகாலத்துக்குள் கடனின் அஸல் அடைபட்டுப்போகிறது.

நிலத்தின்மேல் 100-ரூபாய் கடன்கொடுத்தால், அதைவாங்கும் நிலஸ்வான் ஒவ்வொரு வர்ஷமும் ரூ. 15-4-0 வீதம் 16-வர்ஷம் செலுத்தக் கடமைப்படுகிறார். அவர் தற்போது நூற்றுக்கு 12-ரூபா வீதம் வட்டிசெலுத்தி வருவதால் இந்த 3-4-0 அதிகமாகச் செலுத்துவது கஷ்டமல்ல. மேலும் இப்படிச் செலுத்துவதால் அஸல் கடன் தீர்ந்துபோவதை உத்தேசித்து இந்த ஏற்பாடு ஸௌகர்யமானதே. ஆனால் இந்த ரூ. 3-4-0 மட்டும்தான் அஸலுக்கு செல்லாகிறதில்லை. ஏனென்றால் நிலஸ்வான் செலுத்தும் ரூ. 15-4-0 யில், கடனுக்கு ஏற்பட்ட வட்டித்தொகை ரூ. 6-0-0; கடன்களை வாங்கிக்கொடுக்க ஏற்பாடு செய்யும் கோவாபரெடிவ் பாங்கிகளுக்கு ரூ. 3-0-0; அஸல் கடனைத் தீர்க்க வர்ஷாவர்ஷம் கொடுக்கும் தொகை ரூ. 6-4-0. அஸலுக்காக வர்ஷந்தோறும்ரூ. 6-4-0 கொடுப்பதால் 16-வர்ஷத்தில் செலுத்திய தொகை, 16 × 6-4-0 = 100 ரூபாயாகிறது. இந்த ஏற்பாட்டின்படி நிலஸ்வான்கள் அதிக ச்ரமமின்றிக் கடன்களைத் தீர்த்துவிடலாம். இந்த ஏற்பாடு மத்ய மாகாணங்களிலுள்ள அகோலா பட்டணத்தில் த்ருப்திகரமாய் நடந்துவருகிறதாம்.

## HINTS ON SCHOOL GARDENS.

## பாடசாலைத் தோட்டங்களைப்பற்றி சில குறிப்புகள்.

தற்காலம் பாடசாலைகளில் அதிகமாய் கவனிக்கப்பட்டு வருபவைகளுள் ஒன்று பாடசாலைத் தோட்டமாகும். மாணுக்கர்களுக்கு மனப்பயிற்சி கொடுப்பதுமட்டும் போதாது, கைப்பழக்கப் பயிற்சியும் கொடுக்கவேண்டிய தவச்யமென்றெண்ணியே இந்தப் புது அம்சம் பாடசாலையில் சேர்க்கப்பட்டது. கைப்பழக்கப் பயிற்சி என்றால் தச்சுவேலை நெசவு முதலிய தொழிலில் பயிற்சியென்றர்த்தமல்ல. பாடங்களில் ஸம்பந்தப்பட்டுவரும் அநேகவிஷயங்களை அனுபவபூர்வமாகச் செய்து பார்த்து, அந்தந்த விஷயங்களை அறிந்துகொள்வதே கைப்பழக்கப் பயிற்சியின் நோக்கமாகும். தற்போது பள்ளிக்கூடங்களில் ப்ரஸித்தமாயிருந்துவரும் இயற்கைப்பாடத்துக்கும், வேறு பாடங்களில் வரும் விவஸாய ஸம்பந்தமான பாடங்களுக்கும் இந்தப் பாடசாலைதோட்டம் இன்றியமையாததாகும். முன்பு பள்ளிக்கூடத்துப் பையன்கள் புஸ்தகங்களில் சொல்லியிருப்பவற்றை குருட்டுப்பாடம் செய்தும், அவரவர்களுக்குத் தோன்றியபடி மனோபாவம் செய்தும் வந்தார்கள். இப்போதோ அவர்கள் பொருள்களை நேரில் கண்டு, அவைகளைப்பற்றி ஆராய்ச்சிசெய்து விஷயத்தை மனஸில் நன்றாய் க்ரஹித்துக்கொள்கிறார்கள். இது சிற்சில ஸமயங்களில் ஸாத்யப்படாவிட்டால் கற்கவேண்டிய பொருள்களின் மாதிரி செய்யப்பட்ட உருவங்களையும் படங்களையும் பார்த்து அறிந்துகொள்கிறார்கள்.

இயற்கைப் பாடத்தில் தாவர சாஸ்த்ர ஸம்பந்தமான விஷயங்களையெல்லாம் தோட்டத்தில் செடி கொடிகளைப் பயிர்செய்து அவைகளைக் கவனித்து வருவதால் நன்றாய்க் கற்றுக்கொள்ளலாம். இதுவே சரியான முறையாகும். பாடசாலைத்தோட்டம் அமைப்பதில் இந்த நோக்கத்துக்குத் தக்கவாறு அமைப்பதோடு, சிறுவர்களுக்கு செடி கொடிகளின்மேல் விருப்பமும், தோட்டவேலை செய்வதில் ஆவலும் ஏற்படும்படிக்கு அவைகளை அமைத்து வேலை செய்துவர வேண்டும்.

எல்லாருக்கும் பார்வைக்கு லக்ஷணமான புஷ்பங்களின்மேலும் வாஸனையுள்ள புஷ்பங்களின் மேலும் அதிக ப்ரியம் உண்டு. எந்தத் தோட்டத்திலும் புஷ்பச் செடிகளை வ்ருத்தி செய்ய வேண்டியது அவச்யமாகும். இங்கே புஷ்பச் செடிகள் பயிரிடுவதைப் பற்றி எழுதுகிறோம்.

தோட்டம் அமைக்க வேண்டிய இடம்.—செடிகள் நன்ருய் வளர்ந்து புஷ்பிப்பதற்கும் காய் பழம் முதலிய வேறு பலன்களைக் கொடுப்பதற்கும், அவைகளை நல்ல வெளிச்சமும், நல்ல பூஸாரமும் உள்ள நிலத்தில் வளர்க்கவேண்டியது அவச்யமாகும். பாடசாலைக் கட்டிடத்துக் குள்ளேயே விசாலமான இடம் போதுமான அளவு இல்லாவிட்டால், பள்ளிக்கூடத்துக்கு அருகாமையிலுள்ள இடங்களில் தோட்டத்தை அமைக்கவேண்டும். அந்த இடத்தைத் தெரிந்தெடுப்பதில் மண் நன்ருயிருக்கிறதா என்று பார்க்கவேண்டும். வண்டல் மண்ணுயிருந்தால் ரொம்ப ச்லாக்யமானது. மணல் கலந்த நிலமாயிருந்தால் அதற்கு சாணி யெரு அதிகம் போடவேண்டியிருக்கும். நிலம் நீர்த்தேக்கமுள்ளதாய் இருக்கக்கூடாது. மழை பெய்தால் ஜலம் நன்ருய் வடியக்கூடியதா யிருக்கவேண்டும்.

புஷ்பச் செடிகள் நிழலான இடங்களில் செழித்து வளருவதில்லை. ஆகையால் பெரிய மரங்கள் பக்கத்திலில்லாத இடங்களை தோட்டம் அமைக்கத் தெரிந்தெடுக்க வேண்டும். அதோடு, தோட்டத்துப் பக்கத்தில் ஜல வஸதி யிருக்கிறதா என்று கவனிக்க வேண்டும். கிணறுகளிலிருந்து ஜலம் எடுத்துச் செடிகளுக்கு விடுவதாயிருந்தால், கிணற்றுக்குப் பக்கத்தில் ஒரு பெரிய தொட்டி கட்டி வேலையாட்களைக் கொண்டு கிணற்றிலிருந்து ஜலமிறைத்து தொட்டியில் நிரப்பி வைக்க வேண்டியது அவச்யமாகும். தொட்டியிலிருந்து சிறு பிள்ளைகள் அபாயமின்றியும் ஸுலபமாயும் ஜலமெடுத்து ஊற்றும்படிக்கு தொட்டியைத் தாழ்வாயும் அதிக ஆழமின்றியும் அமைக்க வேண்டும்.

பாத்தி கட்டுவது.—தோட்டம் எவ்வளவு விஸ்தீரணமுள்ளதாயிருக்கவேண்டுமென்பது பாடசாலையில் எத்தனை பிள்ளைகள் இருக்கிருர்களென்பதைப் பொறுத்தது. பிள்ளைகள் எத்தனை பெயர்கள் இருக்கிருர்களோ அதற்குத் தகுந்தபடி தோட்டம் விசாலமாயிருக்க வேண்டும். பள்ளிக்கூடம் நாளுக்கு நாள் வ்ருத்தியடையக் கூடுமென்று தோன்றினுல், தோட்டத்தின் விஸ்தீரணம் தற்போது வேண்டிய விஸ்தீரணத்தை விட அதிகமாயிருக்கவேண்டும். ஸாதாரணமாய் ஒரு பையனுக்கு ஒரு பாத்தி கொடுப்பது நல்லது. பாத்தி கட்டுவதற்கு முன் தோட்டத்தை அளக்க வேண்டும். பிறகு இடையிடையே வரப்புகள் விட்டு பாத்திகளாய்ப் பிரிக்க வேண்டும். ஸாதாரணமாய் ஒரு பாத்தி 8-அடி நீளமும் 4-அடி அகலமும் இருந்தால்போதுமானது. இது போதுமான அளவு விசாலமாயிருப்பதால் ஒவ்வொரு பையனும் அநேக செடிகளைப் பயிரிடலாம். பாத்தியின் நீளப்பக்கங்களில் வரப்பு கட்டினுல் அந்த வரப்புகளிலிருந்துகொண்டு, பாத்திக்குள் அனுவச்யமாய் இறங்காமலே, வேண்டிய வேலைகளைச் செய்யலாம். பாத்திகளைக் கொத்திப் பண்படுத்துவதற்கு முந்தியே வரப்புகளை அமைத்து விடவேண்டும். வரப்புகள் ஸாதாரணமாய் 1-அடி முதல் $1\frac{1}{2}$-அடி அகலமிருக்கலாம். அவை பாத்திகளைவிட மூன்று நான்கு அங்குலம் உயர்ந்திருக்க வேண்டும். அவைகளை யமைக்கும்போது உடைந்த செங்கல், ஓட்டாஞ் செல்லி முதலியவைகளைப் போட்டு, கெட்டித்து, மேலே மண்ணைக் கொட்டிப் பரப்பி விடுவது நல்லது.

பாத்திகளைப் பண்படுத்துவது.—பாத்திகளைத் தக்கவிதமாகப் பண்படுத்த வேண்டியது ரொம்ப அவச்யமானது. சரியாகக் கொத்திவாங்கிக் களைகளையும் கல்களையும் எடுத்தெறியாவிட்டால், புஷ்பச்செடிகள் ஓங்கி வளரமாட்டா. தோட்டம் ஏற்கனவே பயிர் செய்யப்பட்டு வந்திருந்தால், நிலத்தை அதிகமாகக் கொத்தவேண்டியதில்லை. 9-அங்குல ஆழம் கொத்திவிட்டு நிலத்திலுள்ள களைகள், வேர்கள், செங்கல், கற்கள் முதலியவைகளை அப்புறப்படுத்தினுல் போதும். தரிசு நிலமாயிருந்தால் பூமியை $1\frac{1}{2}$-அடி ஆழம் கொத்தி

விட வேண்டும். இவ்வளவு ஆழம் கொத்திவிட பையன்களுக்கு முடியாதாகையால், வேலையாட்களைக்கொண்டு இந்த வேலைகளைச் செய்து கொள்ளலாம். நிலம் ஸமனுயில்லாமல் மேடு பள்ளமாயிருந்தால் மேடான இடத்திலிருந்து மண்ணை யெடுத்துப் பள்ளத்தில் சொட்டி ஸமனுக்கவேண்டும். இந்தக் கஷ்டமான வேலைகளைப் பிள்ளைகள் செய்யாமலிருந்தாலும், அவர்களை உபாத்யாயர்கள் வேலை நடக்கும்போது கூட்டிவந்து அந்தந்த வேலைகளைச் செய்யவேண்டியதன் காரணத்தைக் கற்பித்துவரவேண்டும்.

நிலத்தைக் கொத்தி விடுவதற்குக் கோடை காலமே ஏற்றது. நிலத்தை ஒருதரம் கொத்தி கட்டிகளை உடைக்காமல் அப்படியே போட்டு காற்றுடவிடவேண்டும். பிற்பாடு மழைப் பருவத்தில் மழைபெய்தவுடன் மண் நன்றாய் இளகி புலபுலத்திருக்கும். கடைசியாக நிலத்தைப் பண்படுத்துவதும் ஸுலபமாகும்.

**எருவிடுதல்.**—நிலத்துக்கு நன்றாய் எருவிடாவிட்டால் நல்லபலன் ஏற்படாது. நிலத்தின் தன்மைக் கேற்றபடி அதிகமாயோ குறைவாயோ எருவிட்டு வரவேண்டும். ஸாதாரணமாய் எல்லா நிலங்களுக்கும் இடக்கூடிய எரு நன்றாய் மட்கின சாணியாகும். சாணியை ஸுமார் 6-மாஸம் முதல் 1-வர்ஷம் வரையில் குவியலாகப் போட்டிருந்து மக்கவிட்டிருக்க வேண்டும். களிமண்நிலத்தில் மட்கின தழை யெருவை உபயோகிக்கலாம். இந்த எருவானது மண்ணைப் புலபுலப்பாக்கி செடியின் வேர்கள் பூமிக்குள் நன்றாய்ப் பரவுவதற்கு ஸாதகமாயிருக்கிறது. புதிய சாணியை ஒருபோதும் உபயோகிக்கக் கூடாது. கூடுமானல் அநேக புஷ்பச்செடிகளுக்கு எலும்புத்தூளை உபயோகிக்கலாம். இதை ஸ்வல்ப அளவில் உபயோகித்தால் போதும். நாற்றுகளை நடும்போது, எலும்புத்தூளை மண்ணுடன் நன்றாய் கலந்து உபயோகிக்கவேண்டும். மாடு, குதிரை இவைகளின் எருவை, நிலத்தைக் கடைசித்தடவையாகப் பண்படுத்தும்போது நாற்றுகளை நடுவதற்கு சிலநாள்கள் முன்னதாக நிலத்தில் கொட்டி, மண்ணேடு நன்றாய்க் கலக்கவேண்டும்.

எவ்வளவு எரு உபயோகிக்க வேண்டுமென்பது அந்தந்த நிலத்தின் தன்மைக் கேற்றவாறு வித்யாஸப்படும். ஸாதாரண வளப்பமுள்ள நிலங்களுக்கு நிலத்தில்மேல் கொட்டிப் பரப்பினல் 2-அல்லது மூன்றங்குலம் கனமிருக்கும்படியான அளவுக்கு எருகொட்டவேண்டும். இந்த எருவை மண்ணேடு நன்றாய்க் கலக்கும்படி செய்ய வேண்டும்.

**பாத்திகள்.**—பாத்திகளைப் பிரிக்கும் வேலையைப் பையன்களே செய்யவேண்டும். பாத்திகளை சரியான அளவுள்ளவைகளாகப் பிரிக்க அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கவேண்டும். பாத்திகளை அளப்பதற்கு அடி, அங்குலம் காட்டியுள்ள ஒரு கழி அல்லது சட்டம்வைத்துக் கொள்ள வேண்டியது அவச்யமாகும். பாத்திகளைப் பிரித்து வரப்பு கட்டியானபிறகு, ஒவ்வொரு பாத்தியிலும் ஒரு கெட்டியான கழியை நிறுத்தி அதில் ஒரு எண் குறிப்பிட்டு பாத்திகளை ஒவ்வொரு பையனுக்கும் ஒரு பாத்திவீதம் விடவேண்டும். இப்படிச் செய்தால் அந்தந்தப் பாத்தியின் பொறுப்பை அந்தந்தப்பையன் வகித்துக்கொள்வான். இரண்டு மூன்று பையன்களுக்கு ஒரு பாத்தியாக விடாமல் ஒவ்வொரு பையனுக்கும் ஒரு பாத்தி விடுவதுதான் நல்லது.

**விதைகளை விதைத்தல்.**—விதைகளை நாற்று விடுவதற்கு பூந்தொட்டியோ அல்லது ஆழமில்லாத மரப்பெட்டியோதான் ஏற்றது. இவைகளின் அடியில் செங்கல் துண்டுகள், கரிக்கட்டைகள், உடைந்த தொட்டியின் துண்டுகள் ஆகிய இவைகளைப்போட்டு அதன்மேல் மண்ணையாவது மட்கின தழையெருவையாவது போட்டு, நயமான மண்ணைப் போட்டுப் பரப்பி ஸமமாகச் செய்யவேண்டும். மண்ணை ஸமனுகச் செய்வ

தற்கு கையால் அமிழ்த்தக்கூடாது. செங்கல் போன்ற உருவமுள்ள கட்டையால் அமிழ்த்தி ஸமமாக்கவேண்டும். மண் உலர்ந்திருந்தால் அதற்கு ஜலம் விடவேண்டும். ஜலம் நன்றாய் ஊறிவிட்ட பிறகு மண்ணின்மேல் விதைகளைத் தெளிக்கவேண்டும். விதைகள் ஓரிடத்தில் நெருக்கமாயும் இன்னோரிடத்தில் ரொம்ப ஸ்வல்பமாயுமில்லாமல், ஒரே சீராக விழும்படி விதைக்கவேண்டும்.

விதைகள் முளைத்து நாற்றுகள் ஸமமாராக வளர்ந்த பிறகு அவைகளைப் பிடுங்கிப் பாத்திகளில் நடவேண்டி யிருப்பதால், விதைகள் நெருக்கமாய் விழுந்திருந்தால், நாற்றுகளைப் பிடுங்குவது ச்ரமமாயிருப்பதோடு, நாற்றுகள் கெடுதியடையக்கூடும். மேலும் நெருக்கமாய்த் தெளித்தால், நாற்றுகள் செழித்து வளராமல் போகும். விதைகளை விதைத்த பிறகு, அவைகளின்மேல் பொடியான மண்ணைத் தூவி மூடவேண்டும். சிலவிதைகளை மண்ணுக்குள் ரொம்ப ஆழத்தில் புதைந்துபோகும்படி விடக்கூடாது. வேறு சில விதைகளை சற்று ஆழமாகவே விதைக்கவேண்டி யிருக்கும். அந்தந்த வகை விதைகளுக்கேற்றவாறு வேண்டிய அளவு மண் மேலே தூவுவது நல்லது.

சில ஜாதி விதைகளை தொட்டிகளிலும் பெட்டிகளிலும் விதைக்காமல் பாத்திகளிலேயே விதைக்கலாம். அப்படிச் செய்யும்போது, பாத்திகளில் உள்ள மேல் மண்ணை ரொம்ப நயமாகச் செய்வதோடு, தொட்டிகளில் விதைப்பதற்கு சொன்ன மற்ற விஷயங்களையும் சரிவர கவனிக்க வேண்டும்.

பாத்திகளில் விதைகளைத் தெளிப்பதில், செடிகள் பார்வைக்கு அலங்காரமாயிருக்கும்படிக்கும், பற்பல வர்ணமுள்ள புஷ்பங்கள் அலங்காரமும், மனோ உத்ஸாகமும் கொடுக்கும்படி தக்க இடத்தில் இருக்கும்படிக்கும், அந்தந்த ஜாதிச் செடிகளின் விதைகளை அவைகளுக்குத் தகுதியான இடங்களில் விதைக்கவேண்டும்.

விதைகளைத் தெளித்தபிறகு, விதைகளின் பெயரையும், விதைத்த தேதியையும் ஒரு கடுதாசியில் குறித்து வைத்துக்கொள்ளவேண்டும்.

**நாற்றுப் பிடுங்கி நடுதல்.**—தொட்டிகளிலும் பெட்டிகளிலும் விதைத்த விதைகள் முளைத்து வளர்ந்தபிறகு, பிடுங்கி நடக்கூடிய பருவம் வந்தவுடன் அவைகளைப் பிடுங்கி பாத்திகளில் நடவேண்டும். கூர்மையாயில்லாத முனையுள்ள குச்சியால் நாற்றைச் சுற்றிக்குத்தி, நாற்றை வெளியிலுயர்த்தவேண்டும். நாற்றை வெளியிலெடுக்கும்போது வேர்கள் கெடுதலடையாதபடி பார்த்துக்கொள்ளவேண்டியது அவசியமாகும். வேர்களோடு மண்ணும் கொஞ்சமிருக்கும்படி நாற்றுகளைப்பிடுங்குவது நல்லது. நாற்றுகளைப் பாத்தியில் நடுமுன், பாத்திக்கு ஜலம் பாய்ச்சவேண்டும். நாற்றுகளை ரொம்ப அடர்த்தியாய் நடக்கூடாது. நாற்றுகள் வளர்ந்து பெரியவையானபோது மற்ற செடிகளுடன் உரசிக்கொள்ளாதபடிக்குத் தக்க தூரத்தில் நடவேண்டும். ஒரு செடிக்கும் இன்னொரு செடிக்கும் எவ்வளவு தூரம் இருக்கவேண்டுமென்பது அந்தச் செடியின் இலைகள் எவ்வளவு தூரம் பரவியிருக்கும் என்பதைப்பொறுத்ததாகும்.

தொட்டிகளில் நாற்றுவிடாமல் பாத்தியிலேயே விதை தெளித்திருந்தால் நாற்றுகள் சில ஸமயம் நெருக்கமாயிருக்குமாதலால், அவைகளுள் சிலவற்றை பரவலாக விட்டுவிட்டு மற்ற செடிகளைப் பிடுங்கிவிட வேண்டியிருக்கும். தொட்டிகளில் விதைத்த விதைகள் நாற்றுப் பிடுங்குமுன் ரொம்ப நெருக்கமாய் முளைத்தால், அவைகளுள் சிலவற்றைப் பிடுங்கி எறியவேண்டும். இல்லாவிட்டால் நாற்றுகள் நன்றாய்வளரா.

**நீர் பாய்ச்சுதல்.**—நாற்றுகளைப் பாத்திகளில் நட்டவுடன் அவைகளுக்கு ஜலம் விடவேண்டியது அவசியமாகும். முதலில் மண் ஈரமாயிருப்

பதற்கு எவ்வளவு ஜலம் விடவேண்டுமோ அவ்வளவு ஜலந்தான் விடவேண்டும். செடி நன்றாய் வளர்ந்து வரும்போது அதிகமாக வார்க்கலாம். செடிகளுக்கு ஜலம்விட பிற்பகலாவது மாலை நேரமாவது ஏற்றது. பாத்திகளில் ஜலத்தைப் பாய்ச்சினால், ஜலம் அதிகமாகத் தேங்கி, மண்ணில் காற்றில்லாதபடிசெய்துவிடும். ஜலம் ஊற்றுவதற்கென்று தகரத்தால்செய்த பாத்ரத்தில் ஜலத்தை எடுத்து, அந்தப் பாத்ரத்தில் அமைத்திருக்கும் குழாய் வழியாக மழைவர்ஷிப்பது போல் விடவேண்டும். அடிக்கடி மண்ணைக் கிளறிவிட்டுக் கொண்டிருக்கவேண்டும்.

போதுக் குறிப்புகள்.—தோட்டம் எப்போதும் பார்வைக்கு லக்ஷணமாக இருக்கவேண்டும். அடிக்கடி களைகளைப் பிடுங்குவதோடு, குப்பை செத்தைகளையும், மண் குவியல்களையும் அப்புறப்படுத்தவேண்டும். களைக்கொட்டு, மண்வெட்டி, ஜலம் வார்க்கும் தகரம் முதலிய தோட்ட ஸாமான்களை தோட்டத்தில் கண்டவிடத்தில் போட்டுவைக்கக்கூடாது.

உயரமாய் வளரும் செடிகள் காற்றில் ஆடி சாயாமலிருக்கவும், படரும் கொடிகளும், தாவும் கொடிகளும் ஸ்வலபமாகப் படரவும் கெட்டியான குச்சிகளை அவைகளுக்குப் பக்கத்தில் நன்றாய் நட்டுவைக்கவேண்டும்.

நத்தை முதலியவைகள் தோட்டத்தில் தோன்றினால், அவைகளை விடியற்காலையிலும், ஸாயந்திர நேரத்திலும், பிடித்து அப்புறப்படுத்தலாம். கரையான்களின் உபத்ரவம் ஏற்பட்டால், பினைல் என்னும் மருந்தை கொஞ்சமாக ஜலத்தில் கரைத்து கரையான் உள்ள இடத்தில் ஜலம் விடும் தகரத்தால் தெளித்தால், கரையான்களின் உபத்ரவம் நீங்கும். ஜலம் வெண்மையாவதற்கு எவ்வளவு மருந்து வேண்டுமோ அவ்வளவு மருந்தை ஜலத்தில் கலந்தால் போதும். வேறு பூச்சிகள் செடிகளில் தோன்றினால் புகையிலையை நயமான தூளாக்கி பனிபெய்திருக்கும் போது செடிகளின் மேல் தூவுவது நல்லது.

## ALEXANDER THE GREAT AND A ROBBER.

BY S. R. ANANTA NARAYANA AIYAR.

## அலெக்ஸாந்தரும் ஒரு கள்வனும்.

### ஒரு ஸம்பாஷணை.

**இடம்.** மகா அலெக்ஸாந்தர் இறங்கியிருந்த ஒரு பாளையம்.

**அலெக்ஸாந்தர்.** ஓஹோ, நீதானா அந்த த்ரேஷ்யாக்கள்ளன்? (திரேஷ்யா என்பது பால்கன் தீபகல்பத்திலுள்ள ஒரு ப்ரதேசத்தின் பெயர்). நான் உன்னுடைய ப்ரதாபமெல்லாம் கேட்டிருக்கிறேன்!

**கள்வன்.** ஆம், நான் த்ரேஸியன்தான். நான் ஒரு போர்வீரன், கள்ளனல்ல!

**அ.** போர்வீரன்! நாய்க்குப் பெயர் முத்துமாலையாம்! நீ திருடன், கொள்ளைக்காரன், கொலைபாதகன், நாட்டையழித்தவன்! நீயோ போர்வீரன்! உனது தைர்யம் மெச்சத்தகுந்ததுதான். ஆனால் நீ செய்த அக்ரமங்களை யுத்தேசித்து உன்னை வெறுத்து தண்டிக்கக் கடமைப்பட்டவன், நான்.

**க.** தாங்கள் குறை கூறும்படி நான் என்ன செய்துவிட்டேன்?

**அ.** நீ என்னுடைய அதிகாரத்தை மீறி நடக்கவில்லையா? எனது ஜனங்களுக்கு பயத்தையுண்டுபண்ணவில்லையா? உன்னைப்போன்ற மற்ற ஜனங்களை வருத்தியும் அவரது பொருள்களைத் திருடியும் உன் காலத்தைக் கழிக்கவில்லையா?

**க.** அலெக்ஸாந்தர் மஹராஜ்! நான் தங்கள் கையிலகப்பட்டவன். ஆகையால் தாங்கள் சொல்வதையெல்லாம் கேட்கவும் விதிப்பதையெல்லாம் பொறுக்கவும் வேண்டியவனே! ஆயினும், என் மனது மாத்ரம் சிறிதும் தளரவில்லை. ஆகையால் தங்களுடைய கடுஞ்சொற்களுக்கு பதில் சொல்லுகையில் கட்டுப்படாதவனைப்போலவே பேசுவேன்.

**அ.** அதற்கென்ன. தடை. நீ தாராளமாய்ப் பேச

லாம். இதுவரை என்னிடம் பேசவந்தோரை நான், அதிகார கர்வமேலீட்டினுல் தட்டிப்பேசினது கிடையாது. இனிமேலும் அவ்வாறு செய்யேன். இது ஸத்யம்.

க. அப்படியானுல் நான் தங்களுடைய கேள்விக்கு பதிலாக வேறொரு கேள்வி கேட்க வேண்டும். தாங்கள் தங்களது வாழ்நாளை இதுவரை எவ்வாறு கழித்தீர்கள்.

அ. சுத்தவீரனைப்போல்! என் க்யாதியைக் கேட்டால் உனக்கு ஸங்கதி தெரியும்! பராக்ரம சாலிகளில் முதல்வன் நானே! அரசர்களில் சிறந்தவனும் நானே? பிற நாட்டரசர்களை வென்றவர்களுள் ப்ரஸித்தி பெற்றவனும் நானே!

க. சரிதான், அந்த க்யாதி எனக்கில்லையா! என்னிலும் பராக்ரமம் மிகுந்த எவன், இதுவரை தங்களை யெதிர்த்தான்? தங்களுடைய சேனைத்தலைவர் புறங்கொடுத் தோடியது யாருக்கு? தயவுசெய்து விரலை மடக்குங்கள், பார்க்கலாம்! வெறும் பிதற்றலில் எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. என்னைத் தாங்கள் லகுவில் வெல்லவில்லை யென்பது தங்களது மனச்சாக்ஷிக்கே தெரியும்.

அ. இருந்தாலுமென்ன! நீ திருடன்தானே! அதிலும் ஈனன், மானங்கெட்டவன்!

க. பிறநாட்டாரை வென்றவன் வெகு யோக்யனே? தாங்களும், கொள்ளைக்காரனைப்போல் உலகமெல்லாந்திரிந்து ஜனங்களுடைய ஸுகத்தையும், கைத்தொழில்களையும் அழிக்கவில்லையா? பிறநாடுகளைக் கட்டியாளவேண்டுமென்ற ஆவலுடன் தாங்கள் அவைகளைக் கொள்ளையிட்டதும் பாழாக்கினதும், அந்நாட்டாரைக் கொன்றதும், பின்னும் பலவாறு செய்த அந்யாயங்களும் கொஞ்சமோ? நூறு ஆட்களைக்கொண்டு நான் ஒரு ஊரைக் கொள்ளையிட்டேனென்ருல், தாங்கள் லக்ஷக்கணக்கான சேனைகளுடன், எவ்வளவோ தேசங்களை யழித்திருக்கிறீர்கள்! நான் ஒண்டி சண்டிகளை வதைத்தேன்! தாங்கள் மகுடந்தாங்கிய மன்னர்களை மண்ணோடு மண்ணுக்கினீர்கள்! நான் சில சேரி பாளையங்களை யழித்தேன்! தாங்கள் மிகவளமுள்ள ராஜ்யங்களையும் செல்வம் மிகுந்த பட்டணங்களையு மழித்தீர்கள்! தாங்கள் ராஜவம்சத்திற் பிறந்தீர்கள். நான் எளிய குடும்பத்திற் பிறந்தேன். இது தான் நம்மிருவருக்குமுள்ள வித்யாஸம்! இதனுலேயே, தங்களுக்கு என்னிலும் பெருத்த திருடனுவதற்கு ஸௌகர்யங்கள் ஏற்பட்டன. ஆதலால் நம்மிருவருக்கும் என்ன வித்யாஸம்?

அ. ஆமாம். நீ சொல்வது சரிதான். நான் அரசனைப்போல் அழித்தேன். அரசனைப் போலவும் அளித்தேனே! சில பட்டணங்களை அழித்தேனென்ருல், வேறு சில பட்டணங்களையும் உண்டாக்கினேன். தவிர, கல்வி, வ்யாபாரம், ஞானம் முதலியவைகளைப் பரிபாலித்திருக்கிறேனே!

க. அதற்கென்ன! நானும் பணக்காரரிடமிருந்து கொள்ளையிட்டதை ஏழைகளுக்குக் கொடுத்திருக்கிறேன். தாங்கள் ப்ரஸ்தாபிக்கும் 'ஞானம்,' 'கல்வி' என்ற விஷயங்களைப்பற்றி எனக்கு ஒன்றுமேதெரியாது. ஆனுல் ஒன்று மாத்ரம் நிச்சயம். நானும் தாங்களும் உலகத்தாருக்குச் செய்த தீங்குகள் அளவிறந்தன. அவைகளுக்குச் சிறிதேனும் ஈடு செய்ய நமக்கு சக்தியில்லை. இது என்து மனப்பூர்வமான நம்பிக்கை.

அ. சரிதானப்பா, நீ போகலாம். (ஒருபுறமாய்த் திரும்பிக்கொண்டு) யாரடா அங்கே! இவனது விலங்குகளைத் தறித்து விடுங்கள். இவனுக்கு வேண்டுவனவற்றைக் கொடுங்கள். (தனிமையில்) நானும் திருடன்தானு—யோசித்துப் பார்ப்போம்.

(காட்சி கலைதல்.)

எஸ். ஆர். அநந்த நாராயணய்யர்.

## CONGRESS AND CONFERENCES.

## காங்க்ரெஸும் கான்பரென்ஸுகளும்.

### THE INDIAN NATIONAL CONGRESS.

### இந்தியன் நாஷனல் காங்க்ரெஸ்.

இந்தியன் நாஷனல் காங்க்ரெஸ் ஸபையானது இந்த மாஸம் 27-தேதி யன்று பம்பாயில் கூடிற்று. மிஸ்டர் டின்ஷா எடல்ஜி வாச்சா காங்க்ரெஸின் உபசரணைக் கமிட்டி சேர்மனாக இருந்து ப்ரஸங்கம் செய்தார். அவர் தமது ப்ரஸங்கத்தில் ஸர் ஹென்ரி காட்டன், ஸர் பிரோஸ்ஷா மேட்டா ஆகிய இவர்கள் இறந்து போனதைப்பற்றியும், தற்போது நடந்து வரும் யுத்தத்தைப்பற்றியும் ப்ரஸ்தாபம் செய்துவிட்டு, இந்தியர்களை ராணுவத்தில் சேர்த்துக் கொள்வதைப்பற்றிப் பேசினார். யுத்தம் ஆரம்பித்த வுடனே இந்தியாவிலுள்ள எல்லாவகுப்பாரும் போர் முனைக்குப் போய் யுத்தம் செய்ய தயாராயிருப்பதாகச் சொன்னார்கள். இப்போதும் அநேகர் க்ரமமான ஸைன்யத்தோடு சேர்ந்து யுத்தம் செய்யத் தயாராயிருக்கிறார்கள். ஆனால் கவர்ன்மெண்டார் என்ன காரணத்தைக் கொண்டோ, அவர்களைப் போருக்கு அனுப்ப ஸம்மதிக்கவில்லை. கவர்ன்மெண்டாரின் இந்தத் தீர்மானமானது அநேக ஜனங்களுக்கு ஏமாற்றத்தை உண்டு பண்ணியிருக்கிறது. ப்ரிட்டிஷ் குடியேற்ற நாடுகளின் கவர்ன்மெண்டுகள் நாளுக்கு நாள் புது ஸைன்யங்கள் சேகரித்துப் போர் முனைக்கு அனுப்பிக் கொண்டிருக்க, இந்தியா விஷயத்தில் மாத்ரம், கவர்ன்மெண்டார் இந்தியர்களை ராணுவத்தில் சேர்த்துக்கொள்ள ஸம்மதிக்காமலிருக்கிறார்கள். இதனால் கவர்ன்மெண்டாருக்கு ஜனங்களிடத்தில் நம்பிக்கையில்லையென்று தோன்றுகிறது. இந்தியர்களை ராணுவத்தில் தாராளமாகச் சேர்த்துக் கொள்ள முன் வந்தால், நமது ராஜாங்கத்தார் நமது எதிரிகளோடு இருபத்தைந்து வர்ஷ காலமானாலும் சலியாமல் யுத்தம் செய்து வரலாம். கவர்ன்மெண்டார் ஜனங்களிடத்தில் அவநம்பிக்கை கொள்ளாமல் அவர்களை ராணுவத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

ஜனங்கள் ஒழுங்காகவும் ஸௌக்யமாகவும் அபிவ்ருத்தியடைய வேண்டுமானால் அவர்களுடைய பொருளாதார நிலைமை அபிவ்ருத்தியடைய வேண்டியது அவச்யமாயிருப்பது போலவே, அவர்களுக்கு வீரம், பராக்ரமம் முதலிய வீரர்களுடைய குணங்களும் இருக்க வேண்டியது அவச்யமாகும். கேவலம் ஸம்பத்து மாத்ரம் ஜனங்களுக்கு இருந்தால், அவர்கள் வீரர்களுக்கு உரிய குணங்கள் இழந்து ஹீனஸ்திதியை அடைவார்கள். அதைப் போலவே வீரர்களுக்கு உரிய குணங்கள் மாத்ரம் அபிவ்ருத்தி யடைந்து வந்தால் அவர்களிடத்தில் செல்வ அபிவ்ருத்தி ஏற்படுவது அரிது. எந்த தேசத்து ஜனங்களுக்கு செல்வ ஸம்பத்தும் வீரர்களுக்கு உரிய ஆண்மைக் குணங்களும் இருக்கின்றனவோ, அந்த தேசத்தார் தான் வெகுகாலம் அழிந்து போகாமல் இருக்கிறார்கள். ப்ரிட்டிஷ் ஜனங்களுக்கு ஐச்வர்யத்தோடு ஆண்மைக் குணங்களிருப்பதால் தான் இந்த யுத்தத்தை அவர்கள் சோர்வடையாமல் நடத்தி வருகிறார்கள். இங்க்லண்டில் செல்வ ஸம்பத்து அபிவ்ருத்தியாகி யிருப்பதோடு இங்க்லீஷ் ஜனங்கள் முன்பு மிலிஷ்யா என்றும், வாலண்டியர்கள் என்றும், தற்போது டெரிடோரியல் ஸைன்யமென்றும் பெயர்கொண்ட வாலண்டியர் படைகளில் சேர்ந்து போர் வீரர்களுடைய குணங்களை வ்ருத்திசெய்து வருகிறார்கள். இந்தியாவில் அநேகவர்ஷங்களாக ஜனங்கள் ஆயுதங்களை உபயோகிக்கக் கூடாதென்று கவர்ன்மெண்டார் சட்டமேற்படுத்தி யிருப்பதால், ஜனங்கள் பலவீனமடைந்து பராக்ரமம் குறைந்து வருகிறார்கள். கவர்ன்மெண்டார் இனி தாமஸிக்காமல்

ஜனங்களுக்கு ஆயுதம் தரிக்கும் பாத்யதையைக் கொடுக்கவேண்டும்.

பிறகு மிஸ்டர் வாச்சா, சட்டஸபைகள் விஷயத்தில் இன்னும் அநேக சீர்திருத்தங்கள் செய்ய வேண்டியிருக்கிறதென்றும், இப்போது செய்யப்பட்டிருக்கிற சீர்திருத்தங்களில் அநேக குறைகளிருக்கின்றனவென்றும், ப்ரிட்டிஷ் ஆதிபத்யத்துக்கு உள்பட்டு ஸ்வயஆட்சி அடைவதே நமது நோக்கமாயிருக்கவேண்டுமென்றும், ஸ்வயஆட்சியை அடைவதற்கு அநேக தடைகள் இருப்பதால், அதற்காக மெதுவாகவும் ஊக்கத்துடனும் முயற்சி செய்ய வேண்டுமென்றும் சொன்னார்.

ஸர் எஸ். பி. ஸின்ஹா.—ஸர் ஸத்யேந்த்ர ப்ரஸன்ன ஸின்ஹா காங்க்ரெஸுக்கு ப்ரெஸிடெண்டாக இருந்து ப்ரஸங்கம் செய்தார். அவர் முதலில் ராஜபக்தியைப்பற்றியும், யுத்தத்தைப்பற்றியும் ப்ரஸ்தாபம் செய்துவிட்டு, ஸ்வய ஆட்சியைப்பற்றிப் பேசினார். நாம் வேண்டுமென்கிற ஸ்வய ஆட்சியானது, ஜனங்களை ஜனங்களுடைய ஸௌகர்யத்துக்காக, ஜனங்களாலேயே ஆளும் ஆட்சியாக இருக்க வேண்டும். அந்த ஸ்வய ஆட்சியானது ஜனங்களுக்குள் ப்ரகாசியாமல் அமிழ்ந்து கிடக்கிற ஸன்மார்க்க வலிமையையும் புத்தி வலிமையையும் விசாலிக்கக் கூடியதா யிருக்கவேண்டும். தனக்குத்தானே உதவி செய்துகொள்ளுதல், அதாவது பிறருடைய உதவியை எதிர்பாராதிருத்தல், தன்னைத்தானே உயர்த்திக்கொள்வது, தன்னைத்தானே அறிந்துகொள்வது முதலிய குணங்கள் ஜனங்களிடத்தில் ஏற்படவேண்டும்.

ஆனால் இந்த ஸ்வயஆட்சியானது திடீரென்று கிடைக்கக்கூடியதல்ல. அதை யடைவதற்கு வெகுகாலம் செல்லவேண்டும். அதை யடைவதற்குள் அநேக இடைஞ்சல்களும் கஷ்டங்களும் இருக்கின்றன. பொறுமையோடும் விடாமுயற்சியோடும், தன் மறுப்போடும் உழைத்துவந்தால் தான் அதை அடைய முடியும்.

ஸ்வய ஆட்சியை அடைவதற்கு மூன்று வழிகள்தானிருக்கின்றன. முதலாவது ப்ரிட்டிஷாரே ஸ்வதாவாகக் கொடுத்துவிடுவது. அப்படி ப்ரிட்டிஷார் நமக்கு இப்போது ஸ்வய ஆட்சி கொடுத்துவிடுவதாக இருந்தாலும், நாம் தற்போது அதை யடைவதற்கு தகுந்தவளவு சீர்திருந்தாமலிருப்பதால், அதனால் நாம் யாதொரு நன்மையையும் அடையமாட்டோம். இரண்டாவது, ப்ரிட்டிஷ் கவர்ன்மெண்டாரிடமிருந்து சண்டைபோட்டு அடைவது. ஆனால் அவ்விதம் செய்வது முடியாதென்பது யாவரும் அறிந்த விஷயம். நாம் அதை அடைவதற்காக கவர்ன்மெண்டாரோடு சண்டைக் கெழுந்தால், நாம் ஸ்வய ஆட்சிக்கு லாயக்கில்லை யென்பதை நாமே வெளியிட்டுக் கொள்ளுகிறவர்களாவோம்.

மூன்றாவது வழியாவது நமது புத்தி, ஸன்மார்க்கமுறை, பொருளாதார நிலைமை ஆகிய இவைகளை படிப்படியாக அபிவ்ருத்தி செய்து நம்மை ஸ்வய ஆட்சிக்கு லாயக்குள்ளவர்களாகச் செய்யவேண்டியது. நாம், பலமான காயங்கள் அடைந்து எலும்பு முறிந்துபோய் தகுந்த ரணவைத்யர்களால் தக்கசிகித்ஸைகள் செய்யப்பட்டு வருகிறவர்களை போலிருக்கிறோம். காயமடைந்தவர் அந்த ஸ்திதியில் வைத்யருடைய சொல்லைக் கேட்டு அதன்படி நடந்துவர வேண்டியதே யல்லாமல்,சீக்ரம்எழுந்து நடமாடவேண்டுமென்பது பிசகாவதுபோல, தாழ்ந்த நிலைமையில் இருக்கும்நாம் முரட்டுத்தனமாய் எதுவும் செய்யாமல், இங்க்லண்டினுடைய யோசனையையும் மேற்பார்வையையும் அனுஸரித்து மெதுவாக ஸ்வய ஆட்சியை அடைவதற்கான முயற்சிகளைச் செய்து வரவேண்டும். அதோடு கவர்ன்மெண்டாரும் ஜனங்களிடத்தில் நம்பிக்கையும், அனுதாபமும் கொண்டு, அவர்களுக்கு இன்னும் அதிகமாக உயர்ந்த உத்யோகங்கள் கொடுத்து, நீதி நிர்வாக

அதிகாரங்களில் இந்தியர்களுக்கும் ஒரு பாகம் கொடுக்கவேண்டும்.

இந்தியர்களை ராணுவத்தில் சேர்த்துக்கொள் வதைப் பற்றிப் பேசுகையில் ஸர். எஸ். பி. ஸின் ஹா பின்வரும் அபிப்ராயத்தை வெளியிட்டார். தேச பாதுகாப்பில் தனக்குப் பொறுப்பு உண் டென்பதை ஒருவர் உணர்ந்திருந்தாலொழிய அவரிடம் தேசநிர்வாகப் பொறுப்பைப்பற்றிய உணர்ச்சி ஏற்படாது. தேசத்தில் ஏதாவது தொந்தரவுகள் ஏற்பட்டால், மற்றவர்கள் அவை களைத் தொலைப்பார்கள்; கலகம் நேர்ந்தால் அவர்களே அதை அடக்கிவருவார்கள்; தேசத் துக்கு அன்யர்களால் ஏதாவது கெடுதல் நேரி டும் போலிருந்தால் அந்த மற்றவர்களே தேசத் தைப்பாதுகாப்பார்கள் என்று ஜனங்கள் எண்ணி வருவார்களானல், தேச க்ஷேமத்தைப்பற்றிய பொறுப்பு என்பது அவர்களிடம் இல்லாமல் அழிந்து போயிருக்கிறதென்று சொல்லலாம்.

தற்போது சிற்சில ஜாதியார்களே ராணுவப் பயிற்சி யடைந்துவருகிறார்கள். இதர ஜனங்க ளுக்கு கவர்ன்மெண்டார் ராணுவப்பயிற்சி கொடுப்பதில்லை. அவர்களை கவர்ன்மெண்டார் படைகளில் சேர்த்துக்கொள்ளாமலிருப்பதோடு, வாலண்டியர்களாகச் சேர்த்துகொள்ளவும் ஸம்ம திப்பதில்லை. தற்போது படைகளில் சேர்த் துக்கொள்ளப்படும் ஸீக்கியர்கள், ரஜபுத்ரர்கள், கூர்க்கர்கள், பட்டாணியர்கள் ஆகிய இவர்களை யுங்கூட ராணுவத்தில் உயர்ந்த உத்யோகம் பெறும்படி விடுவதில்லை.

ரொம்ப தாழ்ந்த ஸ்திதியிலிருக்கும் ஐரோப் பியர்களும், யூரேஷியர்களும், மேற்கு இந்திய நிக்ரோ ஜாதியாரும் ஆயுதங்கள் தரித்துக்கொள் ளலாமென்று கவர்ன்மெண்டார் விட்டிருக்கிறார் கள். ஆனல் இந்தியர்களுக்குள்ளோ என்றால், சட்டத்துக்குக் கட்டுப்பட்டு நடந்து வருகிறவர் களுக்கும் உயர்ந்த ஸ்திதியிலிருப்பவர்களுமான ஜனங்களுக்குங்கூட ஆயுதந்தரிக்கும் பாத்யதை யைக் கொடுக்கவில்லை. ஏதோ அதிகாரிகள் இஷ்டப்பட்டால் மட்டும் சிற்சில இந்தியர்க ளுக்கு ஆயுதங்கள் உபயோகிக்க அனுமதி கொடுக்கலாமென்று ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

இதுவிஷயமாய் கவர்ன்மெண்டார் சில சீர் திருத்தங்கள் செய்யவேண்டியது அவச்யமாகும்.

1. எந்த ஜாதியைச் சேர்ந்தவர்களென்பதை யும் எந்தமாகாணத்தைச் சேர்ந்தவர்களென்பதை யும் கவனியாமல், இந்தியர்களை, தேக பலத்தை மாத்ரம் பரீக்ஷை செய்து லாயக்குள்ளவர்களா யிருந்தால், க்ரமமான படைகளில் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

2. இந்தியாவிலுள்ள எல்லா வகுப்பாரும், சரீரபலம், கல்வி ஆகிய இவைகளுண்டென்ப தற்கு ந்யாயமாய் ஏற்படுத்தப்படும் ஒரு பரீக்ஷை யில்தேறினல், ராணுவத்தில் உயர்ந்த உத்யோ கங்களை அடையலாமென்று ஏற்படுத்தவேண்டும். உயர்ந்த ராணுவ உத்யோகங்கள் அடையவிரும் பும் ஜனங்கள் ராணுவப்பயிற்சி அடைவதற்காக ராணுவக் காலேஜுகள் ஏற்படுத்தவேண்டும்.

3. தக்க நிபந்தனைகளின்மேல், எல்லா ஜனங் களும் வாலண்டியர் படையில் சேரலாமென்று அனுமதி கொடுக்கவேண்டும்.

4. ஆயுதச் சட்டத்தில் இந்தியர்களுக்கொரு விதமாகவும், மற்றவர்களுக்கு ஒருவிதமாகவும் உள்ள நிபந்தனைகளை எடுத்துவிடவேண்டும்.

ஸர் எஸ். பி. ஸின்ஹா ஸ்தல ஸ்வய ஆட்சி யைப்பற்றிப் பேசினபோது, இந்தியா ஸ்வய ஆட்சி யடையவேண்டுமானல் இந்தியர்கள் முத லில் ஸ்தல ஸ்வயஆட்சி விவகாரங்களில் தேர்ச்சி யடையவேண்டியது அவச்யமென்றும், அவ்வி தம் தேர்ச்சியடைந்தால் தான் ஸ்வய ஆட்சிக்கு லாயக்குள்ளவர்களாக ஆகமுடியு மென்றும், ஸ்தல ஸ்வயஆட்சி ஏற்பாட்டில் க்ராம ஸ்வயஆட் சியே ஆதாரமாக இருப்பதால், க்ராம ஸமூக வாழ்க்கையை அபிவ்ருத்தி செய்யவேண்டுமென் றும், இதற்கு ஜனங்களுக்குள் கோவாபரேடிவ்

முயற்சியை அபிவ்ருத்தி செய்யவேண்டு மென்றும், தற்போது அபிவ்ருத்தி யடைந்து வருகிற படி கோவாபரேஷன் வளர்ந்து வருவதானல், இந்தியாவிலெங்கும் கோவாபரெடிவ் நாணய ஸங்கங்கள் ஏற்படுவதற்கு அநேக வர்ஷங்களாகு மாதலால், இந்தியர்கள் கோவாபரெடிவ் முயற்சியை வ்ருத்தி செய்ய முயற்சி செய்யவேண்டு மென்றும், இதற்கு ஜனத்தலைவர்களும் அதிகாரிகளும் ஒத்துழைக்க வேண்டுமென்றும், இந்தியா கவர்ன்மெண்டார் சென்ற மேமாஸத்தில் ப்ரசுரம் செய்த ஸ்தல ஸ்வய ஆட்சித் தீர்மானம் த்ருப்திகரமா யில்லை யென்றும் சொன்னர்.

இன்னும் அவர் இந்தியாவில் ஏராளமான த்ரவ்ய ஸாதனங்கள் இருந்தும், இந்தியா இன்னும் ஏழையான நாடாகவே இருக்கிறதென்றும், இந்தியாவை ஒரு பணக்கார நாடாக்க கைத்தொழில்களை அபிவ்ருத்தி செய்யவேண்டு மென்றும், கவர்ன்மெண்டார் கைத்தொழில் வ்யாபாரக் கல்விச்சாலைகள் ஸ்தாபிப்பதோடு நில்லாமல், கவர்ன்மெண்டாரே கைத்தொழில்கள் ஸ்தாபித்து நடத்திக்காட்டவேண்டுமென்றும், இப்படி செய்து வந்தால், இந்தியர்கள் கைத்தொழில்கள் ஸ்தாபிக்க முன்வருவார்களென்றும், காங்க்ரெஸ் ஸபையார் வர்ஷத்தில் இரண்டு மூன்றுநாள் ப்ரஸங்கம் செய்வதோடு நில்லாமல் காங்க்ரெஸ் கமிட்டிகளின் மூலமாக, மூலாதாரக் கல்வியபிவ்ருத்தி, ஸுகாதாரம், முதலிய விஷயங்களைப்பற்றி கவனித்து ஜனங்களுக்காகப் பாடுபடவேண்டுமென்றும் சொன்னர்.

தீர்மானங்கள்:—காங்க்ரெஸில் செய்யப்பட்ட தீர்மானங்கள் சுருக்கமாய்ப் பின்வருமாறு.

இந்தியர்களுக்கு ராணுவப்பயிற்சியும் கப்பல் படைப்பயிற்சியும் கொடுக்கவேண்டும். இந்தியர்கள் வாலண்டியர்களாகச் சேர அனுமதி கொடுக்கவேண்டும்.

ஸ்வய ஆட்சியுள்ள ப்ரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் இந்தியர்களுக்கு மற்ற ப்ரிட்டிஷ் ஜனங்களோடு ஸமபாத்யதை ஏற்படவேண்டும்.

இம்பீரியல் கான்பரென்ஸுக்கு இந்தியாவிலிருந்து ஒருமெம்பர் அனுப்புவதைப்பற்றி ஸமீபத்தில் இம்பீரியல் சட்ட ஸபையில் கொண்டுவந்த தீர்மானத்தை வைஸ்ராய் ஏற்றுக்கொண்டதற்காக காங்க்ரெஸ் வைஸ்ராயுக்கு நன்றி செலுத்துகிறது. இம்பீரியல் கான்பரென்ஸுக்கு இந்திய ப்ரதிநிதி அனுப்பும் பாத்யதை கிடைத்தால், வைஸ்ராயின் சட்ட ஸபையிலுள்ள தெரிந்தெடுக்கப்பட்ட மெம்பர்கள்தான் அந்த ப்ரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கவேண்டும்.

ஆயுதச் சட்டத்திலுள்ள நிர்ப்பந்தமான விதிகளை எடுத்துவிடவேண்டும். ஒப்பந்தக் கூலி ஏற்பாட்டை ஒழித்துவிடவேண்டும். பஞ்சாப், பர்மா, மத்யமாகாணங்கள் ஆகிய இந்த மாகாணங்களுக்கு ஹைகோர்ட்டுகள் ஸ்தாபிக்க வேண்டும்.

இந்தியர்கள் அயல் நாட்டிலிருந்துவரும் ஸாமான்களைவாங்காமல், சற்றுவிலை அதிகமானாலும், இந்தியாவில் செய்த ஸாமான்களையே வாங்கிவந்து இந்தியக் கைத்தொழில்களை ஆதரிக்க வேண்டும். நீதி நிர்வாக அதிகாரங்களை பிரித்து விடவேண்டும். அச்சுச்சட்டத்தை ரத்து செய்துவிடவேண்டும். ஏற்றுமதி இறக்குமதி வரிகள்போட இந்தியாவுக்கு பூரா ஸ்வதந்தரம் கொடுக்கவேண்டும்.

ஸ்வய ஆட்சியைப் பற்றிய தீர்மானம் பின்வருமாறு.

இந்த தேசத்திற்கு ஸ்வய ஆட்சி ஏற்படுவதற்குத் தகுந்த முறைகளை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரவேண்டிய காலம் வந்துவிட்டதால், இந்த தேசத்தில் நடந்து வரும் ராஜ்ய முறையைத் திருத்தி பண விஷயம் முதலிய விஷயங்களில் ஜனங்களுக்குத் தகுந்த மேல் விசாரணை யுண்டாகும்படி செய்யவேண்டும். மாகாண கவர்ன்மெண்டுகள் பண விஷயமுள்பட தங்கள் காரியங்களையெல்லாம் தாங்களே செய்து

சொல்லும்படியும், எல்லா வகுப்பு ஜனங்களுக்கும் ப்ரதிநிதிகள் இருக்கும்படியும் அவைகளின் அமைப்பைத் திருத்தவேண்டும். நிர்வாக அதிகாரிகளின் அதிகாரத்தை ஜனப்ரதிநிதிகள் தக்கபடி மேல்விசாரணை செய்யும்படி யேற்படுத்த வேண்டும். இப்பொழுதிருக்கிற நிர்வாக ஸபைகளின் அமைப்பைத் திருத்துவதோடு அவைகளில்லாத மாகாணங்களில் நிர்வாக ஸபைகள் ஏற்படுத்தவேண்டும். இந்தியாமந்த்ரியின் ஸபையைத் திருத்தி அமைக்கவேண்டும். சட்ட ஸபைகள் இல்லாத மாகாணங்களில் அவைகளை ஏற்படுத்தவேண்டும். இந்தியா கவர்ன்மெண்டுக்கும் இந்தியா மந்த்ரிக்கு மேற்பட்டிருக்கிற ஸம்பந்தத்தை திருத்தவேண்டும். ஸ்தல ஸ்வய ஆட்சியை இன்னும் சீர்திருத்தவேண்டும். ரயத்துவாரி நிலங்களில் நிலவரியை அடிக்கடி உயர்த்தாமல் சாச்வதமாக்கவேண்டும். அல்லது அடிக்கடி ஸெட்டில்மெண்டு செய்யப்படும் ப்ரதேசமாயிருந்தால் 60-வர்ஷத்துக்கு ஒரு தடவை ஸெட்டில்மெண்ட் செய்யவேண்டும்.

## THE INDIAN INDUSTRIAL CONFERENCE.

### இந்திய கைத்தொழில் கான்பரேன்ஸ்.

பதினோராவது இந்திய கைத் தொழில் கான்பரென்ஸ் இந்தமாஸம் 24-ந் தேதி யன்று பம்பாயில் கூடிற்று. பம்பாயைச் சேர்ந்த ஸர் டின் ஷா பெடிட் கான்பரென்ஸின் உபசரணைக்கமிட்டிக்குச் சேர்மனாக இருந்து ப்ரஸங்கம் செய்த போது முதலில் பம்பாயின் தொழிலபிவ்ருத்தி நிலைமையைப்பற்றிப் பேசினார்.

பம்பாயில் பருத்திக் கைத் தொழில் 1854-ம் வர்ஷம் ஆரம்பமாயிற்று. அந்தத் தொழில் வர வர வ்ருத்தியடைந்து தற்போது ரொம்ப உயர்ந்த நிலைமையிலிருக்கிறது. சென்ற 1890-ம் வர்ஷத்தில் அந்தத் தொழிலில் போடப் பட்டிருந்த மூலதனம் 5 கோடியே $31\frac{3}{4}$-லக்ஷம் ரூபாயாகும். 1900-ம் வர்ஷத்தில் மூலதனம் 6-கோடி $20\frac{1}{2}$-லக்ஷமாக அபிவ்ருத்தி படைந்தது. இப்போதோ, அந்தத் தொழிலில் $7\frac{3}{4}$-கோடிக்கு மேல் மூலதனம் போடப்பட்டிருக்கிறது.

1901-ம் வர்ஷத்தில் பம்பாய் நெசவு சாலைகளில் 8-கோடியே 6-லக்ஷம் ராத்தல் நிறையுள்ள துணிகள் நெய்யப்பட்டன. 1914-ம் வர்ஷத்திலோ மொத்தம் நெய்யப்பட்ட துணிகளின் நிறை 13-கோடியே 37-லக்ஷம் ராத்தலாகும்.

1910-ம் வர்ஷத்தில் பம்பாயில் 33-கோடியே 28-லக்ஷம் ராத்தல் நிறையுள்ள நூல் நூற்கப்பட்டது. 1914-ம் வர்ஷத்தில் நூற்கப்பட்ட நூலின் நிறை 32-கோடியே $21\frac{1}{2}$-லக்ஷம் ராத்தலாகும்.

பம்பாய் பருத்தித்தொழில் சாலைகளில் வேலை செய்து வரும் வேலையாட்களின் ஸங்க்யை பின்வருமாறு.

| வர்ஷம் | | ஆட்களின் தொகை. |
|---|---|---|
| 1890 | ,, | 59,139 |
| 1900 | ,, | 82,162 |
| 1914 | ,, | 1,09,860 |

ஸர் டின் ஷா பெடிட் தமது ப்ரஸங்கத்தில், கைத் தொழில்களுக்கு கவர்ன்மெண்டார் உதவி செய்வதைப் பற்றிப் பேசினார்.

கவர்ன்மெண்டார் கைத்தொழில் விஷயங்களில் தலையிட்டுக் கொள்ள வேண்டுமென்றும், அன்ய தேசங்களில், அவைகளிலும் முக்யமாய் ஜப்பான் தேசத்தில் கவர்ன் மெண்டார் தங்கள் தேசத்துக் கைத்தொழில்களுக்கு உதவி செய்து வருவது போல, இந்தியா கவர்ன்மெண்டாரும் கைத் தொழில்களுக்கு, காப்புவரி போட்டும், வேறு ஸாதகங்கள் செய்தும் உதவி வர வேண்டுமென்றும் பலர் சொல்லி வருகிறார்கள். இந்த உபகாரம் புதிதாய் ஸ்தாபிக்கும் கைத்தொழில்களுக்கு அவச்யமானது. புதிதாய் ஸ்தாபிக்கும் ஒரு தொழிலானது அன்ய தேசங்களில் வெகுகாலமாக ஸ்தாபிக்கப்பட்டு நடந்து வரும் பழைய தொழில் சாலைக்காரர்களோடு போட்டி போட்டு, அவைகளால் நஷ்ட மடை

யாமல் வ்ருத்தியடைய வேண்டு மென்றால், அதற்கு கவர்ன்மெண்டின் உதவியில்லாமல் சரிப்படாது. ஆகவே புதிதாக ஏதாவது தொழில் ஸ்தாபிக்க வேண்டுமென்றால் அதற்கு ஸர்க்கார் உதவி அவச்யமாக வேண்டியது: ஆனால் சில காலமாக நடந்து, தற்போது சற்று அபிவ்ருத்தி யடைந்திருக்கும் தொழில்களில் கவர்ன்மெண்டார் தலையிட்டுக் கொள்வது கூடவே கூடாதென்று அந்தத் தொழில்களை நடத்தி வருகிறவர்கள் கேட்டு வருகிறார்கள். இங்கே கவர்ன்மெண்டார் தலையிட்டுக் கொள்வதென்றது பருத்தித் தொழிலுக்கு எக்ஸைஸ் வரிபோட்டிருப்பதே. நமது தேசத்தில் விளைந்த பருத்தியைக் கொண்டு, நமது தேசத்திலேயே துணிகள் நெய்து, நாம் உபயோகித்தால், அதற்கு கவர்ன்மெண்டார் வரிபோடுகிறார்கள். இந்த வரியானது ந்யாயமானதென்று ஒருவரும் சொல்ல முடியாது. கவர்ன்மெண்டார் பருத்தி தொழிலை அபிவ்ருத்தி செய்ய வேண்டியிருக்க, இவ்விதம் தொழிலுக்கு எக்ஸைஸ் வரி போட்டிருப்பதானது, தொழிலாளிகளுக்கு ரொம்ப மனத்தளர்ச்சியை உண்டாக்குவதாயிருக்கிறது.

### இந்தியாவின் தொழில் நிலைமை.

சென்ற சில வர்ஷங்களாக நாம் பழைய கைத்தொழில்களை ஆதரிப்பதைப்பற்றியும், புதுத் தொழில்கள் ஸ்தாபிப்பதைப்பற்றியும் கவனம் செலுத்தி வந்தாலும், யுத்தம் ஆரம்பித்த பிற்பாடுதான், நமது தேசத்தின் பொருளபிவ்ருத்திக்குக் கைத்தொழில்களை அபிவ்ருத்தி செய்ய வேண்டியது எவ்வளவு அவச்யமென்பது வ்யக்தமாய் நமக்குத் தெரிகிறது. தாதுப்பொருள்களும், தொழிலுக்கு வேண்டிய மற்ற பொருள்களும் ஏராளமாக உள்ள நமது தேசத்தில், நமக்கு தினசரி வேண்டிய ஸாமான்யப் பொருள்களைக்கூட நாம் இங்கேயே செய்துகொள்ள முடியாமல், அவைகளுக்காக அன்ய தேசங்களை எதிர்பார்த்திருப்பதானது ரொம்ப ஆச்சர்யமாயிருக்கிறது. யுத்தம் ஆரம்பிப்பதற்கு முந்தின வர்ஷமாகிய 1913-14-ம் வர்ஷத்தில் நாம் பின்வரும் ஸாமான்களை அன்ய தேசங்களிலிருந்து தருவித்திருக்கிறோம்.

| ஸாமான்கள். | இத்தனை ரூபாய்க்கு இறக்குமதியாயிருக்கிறதென்பது. |
|---|---|
| மிட்டாய் முதலிய தின்பண்டங்கள் | 26,33,000 |
| டப்பாக்களிலும் ஸீஸாக்களிலும் அடைத்த ஆகாராதிகள் | 56,69,000 |
| கட்டிப்பால் (கண்டன்ஸ்ட் மில்க்) முதலிய பால் வகைகள் | 41,52,000 |
| பிஸ்கோத்துகளும் கேக்குகளும் | 44,81,000 |
| கடுதாசியும், கடுதாசி அட்டைகளும் | 158,77,000 |
| வளையல்கள் | 84,45,000 |
| கண்ணாடிக் குப்பிகள் | 21,93,000 |
| கண்ணாடித்தட்டுகளும், தகடுகளும் | 22,35,000 |
| புனல்களும், க்ளோப்புகளும் | 17,93,000 |
| ஸோப் (சவர்க்காரம்) | 75,06,000 |
| பூட்ஸுகளும், ஜோடுகளும் | 79,26,000 |
| எழுதுவதற்கான பொருள்கள் | 69,98,000 |
| குடைகளும், அவைகளுக்கு வேண்டிய ஸாமான்களும் | 53,10,000 |
| விளையாட்டு பொம்மைகளும், பெரியவர்கள் விளையாடுவதற்கேற்ற ஸாமான்களும் | 44,17,000 |
| கத்தி முதலிய வெட்டுவதற்கேற்ற ஸாமான்கள் | 28,33,000 |
| பதனிட்டதோல் | 15,37,000 |

இந்தக் கணக்குகளைப் பார்த்தால் நமது தேசத்தின் கைத்தொழில் நிலைமை எவ்வளவு தாழ்ந்திருக்கிறதென்பதும், அன்ய தேசங்கள் எவ்வளவுதூரம் இந்தியர்களுடைய பணத்தை அடித்துக்கொண்டு போகின்றனவென்பதும் விளங்கும். யுத்தம் ஆரம்பித்த பிறகு ஜெர்மனியிலிருந்தும் ஆஸ்ட்ரியாவிலிருந்தும் சரக்குகள் வருவது நின்றுபோனாலும், அவைகளுக்கு ப்ரதியாக நம்மைவிடக் கைத்தொழிலில் உயர்ந்திருக்

கும் தேசங்களிலிருந்து ஸாமான்கள் இந்தியாவுக்கு வந்துகொண்டிருக்கின்றன. நாம் புதுத் தொழில்கள் ஸ்தாபித்து நடத்தி நமது வ்யாபாரத்தை வ்ருத்தி செய்து, அன்யநாட்டுச் சரக்குகள் இங்கு வராதபடி செய்வதற்கு நம்மால் முடியவில்லை. நமது நிலைமை இப்படியிருப்பதற்கு முக்யகாரணமும் வ்யாபாரத்தில் அன்யநாடுகளின் போட்டியே. புதிதாக ஏதாவதுகைத் தொழில்கள் ஸ்தாபிக்கலாமென்றால் அன்யநாடுகளில்வெகுகாலமாய் நடந்து பலமடைந்திருக்கும் கம்பெனிகள் இந்தியாவில் வ்யாபாரம்செய்து புதுத்தொழிலை அபிவ்ருத்தி யடையாமல் நசுக்கிவிடும். இந்த நிலைமையைச் சீர்திருத்த ஒரேவழிதான் இருக்கிறது. அதாவது அன்யதேசத்திலிருந்து வரும் இறக்குமதிப் பொருளுக்கு வரிபோட நமக்கு ஸ்வதந்தரம் ஏற்படுவதே. நமது கைத்தொழில்கள் அபிவ்ருத்தியடைவதற் கேற்ற விதமாக அன்யதேசத்து இறக்குமதிகளுக்கு வரிபோட நமக்கு அதிகாரம் இல்லாதவரையில் புதுத்தொழில்கள் ஸ்தாபிப்பதும், அவைகள் அபிவ்ருத்தியடைவதும் ரொம்ப கஷ்டமாகும்.

கைத்தொழில்களை அபிவ்ருத்திசெய்ய கல்வியை இன்னும் ரொம்பவும் அபிவ்ருத்தி செய்யவேண்டும். பெரிய பட்டணங்களிலெல்லாம் தொழில்கல்வி கற்பிக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும். ஜனங்களுக்குக் கைத்தொழில்கள் விஷயமாய் ஆலோசனைசொல்ல கவர்ன்மெண்டார் கைத்தொழில் டிபார்ட்டுமெண்டுகளை ஏற்படுத்தவேண்டும். இவைகளை யெல்லாம் செய்து, வரிபோடும் ஸ்வதந்தரமும் கொடுத்து, கவர்ன்மெண்டாரும் ஜனங்களும் ஒத்துழைத்தால், நமது தேசத்தில் கைத்தொழில்கள் அபிவ்ருத்தியடையுமென்று எதிர்பார்க்கலாம்.

ப்ரேஸிடேண்டின் ப்ரஸங்கம்

ஸர் டோராப்ஜி என். டாடா என்பவர் கான்பரென்ஸுக்கு ப்ரெஸிடெண்டாக இருந்து ப்ரஸங்கம் செய்தார்.

கைத்தொழில் அபிவ்ருத்திக்கு ஸாதனங்களாக இருப்பவை நான்காகும். அவையாவன மூலப்பொருள்கள், கூலியாட்கள், மூலதனம், தொழில் அறிவு, அல்லது சாஸ்த்ரஞானம். இவைகள் நான்கும் அவச்யமானாலும், இவைகளுள் ரொம்ப முக்யமாயிருப்பது தொழிலறிவு அல்லது சாஸ்த்ரஞானமாகும். தொழில்பயிற்சியுள்ளவர்கள் எந்தப் பொருளை எவ்விதத்தில் விற்பனைக் கேற்றவையாக மாற்றலாமென்பதை பொருள்களைப் பார்த்த மாத்ரத்திலேயே ஊகித்து அறிந்துகொள்ளுகிறார்கள். தொழிலறிவும், அநுபோகமும் இல்லாதவர்களுக்கு இவ்விதம் ஊகித்து அறியமுடியாது.

இந்தமாதிரி அறிவு பெரும்பாலர்க்கு இயற்கையிலேயே ஏற்படுகிறதென்றாலும், ஸாமான்ய மனிதர்களுக்குக் கைத்தொழில் கல்வி கற்பிப்பதால், அவர்களும் இவ்விஷயத்தில் அதிகதேர்ச்சியுள்ளவர்களாகிறார்கள். இயற்கையிலேயே இந்த அறிவு ஏற்பட்டிருப்பவர்களுங்கூட, தக்க தொழில் கல்வியால்தான் சோபிக்கிறார்கள். அவ்விதக் கல்வியில்லாவிட்டால், குப்பையிற் கிடக்கும் மாணிக்கம்போல் சோபிக்காமல் போகக்கூடும். தொழிலில் நிபுணர்களாயும், தொழில் முயற்சிகளை ஆரம்பித்து நடத்துகிறவர்களாயும் இருக்கக்கூடிய தொழில் தலைவர்கள் உண்டாக வேண்டுமென்றால், உயர்ந்த சாஸ்த்ரக் கல்வியையும் தேசமெங்கும் கற்பித்து வரவேண்டும்.

சிலர், பெரிய தொழில்கள் ஆரம்பமான பிறகுதான், உயர்ந்த தொழில் சாஸ்த்ரக் கல்வி கற்பிக்கவேண்டுமென்றும், தொழில்கள் ஸ்தாபிப்பதற்கு முன்னால் தொழில் சாஸ்த்ரக் கல்வி கற்பிக்கக்கூடாதென்றும் சொல்லுகிறார்கள். ஆனால் இந்தக் கொள்கை அநுபவத்துக்கு ஒத்ததாக இல்லை. இங்க்லண்டைத் தவிர மற்ற மேல்நாட்டு தேசங்களிலெல்லாம், பெரிய தொழில்கள் ஏற்படுவதற்கு முன்னமேயே உயர்ந்த தொழில், சாஸ்த்ரக்கல்வி கற்றுக்கொடுக்க ஏற்பாடுசெய்து வந்திருக்கிறார்கள்.

தொழில் சாஸ்த்ரக் கல்வி கற்றுக்கொடுக்கவும், சாஸ்த்ர ஆராய்ச்சி செய்வதற்கு உதவி செய்யவும் ஏராளமாய்ப் பண உதவி வேண்டியிருக்கிறது. ஜனங்கள் இவ்வளவு பெரிய உதவி செய்வதென்பது முடியாதாகையால், ராஜாங்கத்தார்தான் இந்த உபகாரத்தைச் செய்ய முன் வரவேண்டும்.

சில ஜனங்களுக்குமட்டும் சாஸ்த்ரக்கல்வி கற்றுக் கொடுத்தால் போதாது. நமது தேசத்தில் சில சாஸ்த்ர நிபுணர்கள் இருந்தால் மட்டும் போதாது. ஜெர்மனி தொழில் முயற்சிகளில் உயர்ந்திருப்பதற்குக் காரணம் அந்த தேசத்தில் சில சாஸ்த்ர நிபுணர்கள் இருப்பது மாத்ரமல்ல. ஜெர்மனியைப்போலவே வேறு தேசங்களிலும், ஜெர்மனியிலுள்ள அளவுக்கு சாஸ்த்ர நிபுணர்கள் இருக்கிறார்கள். ஜெர்மனியில் விசேஷமென்னவென்றால், அங்கே சாஸ்த்ர அறிவை பல ஜனங்களுக்கும் கிடைக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதுபோலவே நமதுதேசத்திலும், அநேகதொழில்தலைவர்களுக்குசாஸ்த்ரப்பயிற்சி ஏற்படுவதற்கான முயற்சிகள் செய்யவேண்டும். இதோடு, ஸாமான்ய தொழிலாளிகளுக்கு வேலையில் பயிற்சி ஏற்படுவதற்காக அநேக தொழில் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கவேண்டும். ஜனங்கள் தொழில் விஷயங்களை நன்றாய் அறிந்துகொள்வதற்காக ஸ்திரமான பொருள்காட்சி சாலைகளும், எக்ஸிபிஷன்களும் ஸ்தாபிக்கவேண்டும். நாடெங்கும் கல்வியைப் பரவச்செய்வதோடு, பிள்ளைகளுக்கு கைப்பழக்கப்பயிற்சியும் கொடுக்கவேண்டும். இவைகளோடு இன்னின்ன ஸாமான்கள் ஜனங்களுக்கு வேண்டியதாயிருக்கின்றன என்பதைப் பற்றி கவனிக்கவேண்டும். இவைகளெல்லாம் கவர்ன்மெண்டார் செய்யவேண்டியவை.

**சிறுவர்களுக்கு ஒரு புத்திமதி.**—அநேக வாலிபர்கள் அயல்நாடுகளுக்குப்போய் தொழில் கல்வி கற்றுக்கொண்டு திரும்பிவந்து, இங்கே தொழில் சாலைகளில் வேலை பார்க்க எண்ணுகிறார்கள். ஆனால் இவர்கள் தொழில்சாலைகளில் உயர்ந்த உத்யோகங்களை அடையுமுன், அங்கே ஸாமான்யமான வேலைகளைச் செய்யப்பழகி படிப்படியாய் உயர்ந்த வேலைகளை அனுபவரீதியாய் கற்றுக் கொள்ளவேண்டும். ஏனென்றால் அப்பொழுதுதான் அவர்கள் தொழில்சாலை வேலைகளில் ஒவ்வொன்றையும் கற்றுக்கொண்டு, பிற்பாடு, உயர்ந்தபதவி அடைந்தவுடன் அந்த வேலைகளைச் செய்யும் வேலையாட்களை வேலைவாங்கக்கூடும். அயல்நாடுகளில் தொழில்கல்விகற்றுவரும் வாலிபர்களில் அநேகர் தொழில்சாலைகளில் கீழ்த்தரமான வேலைகளைச்செய்து படிப்படியாக உயர்ந்த வேலைகளுக்குப் போக ப்ரியப்படுவதில்லை. அவர்கள், தங்களுக்கு உடனே உயர்ந்த உத்யோகங்கள் கிடைக்கவேண்டுமென்கிறார்கள். தொழில் சாலைத் தலைவர்கள் அவர்களுக்கு உயர்ந்த உத்யோகம் கொடுக்காவிட்டால், உடனே, தொழில் சாலைக்காரர்கள் அயல் நாடுகளுக்குப் போய்க் கற்றுவந்த இந்தியர்களை ஆதரிக்கிறதில்லையென்று குறைகூறுகிறார்கள். ஆனால் இப்படிக் குறைகூறுவது சரியல்ல. உயர்ந்த உத்யோகங்கள் வேண்டுமென்று கேட்பதற்குமுன், அவர்கள் தங்களுக்கு தொழில் அறிவோடு, அனுபோகம், மனஉறுதி, விடாமுயற்சி முதலிய குணங்கள் இருக்கின்றன என்பதை நிதர்சனமாகக் காட்டவேண்டும். அப்பொழுது தான் தொழில்சாலைகளின் சொந்தக்காரர்கள் அவர்களுக்கு பொறுப்புள்ள பெரிய வேலைகளைக் கொடுப்பார்கள்.

இவைகளைப்பற்றிப் பேசியபிறகு ஸர் டோராப்ஜி டாட்டா, கவர்ன்மெண்டார் கைத்தொழில்களுக்குப் பணஉதவி செய்யவேண்டுமெனவும், ஜப்பானில் கவர்ன்மெண்டார் தொழில் கம்பெனிகளுக்குப் பணஉதவி செய்துவருகிறார்களெனவும் சிலர் சொல்லுகிறார்களென்றும், இது உண்மையல்லவென்று தெரிகிறதென்றும், கண்ணாடி போன்ற சாமான்களை ஏழை ஜனங்கள் அதிக

மாக வாங்குகிறதாலும், அவர்கள் ரொம்ப ஏழை யானதாலும், அவர்கள் ஸுலபமாய் வாங் கும் பொருட்டு மலிவான சரக்குகளையே தயார்செய்ய வேண்டுமே ஒழிய, ரொம்ப நேர்த்தியானதும் விலை அதிகமானது மான சரக்குகளைச் செய்யக்கூடாதென்றும், தொ ழில் சாலைகள் ஸ்தாபிப்பதில் கண்ட இடத் தில் ஸ்தாபிக்காமல், மூலப்பொருள்கள் ஸமீபத் தில் உள்ளதும், செய்யப்படும் ஸமான்கள் விற் பனையாகும் இடங்களுக்கு மத்ய ஸ்தான மாயுள் ளதுமான ஓரிடத்தில்தான் ஸ்தாபிக்க வேண்டு மென்றும், கவர்ன்மெண்டார் தாங்களே ஸொந் தத்தில்தொழில்களை நடத்திவரவாவது,தொழில் கம்பெனிகளுக்குப் பண உதவி செய்யவாவது வேண்டியதில்லை யென்றும், காப்புவரிகள் கொஞ் சம் போடுவதற்குத் தமக்கு ஆக்ஷேபமில்லை யென்றும், பருத்தித் தொழிலுக்குப் போட்டி ருக்கும் எக்ஸைஸ் வரியை எடுத்துவிட வேண்டு மென்றும் சொன்னார்.

தீர்மானங்கள்—இந்தகான்பரென்ஸில் செய் யப்பட்ட முக்யமான தீர்மானங்கள் சுருக்கமாய்ப் பின்வருமாறு.

ஒரு தேசம் அபிவ்ருத்தி யடைந்து செல்வ மடைவதென்பது கைத் தொழில் கல்வி பரவு வதைப் பொறுத்திருப்பதால், கவர்ன்மெண் டார் முக்யமான இந்திய ஸர்வகலாசாலைகளில் கைத் தொழில் சாஸ்த்ரப்பிரிவுகள் ஏற்படுத்த வேண்டும். ஏற்கனவேயுள்ள டெக்னிகல் பாட சாலைகளை சீர்திருத்தவேண்டும். புதிதாகவும்டெ க்னிகல் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்க வேண்டும்.

கைத்தொழில் கல்வி கற்றவர்களை தக்கபடி வேலை கொடுத்து ஆதரிக்கா விட்டால், கைத் தொழில் கல்வி கற்றுக் கொடுப்பதால் ப்ரயோ ஜனம் உண்டாகாதாகையால், மூலதன முள்ள வர்களும், கைத்தொழில் நடத்துகிறவர்களும், அவ்வித கல்வி யடைந்தவர்கள் வேலை ஸம்பாதித் துக் கொள்வதில் உதவியாயிருக்க வேண்டும்.

ஏற்றுமதி இறக்குமதிகளுக்கு வரிபோடும் ஸ்வதந்தரம் இந்தியாவுக்கு ஏற்பட வேண்டும்.

ப்ரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இதர தேசங்க ளோடு செய்யும் உடன் படிக்கைகளில் இந்தியா வ்யாபார வரிகள் ஸம்பந்தப்பட்ட மட்டில் இந்தி யாவின் அபிப்ராயத்தையும் கேட்டுக்கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும். எப்படியும், இந்தியா வுக்கு ஸௌகர்யமான வ்யாபார வரிவிகிதங்கள் ஏற்படும்படி செய்ய வேண்டும்.

இந்தியாவில் செய்யப்படும் பருத்திச் சரக்கு களின் மேல் போடப்பட்டு வரும் எக்ஸைஸ் வரி களை எடுத்துவிட வேண்டும். இந்திய கைத் தொ ழில்களின் நன்மையை உத்தேசித்து, அன்ய தேசங்களிலிருந்து வருகின்றவையான (காப்பு வரி, பண உதவி ஆகிய உதவிகள் பெற்று அபி வ்ருத்தி யடைந்த தொழில்களின்) சரக்குகள் மேல் வரிகள் போட வேண்டும்.

அன்ய தேசங்களிலுள்ள இந்தியக்கூலிகளின் நன்மைக்காகப் பாடு பட்டதற்காகவும், ஒப்பந் தக் கூலி ஏற்பாட்டை ஒழித்துவிட வேண்டு மென்று இந்தியா மந்த்ரிக்கு சிபார்சு செய்ததற் காகவும் இந்தக் கான்பரென்ஸ் லார்ட் ஹார்டிஞ் ஜுக்கு நன்றிசெலுத்துகிறது. ஒப்பந்தக்கூலி ஏற்பாடானது ரொம்பக் கெடுதலாயிருப்பதால் அதை அடியோடு ஒழித்துவிடவேண்டியது அவச்யமாகும்.

இங்க்லண்டிலும் ஐரோப்பாவின் மற்றதேசங் களிலும் கைத்தொழில் கல்வி கற்கப்போகும் இந்தியமாணவர்களுக்கு இன்னும் நல்லதொழில் பயிற்சி கிடைப்பதற்காக இந்தியா மந்த்ரி ஏற்பா டுகள் செய்திருப்பதைப்பற்றி இந்தக் கான்ப ரென்ஸ் ச்லாகிக்கிறது. அவைகளோடுகூட இந் திய மாணவர்களுக்கு தக்க தொழில் பயிற்சி கொடுக்க ஸம்மதிக்கும் கம்பெனிகளுக்கு சில ப்ரத்யேகமான ஸாதகங்கள் செய்யவேண்டு மென்று இந்தக் கான்பரென்ஸ் பலமாக சிபார்சு செய்கிறது.

கவர்ன்மெண்டார் தங்களுக்கு வேண்டிய ஸாமான்களைக் கூடியமட்டும் இந்த தேசத்திலிருந்தே வாங்கவேண்டும். கைத்தொழில்களுக்குப் பணங்கொடுத்து உதவுதற்காக கைத்தொழில் பாங்கிகள் ஸ்தாபிக்கவேண்டும்.

அன்யதேசங்களில் இந்திய வ்யாபாரவிஷயங்களை கவனிப்பதற்காக, அந்ததேசங்களில் உள்ள ப்ரிட்டிஷ் கான்ஸல் என்னும் அதிகாரியின் ஆபிஸில் ஒரு இந்தியரை நியமிக்கவேண்டும்.

ராஜதானிப் பட்டணங்களிலும் முக்யமான வ்யாபார ஸ்தலங்களிலும், சாச்வதமான வ்யாபாரப் பொருள்காட்சி சாலைகள் ஸ்தாபிக்க வேண்டும்.

## PADDY CULTIVATION.

## நெல் சாகுபடி.

விவஸாய டிபார்ட்மெண்டாருடைய 1914-1915-ம் வர்ஷத்திய ரிபோர்ட்டில் நெல் ஸாகுபடி ஸம்பந்தமாக சில விஷயங்கள் காணப்படுகின்றன. அவைகளை இங்கு சுருக்கி எழுதுகிறோம்.

**நாற்றங்காலில் விதையளவு.**—விவஸாய டிபார்ட்மெண்டார் நெல் நாற்று நடுவதில் ஒற்றை நாற்ருக நடுவதே ச்லாக்யமென்று சொல்லிவருகிறார்கள். ஒற்றை நாற்று நடவிரும்புவோர் நாற்றங்காலைப்பற்றி ஒரு முக்யமான விஷயம் கவனிக்கவேண்டியிருக்கிறது. அதாவது நாற்றங்காலில் விதை நெல்லை அடர்த்தியாய்த் தெளிக்காமல் பரவலாய்த் தெளிக்க வேண்டுமென்பதே. நாற்றங்காலில் விதையை அடர்த்தியாய்த் தெளிப்பது ஒரு பெரிய பிசகாகும். பயிர் நன்ருய் வளரவேண்டுமென்ருல், அதற்கேற்ப நாற்றும் திடமான நாற்ருக இருக்க வேண்டியது அவச்யமாகும். பரவலாய்த் தெளித்த நாற்றங்காலிலிருந்து எடுத்து வயலில் நட்ட நாற்றுகள் எவ்வளவு நன்ருய் வளருகின்றனவோ அவ்வளவு நன்ருக, அடர்த்தியாய்த் தெளித்துக்கிடைத்த நாற்றுகள் வளருவதில்லை. இது வெகுகாலமாய் அனுபவத்தில் தெரியவந்திருந்தது. ஆனுல் இதை ஜனங்களுக்கு எடுத்துக் காட்டக் கணக்குகள் வைத்துக்கொள்ளாததால், சென்ற மூன்று வர்ஷங்களாக ஸாமல்கோட்டா விவஸாயப்பண்ணையில் இது விஷயமாக சில பரீக்ஷைகள் செய்து பார்த்தார்கள். மூன்று வர்ஷத்திய பலனும் ஒரே சீராக நன்ருக இருந்தது. அந்தப் பண்ணைக்குப் பக்கத்திலுள்ள ஊர்களில் விவஸாயிகள் நாற்றங்காலில் அடர்த்தியாக விதை தெளித்து வந்தார்கள். அவர்கள் நாற்றங்காலில் ஒரு ஏக்கருக்கு 700-ராத்தல் விதை (நெல்) வீதம் விதைத்து வந்தார்கள். ஸாமால்கோட்டா விவஸாயப்பண்ணையில் மூன்று பாத்திகளில், ஒன்றில் ஏக்கருக்கு 350-ராத்தல் வீதமும், இரண்டாவதில் 280 ராத்தல் வீதமும், 3-வதில் 210-ராத்தல் வீதமும் மூன்று வர்ஷம் விதை (நெல்) விதைத்துப் பார்த்தார்கள். ஒவ்வொரு பாத்தியிலும் ஒரு வர்ஷத்துக்கு சராசரியில் அடியில் கண்டவாறு மாஸூல் கிடைத்தது.

| பாத்தியில் விதையளவு | மாஸூல் (ஒரு ஏக்கருக்கு) நெல் ராத்தல் | வைக்கோல் ராத்தல் |
|---|---|---|
| ஏகருக்கு ராத்தல் வீதம் | | |
| ,, 350 ,, | 3513 | 6438 |
| ,, 280 ,, | 3648 | 6525 |
| ,, 210 ,, | 4066 | 6493 |

மேலேகாட்டிய கணக்குகளால் நாற்றங்காலில் விதை எவ்வளவு குறைவாக விதைக்கிருேமோ அவ்வளவுக்கு நெல் அதிகம் கிடைக்கிறதென்றும், கிடைக்கும் வைக்கோலின் அளவில் யாதொரு பெரிய வித்யாஸமும் ஏற்படவில்லையென்றும் தெரிகிறது.

**நாற்று நடும் காலம்.**—நாற்றுகளை நடுங்காலத்தைப்பற்றி ஸாதாரணக் கொள்கை யென்னவென்ருல், பயிர்வயலில் எத்தனைவாரம் நிற்கி

றதோ அத்தனைநாள் நாற்றங்காலில் நாற்று இருக்கவேண்டுமென்பதே. இந்தக் கொள்கை சரிதானா என்பதை நிர்ணயிக்க ஸாமல்கோட்டா விவஸாயப்பண்ணையில் சென்ற 6-வர்ஷகாலமாக சிலபரீக்ஷைகள் செய்துபார்த்தார்கள். ஸாதாரணமாய் 35-நாள்கள் நாற்றங்காலில் இருக்கும் ஒரு நெல் தினுஸை பரீக்ஷைக்கு எடுத்துக் கொண்டார்கள். இந்தப் பயிரின் நாற்றை நாற்றுவிட்ட 25-வது, 35-வது, 45-வது, நாட்களில் பிடுங்கி வயலில் நட்டார்கள். இப்படிப் பிடுங்கி நடுவதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. முதலாவது விதையை பத்துநாளைக் கொருதடவை விதைத்து, மூன்றாவது தடவை விதைத்து 25-நாளானபிறகு எல்லா நாற்றுகளையும் பெயர்த்துநடுதல். இரண்டாவது, விதையை ஒரேகாலத்தில் விதைத்து நாற்றுகளை 25-வது நாள் முதல் பத்துநாளைக் கொருதடவை மூன்று தடவை நடுதல். மேற்படிப்பண்ணையில் இரண்டு வழியையும் அனுஸரித்தார்கள்.

இந்தப் பரீக்ஷைகளால் தெரியவந்ததென்னவென்றால், நாள் சென்றதும் ரொம்ப இளசானதுமான நாற்றுகளை ஏககாலத்தில் நடுவதாயிருந்தால் நாற்றுகளின் வயது ஏற்றத்தாழ்வாயிருக்கிறதேயென்று கவலைப்பட வேண்டியதில்லை. நாற்றுநடும்காலம் வித்யாஸப்படுமானால் சீக்ரம்நட்ட நாற்றுகளில்தான், அவைகள் ரொம்ப இளசாயிருந்தாலும் கூட, மாஸூல் அதிகம் கிடைக்கிறது. அதாவது நாற்று ரொம்ப வளர வேண்டுமென்று காக்காமல், 25-வது நாள்முதல் கொண்டு எப்போதாவது பருவம்தப்பாமல் நாற்றுகளை நட்டுவிடுவது நல்லது.

எருக்களைப் பற்றிய பரீக்ஷைகள்.—ஸாமல்கோட்டா, கோயம்புத்தூர், மங்கநல்லூர், என்னும் இடங்களிலுள்ள விவஸாயப்பண்ணைகளில் நெல்லுக்கு எந்த உரங்கள் போடுவது நல்லதென்பதைப்பற்றி ஆராய்ச்சிகள் நடந்துகொண்டிருக்கின்றன. ஒரு பயிருக்கு என்ன எருப்போட வேண்டுமென்பது அந்தப் பயிர் ஏந்தவிடத்தில் பயிராகிறதென்பதைப் பொறுத்தது. ஆனால், மேற்சொன்ன விடங்களில் செய்த பரீக்ஷைகளால், நெல்பயிருக்கு பசுந்தாளெருவாவது, அல்லது அதிக பருமனுள்ளதும் நைட்ரொஜின் அதிகமாயுள்ளதுமான இந்த்ரிய வஸ்து எருவாவது போட்டு பாஸ்பேட் எருவைக் கொஞ்சம் சேர்த்தால் நல்லபலன் கிடைக்கிறதென்று தெரிகிறது. பாஸ்பேட்டை உபயோகிப்பது லாபகரமா என்பது அந்தந்த விடத்தைப் பொறுத்ததாயிருக்கிறது. ஆனால் அநேக இடங்களில் செய்த பரீக்ஷைகளால் மேற்சொன்ன கொள்கை பொத்தத்தில் சரியென்றுதெரிகிறது. பொடாஷ் எருவை நெல்பயிருக்கு இடுவதால யாதொரு நல்ல பலனும் உண்டாவதாகத் தெரியவில்லை.

அடியில் கண்ட அட்டவணையில் ஒருவருஷத்தில் ஒவ்வொரு வகைப் பாத்தியிலும் சராசரி மாஸூல் ஏக்கருக்கு எவ்வளவு (ராத்தல் நெல்) கிடைத்ததென்பதைக் காட்டுகிறோம்.

| நெ. | பாத்தியின் விவரம். | ஸாமல்கோட்டை. | கோயம்புத்தூர். | மங்கநல்லூர். |
|---|---|---|---|---|
| 1 | எருப்போடாதது | 2585 | 3114 | 1700 |
| 2 | பசுந்தாள் எரு | 2749 | 3291 | 1925 |
| 3 | பசுந்தாள் எருவும் பொடாஷும் | 2736 | 3175 | 2240 |
| 4 | பசுந்தாளெருவும் ஸூப்பர்பாஸ்பேட்டும் | 3340 | 3343 | 2370 |

ஸாமல்கோட்டா பண்ணையில் பசுந்தா ளெருவும் ஸூபர் பாஸ்பேட்டும் போடுவதால் நல்ல மாஸூல் கிடைக்குமென்று தெரிகிறது. மற்ற பண்ணைகளின் விவரங்கள் ஒத்துவராததால் இந்தக் கணக்குகளைக்கொண்டு எதுவும் திட்டமாய்ச் சொல்லமுடியாது. ஆகையால் இன்னும் சில வருஷங்கள் பரீக்ஷைகளை நடத்த விவஸாய டிபார்ட்மெண்டார் உத்தேசித்திருக்கிறார்கள்.

பாஸ்பேட் ஸம்பந்தமுள்ள எருக்களில் எந்த எருவை தழை எருவோடு உபயோகிப்பது நல்லதென்பதைப்பற்றி மங்களூரில் பரீக்ஷைகள் செய்துவருகிறார்கள். இதுவரையில் செய்த பரீக்ஷைகளால், நெல் பயிருக்கு எலும்புத்தூளையும் தாதுப்பொருள் ஸம்பந்தப்பட்ட பாஸ்பேட்டுகளையும் போடுவதைவிட, ஸூபர்பாஸ்பேட் எருவைப் போடுவதே நல்லதென்று தெரியவருகிறது.

**ஸூபர்பாஸ்பேட்டின் அளவு.**—சில விவஸாயிகள் செயற்கை எருக்களை உபயோகிப்பதால் நெல் மாஸூல் குறைந்துபோய் அதற்குப்திலாக வைக்கோல் அதிகம் கிடைக்கிறதென்று தெரிவித்தார்கள். மிதமான அளவில் ஸூபர் பாஸ்பேட்டை நெல் பயிருக்கு தழை யெருவோடும், தனியாகவும் உபயோகித்துப் பார்த்ததில் இந்தக் குறை ஏற்படவில்லையென்று ஸர்க்கார்ப் பண்ணைகளின் மாஸூல் கணக்குகளால் தெரிகிறது. மிதமான அளவு ஒரு ஏக்கருக்கு 120-ராத்தல் ஸூபர்பாஸ்பேட்டாகும். இதற்கு அதிகமானல் வைக்கோலின் அளவு ரொம்ப அதிகரிக்கிறதென்று தெரிகிறது.

**ஒற்றை நாற்று நடுதல்.**—விவஸாயப் பண்ணைகளுக்குச் சுற்றிலுமுள்ள இடங்களில் விவஸாயிகள் பண்ணைகளில் கிடைத்த விதைகளை உபயோகிக்க ரொம்ப ஆவலுள்ளவர்களாயிருக்கிறார்கள். பண்ணைகளில் கிடைத்த விதைகளுக்கு க்ராக்கி ரொம்ப அதிகரித்து வருகிறது. இந்த விதை நாட்டுப் புறங்களில் விற்கும் விதையைவிட சற்று அதிக விலையாயிருந்த போதிலும், விவஸாயிகள் அவைகளை வாங்க முன் வருகிறார்கள். விதை யளவைக் குறைத்து, கொஞ்சமாக விதை தெளிக்கும் வழக்கம் பரவிக்கொண்டு வருகிறது. ஒற்றை நாற்று நடும் வழக்கம் பவானி ப்ரதேசத்திலும், அமராவதிப் பாசன பூமிகளிலும் பரவிக்கொண்டு வருகிறது.

ஒற்றை நாற்று நடுவதைப்பற்றி இரண்டிடங்களில் மாத்ரம் குறை ஏற்பட்டிருக்கிறது. சீயாழி, மாயவரம் தாலுக்காக்களில் விவஸாயிகள், ஒற்றை நாற்று நட ஆரம்பித்து மூன்று வர்ஷமான பிறகு பயிரில் அதிக மாஸூல் கிடைப்பதில்லை யென்று சொல்லுகிறார்கள். அதனல் அந்த விவஸாயிகள் இப்போது நாற்றுகளை இரண்டு மூன்றாகச்சேர்த்து நடுகிறார்களாம். இதற்குக் காரணம் நிலத்துக்குப் போதுமான எருப்போடாததும், நாற்றங்காலில் விதையை அடர்த்தியாய்த் தெளிப்பது மாயிருக்கலாமென்று ஊகிக்கப்படுகிறது. இரண்டு மூன்று நாற்றுகளாக நட்டால் கூட ஒரு ஏக்கருக்கு 50-முதல் 60-ராத்தல் விதை தான் வேண்டியிருக்கும். பழைய முறைப்படி ஸுமார் 120-ராத்தல் விதை உபயோகிப்பது வழக்கமாதலால், இரண்டு மூன்று நாற்றுகளாய் நடுவதிலும் விதை லாபந்தான். இதனல் ஏக்கருக்கு 2 ரூபாய் மிச்சமாகும். ஒற்றை நாற்று ஸாகுபடியில் நாற்றங்காலை நன்றாய் செய்நேர்த்தி செய்து, விதையைப் பரவலாய்த் தெளித்து நல்ல திடமான நாற்றுகளை வயலில் நட்டு வந்தால் மேல் சொன்ன குறை நிவர்த்தியாகலாம்.

## HABITS OF THRIFT.

BY. G. S. SIVARAMA KRISHNA SARMA.

## சிக்கன வழக்கம்.

(நவம்பர் மாஸத்து 811-ம் பக்கத் தொடர்ச்சி.)

13. ஸ்வாதந்தரியமாய் ஜீவிப்பதற்கு சிக்கன குணமானது ஆதாரமாயிருப்பதால், சிக்கன குணம் மகா உயர்ந்த நற்குணங்களில் ஒன்ருக

விளங்குகிறது. ஒரு புலவர் சொல்வதாவது, "பணவிஷயங்களை எக்காலத்திலும் அலக்ஷ்யமாக எண்ணாதே" "பணமே குணம்." மனிதனுடைய சில ச்ரேஷ்டமான குணங்கள் பணத்தை க்ரமமாய் செலவிடுவதில் ப்ரகாசிக்கின்றன. அவை யாவன ஔதாரியம், தர்மசிந்தை, அனுதாபம், நீதி, ஸத்யம், முன்ஜாக்ரதை. மனிதனுடைய அநேக தீக்குணங்களும் பணத்தை அந்யாயமாய் உபயோகிப்பதில் ப்ரகாசிக்கின்றன; அதாவது பொன்னாசை, லோபம், அநீதி, ஊதாரித்தன்மை, முன் ஜாக்ரதையின்மை, அசட்டுத்தன்மை.

14. அகன்யா காலக்ஷேபம் செய்பவர்கள் எவரும் எந்த காரியத்தையும் முடிக்க வல்லமையற்றவர்களே. தங்கள் ஸம்பாதனை யெல்லாம் செலவழிக்கும் ஜனங்கள் எப்போதும் நிர்க்கதியின் விளிம்பில் நின்றுகொண்டிருக்கிறார்கள். இவர்கள் எப்போதும் தென்பற்றவர்களாகவே இருப்பார்கள்; வறுமையிலேயே உழலுவார்கள். வறுமைக்காலத்துக்கும் அஸந்தர்ப்பங்களுக்கும் இவர்கள் அடிமைகளே. தங்கள் மனச்சாக்ஷியின் கௌரவத்தைப் போக்கிக்கொள்கிறார்கள். இவர்கள் ஸ்வாதந்தரியமாய் இருக்கமுடியாது. ஊதாரியாயிருப்பவர்களுக்கு எவ்வித தைர்யமும் கிடையாது; தர்மமும் கிடையாது.

15. எவ்வளவு சிறு தொகையானாலும் கொஞ்சம் சேமித்து வைத்திருப்பவன் நிலைமையோ வேறு. தான் வைத்திருக்கும் சிறு முதலால் இவன் எப்போதும் தென்பாகவே இருப்பான். கெட்டகாலம் இவனை அசைக்கமுடியாது. உலகத்தார் முகத்தை இவன் தைர்யமாய் பார்ப்பான். ஒருவிதத்தில் தனக்குத்தான் யஜமானனாக இருக்கிறான். தனக்கு கட்டுப்படியாகும்படியான சம்பளத்தையே கேட்பான். குறைந்த சம்பளத்துக்கு ஒப்புக்கொள்ளான். மூப்புக்காலத்தை ஸௌக்யமாயும் ஸந்தோஷமாயும் கழிக்க ஆவலுடன் எதிர்பார்த்திருப்பான்.

16. ஆகையால் மனிதர்களுக்கு விவேகம் வ்ருத்தியாக சிக்கன ஸ்வபாவமும் வ்ருத்தியாகிறது. விவேகமில்லாதவன் காட்டுமனிதனைப்போல், தன் ஸம்பாதனையை யெல்லாம் செலவிடுகிறான்; நாளைக்கு வேண்டுமென்ற எண்ணமே அவனுக்கு கிடையாது; ஆபத்துகாலத்துக்கு உதவும்படி முன்னமே சேர்த்துக்கொள்ள வேண்டுமென்ற நினைப்பே கிடையாது. தான் ஆதரிக்க கடமைப்பட்ட குடும்பத்தாரின் ஞாபகமும் கிடையாது. ஆனால் விவேகி அப்படிச் செய்யமாட்டான். பிற்காலத்தை முன்னமே யோசிப்பான். தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் கெட்டகாலம் கிட்டும்போது உதவும்படிக்கு போதுமான பொருளை முன்னதாக சேமித்து வருவான். தன்னை நாடியிருப்பவர்களுக்கும் தனக்கு ப்ரியமானவர்களுக்கும் ஜாக்ரதையாக சேர்த்துவைப்பான்.

17. மணம்புரிகிறவன், எவ்வளவு பெரும் உத்தரவாதத்தை ஏற்றுக்கொள்கிறான்? இந்த உத்தரவாதத்தைப் பற்றி அநேகர் நன்றாய் நினைத்து பார்க்கிறதில்லை. ஆனால் இதுவும் ஈச்வர ஸங்கல்பமே. ஏனெனில், கல்யாணத்தால் நேரிடும் உத்தரவாதத்தை ஒருவன் நன்றாய் நினைத்து பார்ப்பானானால் அவன் இல்லறவாழ்க்கையிலேயே நுழைய மாட்டான். ஆனால் கல்யாணமானவுடன் ஒவ்வொருவனும், தனக்கு உழைக்க வல்லமையிருக்குமளவில், வறுமை என்பது தன் இல்லத்துக்கு வரக்கூடாதென்றும், தான் திடீரென்று இறந்துபோகுங்கால், தன் குழந்தைகளை பிச்சையெடுக்கும்படி கைவிடக்கூடாதென்றும், உறுதியாய் தீர்மானிக்கவேண்டும்.

18. இந்நோக்கத்துடன் நடத்தும் சிக்கனமானது ஒரு முக்ய கடமையாகிறது. சிக்கனமற்றவன் எவனும் ந்யாயமாக இருக்கமுடியாது. சிக்கனமற்றவன் ஸத்யமாக இருக்கமுடியாது. ஊதாரியாயிருப்பவன் தன் பெண்சாதி பிள்ளைகளைக் கொடும் துன்பத்துக்கு ஆளாக்கிறான்.

இந்த ஊதாரித் தன்மைக்கு காரணம் அவிவேகந் தான். ஒரு தகப்பன், தன் குடும்பத்துக்கு ஒன்றும் சேர்த்துவைக்காமல் மீதியாகும் பணத்தையெல்லாம் குடித்துவிடுகிறான், அல்லது வேசிக்கு அழுகிறான்; பிறகு தன் பெண்சாதி பிள்ளைகளை அவர்கள் ஆயுள்காலமெல்லாம் துன்பப்படும்படி நிர்க்கதியாக விட்டுவிட்டு தான் இறந்துபோகிறான். இதைவிட கொடியதுன்பம் உலகத்தில் உண்டா? இதற்கு மேலான பாவமும் உண்டா? இப்படியிருந்துங்கூட, ஒவ்வொரு வகுப்பு ஜனங்களிலும் அநேகர் இவ்விதமாக பழி கொட்டிக் கொள்கிறார்கள். கீழ்வகுப்பாரைப்போல் மேல் வகுப்பாரும் நடுவகுப்பாரும் இக் குற்றத்துக்கு ஆளாகிறார்கள். இவர்கள் தங்கள் வருமானத்துக்கு மீறி ஜீவனம் பண்ணுகிறார்கள். டம்பத்துக்கும், பகட்டுக்கும், அல்ப ஸுகத்துக்கும் ஆசைப்படுகிறார்கள். தாராளமாய் செலவிடுவதற்காகவே அதாவது, உயர்ந்த சாராயம் குடிப்பதற்கும், உயர்ந்த விருந்து அளிப்பதற்குமே பணக்காரராக முயலுகிறார்கள்.

19. நாகரீகம் உயர உயர ஜீவனத்தின் தாரதம்யமும் உயர்ந்துவருகிறது. ஸுமார் 20 வருஷத்துக்கு முன் பட்டணங்களில் காபிக்கடைகளே கிடையா. இப்பொழுது பெரிய தெருக்களிலும் சிறிய சந்து பொந்துகளிலும், தெரு மூலைகளிலும் எங்கு பார்த்தாலும் காபிக் கடைப் பலகைகளைப் பார்க்கலாம். அநேகர் காபி குடிப்பது நாகரீகமென்று துவக்க, அவர்களுக்கு அன்னத்தைப் போல் காபியும் அவசியமான ஆகார பொருளாகிவிட்டது. ஆனால் வேளையில் அன்னம் சாப்பிடாவிட்டால் பாதகமில்லை; அன்னத்தின் தன்மை பெருந்தன்மை. காபியோ, வேளையில் அருந்தாவிட்டால், தலைவலியுண்டாக்கும்; புத்தி ப்ரமையுண்டாக்கும். காபியின் தன்மை அல்பத்தன்மை. இந்த துரப்யாஸமானது குக்ராமங்களில் கூட குடியேறிவிட்டது. காபி அருந்துகிறவன் பெரிய மனுஷன் போலும், காபி அருந்தாதான் சிறு மனுஷன் போலும்; காபி குடிப்பதும், டீ குடிப்பதும் அநேக வ்யாதிகளுக்கு மூலகாரணமாயிருப்பதாக சில சிறந்த இங்லீஷ் வைத்யர்கள் கூறியிருக்கிறார்கள். புகையிலையையும் இதில் சேர்த்துக் கொள்ளலாம்.

20. அநேகர் பணம் ஸம்பாதிப்பதில் அதிக சுறுசுறுப்பாய் இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு பணத்தை சேமிக்கும் வழியாவது, க்ரமமாய் செலவிடும் வழியாவது தெரியாது. பணம் ஸம்பாதிப்பதற்கு தேவையான திறமையும் முயற்சியும் இருக்கிறது; ஆனால் பணத்தை சேமிப்பதற்குத் தேவையான விவேகம் இல்லை. அல்ப ஸுகத்தில் அவாக்கொண்டு அதனால் விளையும் பயனை கவனியாது அதில் ஈடுபடுகிறார்கள். ஆனால் இதை நாம் தீர ஆலோசித்துப்பார்த்து "இத்தன்மையான வீண் செலவுக்கு நாம் இனி உடன்படக்கூடாது", என்று நம்மனதை நாம் திடப்படுத்திக்கொண்டு தீவரமான தீர்மானம் செய்துகொண்டு இதை சுளுவாய் நிறுத்திவிடலாம்.

21. நம்முடைய குடித்தனவாழ்க்கையையும், நம்மை நாடியிருப்பவர்களின் நிலைமையையும் ஸுகமாகச் செய்யவேண்டும் என்ற எண்ணம் தான் சிக்கனகுணத்துக்கு ஆதாரமாகிறது. நம் குடித்தனத்துக்கு அவச்ய மில்லாதவைகளை நீக்கவேண்டும். ஊதாரிக்குடித்தன முறைகளை எல்லாம் விட்டு ஒழிக்கவேண்டும். ஒரு ஸாமான் மிக மலிவாக கிடைத்தபோதிலும், அது அனவச்யமாக இருந்தால் அதை வாங்குவது வீணே. சிறு செலவுகள் பெரும் செலவுகளுக்கு வழி காட்டும். நமக்கு தேவையில்லாத ஸாமான்களை வாங்கும் பழக்கமானது சீக்ரத்தில் இதர காரியங்களில் ஊதாரிச்செலவு செய்யும்படி இடம் கொடுக்கும்.

22. வ்யாபாரம் பண்ணவேணுமென்ற பயித்யமில்லாமல் இருப்பதே ஒருவித வருமான

மாக எண்ணவேண்டுமென்று ஒரு பெரியவர் கூறியிருக்கிறார். பேரம் பண்ணவேணு மென்ற அவாவினால் அநேகர் மதிமயங்குகிறார்கள்.

"இங்கே ஒரு ஸாமான் ரொம்ப மலிவாக இருக்கிறது. இதை நாம் வாங்கவேண்டும்."

"இந்த ஸாமான் உனக்கு ஏதாவது உபயோக முண்டா ?"

"இல்லை. தற்காலம் உபயோகமில்லை. ஆனால் பிறகு ஒருகாலத்தில் உபயோகப்படும்."

ஜனங்கள் இம்மாதிரி அனுவச்யமாய் பேரம் செய்யும் வழக்கத்தில் இருக்கிறார்கள். சிலருக்கு பழைய ஸாமான்களை வாங்குவதில் ப்ரியம் ; அதாவது பழைய பீங்கான், பழைய சித்ரப்படம், பழையசாராயம் முதலியன இவையெல்லாம் பெருப்பேரங்களே. கடன்கொடுத்திருப்பவர்களை த்ரோகம்செய்யாமல் இவர்கள் இவ்வித பேரம்செய்தால் பாதகமில்லை.

23. நாம் மூப்புக்காலத்தில் ஸௌக்யமாயும் ஸந்தோஷமாயும் ஜீவிக்க வேண்டியதற்குத் தகுந்த ஸௌகர்யங்களை இளமையிலும், நடுப்ராயத்திலும் தேடிக்கொள்ளவேண்டும். ஒருவன் தன்வாழ்விலெல்லாம் தக்க சம்பளம்பெற்று வாழ்ந்துவிட்டு, தன் மூப்புகாலத்தில் ஜீவனத்திற்காக பிச்சையெடுக்க நேரிடுவது மகா துக்ககரமான விஷயமல்லவா ? இதை ஆலோசித்துப் பார்த்து மனிதர்கள் தங்களுக்கும் தங்கள் குடும்பத்துக்கும் பிற்காலத்தில் பயன்படும்படியாக சிறுப்ராயத்திலேயே நன்றாக உழைத்து, ஜாக்ரதையாய் சேமித்து, பொருள் சேர்த்து வைக்க ஆவல்கொள்ளவேண்டும். உண்மையில் சிறுப்ராயத்தில்தான் சிக்கனம் பழகவேண்டும். முதுமை ப்ராயத்தில், வருமானத்துக்குள் பட்டு, செலவிடவேண்டும். சிறுவனுக்கோ பின் வாழ்க்கை நெடுங்காலம் இருந்துகொண்டிருக்கிறது. கிழவனோ, தன் வாழ்நாள் முடிவை நெருங்கிக்கொண்டிருக்கிறான். அவன் போகும்போது தன்கூட ஒன்றும் கொண்டுபோவது இல்லை. ஆகிலும் ஜனங்களின் நடவடிக்கை இப்படிக்கொத்ததல்ல.

24. சிறுவர்கள், வயோதிகர்களான தங்கள் தகப்பன்மார்களைப்போல் அவ்வளவு தாராளமாயும், சிலர் இன்னும் ஜாஸ்தியாகவும் செலவிடுகிறார்கள். தகப்பன்மார்கள் வ்ருத்தாப்யத்தில் எவ்வண்ணம் செலவிட்டு ஜீவித்துவந்தார்களோ, அவ்வண்ணமே, சிறுபிள்ளைகளும் சிறுவயதிலேயே ஜீவித்துவரத் துவக்குகிறார்கள். தங்கள் தகப்பன்மார்கள் சிறுவயதிலே செலவிட்டதைவிட, சிறுவர்கள் தங்கள் சிறுப்ராயத்தில் செலவிட்டு சீக்ரத்தில் பெரும் கடனாளிகளாகிறார்கள். தங்கள் அல்ப அவாக்களைத் தீர்த்துக்கொள்வதற்கு பணம் எப்போதும் தேவையாயிருப்பதால், அக்ரம கார்யங்களுக்கும் அந்யாய ஸம்பாத்யத்துக்கும் உள்படுகிறார்கள். சீக்ரத்திலேயே பணம் ஸம்பாதிக்க முயலுகிறார்கள்; பணத்தாசையால் ஸந்தேக வ்யாபாரங்களில் தலையிடுகிறார்கள் ; சக்திக்கு மீறின வ்யாபாரம் செய்கிறார்கள் ; சீக்கிரத்தில் நஷ்டமுண்டாகி ஆழ்ந்தகடனில் முழுகிப்போகிறார்கள். அக்ரம கார்யங்களைச் செய்து அழிந்துபோனதால் கடைசியில் புத்தி வருகிறது. நற்காரியங்களைச் செய்து வந்தால், இக்கேடு அணுகாது.

25. குடும்பத்தலைவர்கள் தங்கள் அயலார்களின் சிக்கன ஜீவனத்தை கவனிக்கவேண்டும். தங்கள் அயலார்களில் எவர்கள் தங்கள் மீதிப் பணத்தை மெத்த லாபகரமாய் உபயோகித்து வருகிறார்கள் என்பதை கவனித்துப் பார்த்து, தாங்களும் அவர்களை அனுஸரிக்கவேண்டும். சிக்கனமானது முக்யமாய் நடவடிக்கையைப் பொறுத்தது. இதை உதாரணங்களால் மிக நன்றாய் எடுத்துக்காட்டலாம் ; இரண்டு ப்ரிட்டிஷ் வேலைக்காரர்களை எடுத்துக்கொள்வோம் ; இவர்கள் தினம் ஒன்றுக்கு 5 ஷில்லிங் (3 ரூ. 12 அ.) ஸம்பாதிக்கிறார்கள். குடும்ப ஜீவனத்தையும் குடும்பச் செலவையும் பொறுத்தமட்டில் இவ்விருவரும் ஒரே

நிலைமையில் இருக்கிறார்கள். அப்படியிருந்தும், இவர்களில் ஒருவன் தான் கூடியவரையில் முயற்சித்துப் பார்த்தாலும் கொஞ்சமேனும் மிச்சம் பிடிக்கமுடியவில்லை என்று சொல்கிறான். அவன் மிச்சம் பிடிப்பதும் இல்லை. மற்றொருவனோ, தான் கொஞ்சம் மிச்சம்பிடிக்க முடியுமென்று சொல்கிறான். அப்படியே மிச்சம் பிடித்தும் வருகிறான். அப்படி மிச்சமான பணத்தை தவறாமல் சேமநிதியில் (ஸேவிங்ஸ் பாங்கு) போட்டுக்கொண்டு வந்து கடைசியில் முதலாளி ஆகிறான்.

26. இங்க்லீஷ் வித்வானாகிய டாக்டர் ஸாமூல் ஜான்ஸன் என்பவர் வறுமையின் கஷ்டத்தை செவ்வையாக அறிந்தவர். ஒரு காலத்தில் தான் எழுதிய கடிதம் ஒன்றில் "சாப்பாடற்றவன்" (Dinnerless) என்று கையொப்பமிட்டார். லண்டன்மா நகரில் ஒரு நாள் ராத்ரி தெருக்களை யெல்லாம் சுற்றிவந்தார். தலை சாய்த்துக்கொள்ள எங்கும் இடம் கிடைக்கவில்லை. தான் இளமையில் பட்டவறுமையை ஜான்ஸன் எப்பொழுது மறந்தவரல்ல. தன் ஸ்நேகிதர்களுக்கும், தன் க்ரந்தங்களைப் படிப்பவர்களுக்கும் வறுமையை விலக்கும்படி எப்பொழுதும் புத்தி கூறிவந்தார். "ஐச்வரியத்துக்கு திறமான ஆதாரம் சிக்கனம்" என்றும் கூறினார். சிக்கனத்தை முன் ஜாக்ரதையின் பெண் என்றும், மித ஆகாரத்தின் தங்கை என்றும், ஸ்வாதந்தரியத்தின் தாய் என்றும் கூறினார்.

27. இன்னும் அவர் சொன்னதாவது, "வறுமையால், அநேகவிதத்தில் பரோபகாரம் செய்ய ஸௌகர்யமற்றுப்போகிறது; மேலும் வறுமையால் தீச்செய்கைகளை வெறுக்க சக்தியற்றுப் போகிறது. ஆகையால் வறுமையை க்ரமமான வழிகளால் நீக்கவேண்டும். ஆகையால் ஏழையாக இருக்கக்கூடாது என்று தீர்மானம்செய்துகொள். உனக்கு எவ்வளவு இருந்தாலும் குறைத்தே செலவிடு. சிக்கனமாயிருந்தால், தான் நிம்மதியாக இருப்பதுடன் பிறருக்கும் உதவி புரியலாம். தனக்கு உதவி தேடுகிறவன் பிறருக்கு எப்படி உதவிபுரிவான்? நாம் செலவிடுவதற்கு முன் நமக்கு போதுமானது இருக்கவேண்டும்."

28. இன்னும் ஜான்ஸன் சொன்னதாவது "மானிடலோகத்துக்கு வறுமையே ஒரு பெரும் சத்ரு. வறுமையானது ஸ்வாதந்த்ரியத்தை கட்டாயம் அழித்துவிடுகிறது; சில தர்மங்கள் செய்வதை கஷ்டமாக்கிவிடுகிறது. வறுமையை கோரமாக உணர்கிறவர்கள் எல்லாரும் நம் பெரியோர்களுடைய பழமொழிகளைக்கற்று, அவர்களைப்போல் செலவைக்குறுக்கி ஜீவிக்கும்படியான பெரும் கல்வியைப்பயின்று கையாடவேண்டும். சிக்கனமின்றி எவனும் பணக்காரனாகான். சிக்கனத்துடன் எவனும் ஏழை ஆகான்."

29. அவச்யமாய் நடவடிக்கைக்குக் கொண்டுவரவேண்டிய கார்யங்களில் சிக்கனத்தையும் ஒன்றாக எண்ணி கையாடுங்காலையில், சிக்கனமாக விருப்பது எக்காலமும் பளுவாகத் தோன்ற மாட்டாது. முதலில் ஊதாரியாகவிருந்து பிறகு சிக்கன குணத்தைப் பழகுவோர்கள் ப்ரதி வாரமும் அவர்கள் ஸ்வல்ப த்ரவியமாவது (ரூபாயாக இருந்தாலும், அணுவாக இருந்தாலும்) சேமித்துவருவதால், தாங்கள் வரவர தர்மகுணத்திலும், விவேகத்திலும், ஸ்வாதந்தரியத்திலும் மேன்மையடைவதைப்பார்த்து வியப்படைகிறார்கள். சிக்கனமாயிருக்கப் பழகும் ஒவ்வொரு முயற்சியிலும் கௌரவம் உண்டாகிறது. சிக்கனத்தைப் பழகுவதே மேன்மையைத் தருகிறது. சிக்கனமானது மனோநிக்ரகத்தையும் நற்குணத்தையும் பலப்படுத்துகிறது. மனதை க்ரமமான வழிகளில் பழக்குகிறது. முன்யோசனையை வ்ருத்தியாக்குகிறது. முன்ஜாக்ரதையை முக்ய குணமாக அமைக்கிறது. அல்ப லோகத்தின் அவாவை அடக்கி தர்மசிந்தையையே யஜமானனாக ஸ்தாபிக்கிறது. எல்லாவற்றையும்விட சிக்கனமுள்ளவனுக்கு ஸுகம் உண்டாகிறது. கவலை நீங்குகிறது; சிக்கனமற்றவன் படும் பலவித தொந்தரவுகளும் குழப்பங்களும் இவனை அணுகா.

ஸி. எஸ். சிவராமக்ருஷ்ண சர்மா.

# Departmental Notes.
# பகுதிக் குறிப்புகள்.
## EDUCATION.
## வித்யாவிஷயம்.

### Using Songs in School Lessons.

பாடங்களைக் கற்பிப்பதில் பாட்டுகளை உபயோகிப்பது.—வாசக பாடங்களில் வரும் கதைகளையும் மற்ற பாடங்களையும் சிறுபிள்ளைகளுக்குக் கற்பிக்கும்போது உபாத்யாயர்கள் அவைகளைப் பாட்டுகளில் அமைத்துக் கற்றுக்கொடுக்கிறார்கள். சிலஸமயங்களில் கதைகளை நாடகரூபமாக அமைத்து பையன்களை நாடகம் நடிக்கச்செய்கிறார்கள். இதுவிஷயமாய் 'செந்தமிழ்'ப் பத்ரிகை பின்வருமாறு அபிப்ராயப்படுகிறது.

பாடல்களை சிறுவருக்குப் பயிற்றுவிக்க வேண்டுமானால், ஸங்கீத முறையையே முக்யமாகக்கொள்ளாமற் படிக்கும்படி முன்னோர்முறையையே பின்பற்றி அகவல், வெண்பா, கலிவிருத்தம் முதலிய சிறிய செய்யுட்களைக்கற்பிப்பதே சிறந்த முறையென்று தோன்றுகிறது. ஸங்கீதமெட்டுடன் கற்பிப்பதற்கு உபாத்யாயர்களுக்கும், மாணவர்களுக்கும் ஸங்கீதமெட்டுக்கேற்ற சாரீரஸம்பத்தும், தாளப்பயிற்சியும் அமைவது அரிதாகையால், அவை, ஸர்வாதிகார யோக்யமில்லாமையாலும், பக்திமார்க்கப்ரஸங்கமல்லாத ஸாமாந்யகதைகளில் நாடகபாத்ரங்களுக்கே யுரியவாகையாலும், அவைவல்லநடர்களைச் சிற்றினத்துள்சேர்த்து எண்ணியிருத்தலாலும், பெருமையுடையராக்க விரும்பும் நம் மாணவர்களைக் கூத்தாடிகள்போல ஸாமான்ய கதைகளை ஸங்கீதமெட்டுடன் கூடிப்பாடும்படி கற்பிக்கமுயல்வதானது தகாதகாரியமா யிருப்பதுமன்றி, இப்பொழுது கல்வி பயிற்றுவதற்கென்று வரையறுக்கப்பட்டிருக்கும் அருமையான ஸ்வல்பகாலத்தையும் பாழாக்க வல்லதாயுமிருக்கிறதென்று தோன்றுகிறது.

### Education in Jails.

ஜெயில் கைதிகளுக்குக் கல்வி.—சென்னை கவர்ன்மெண்டார் முதல்தர ஸென்ட்ரல் ஜெயில்களில் உள்ள கைதிகளுக்கும் சேலத்திலுள்ள இரண்டாம்தரஸென்ட்ரல் ஜெயிலில் உள்ள கைதிகளுக்கும் எலிமெண்டரி கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அந்த ஏற்பாடுகள் த்ருப்திகரமாக நடந்துவருகின்றனவென்று கவர்ன்மெண்டார் சொல்லுகிறார்கள். அநேக இடங்களில் தக்க கனவான்கள் கைதிகளுக்கு மதவிஷயங்களையும் ஸன்மார்க்க விஷயங்களையும் கற்றுக்கொடுத்துவருகிறார்கள். இப்போது கவர்ன்மெண்டார் எல்லா ஸென்ட்ரல் ஜெயில்களிலும், ஜில்லா ஜெயில்களிலுமுள்ள கைதிகளுக்குக் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்றும், தற்போதுள்ள உபாத்யாயர்களின் தொகையை அதிகரிப்பதோடு, வேண்டுமானால் உயர்ந்த உபாத்யாயர்களை நியமிக்கவேண்டுமென்றும் தெரிவித்திருக்கிறார்கள்.

### Scholarship to Indian Women.

இந்திய ஸ்த்ரீகளுக்கு ஸ்காலர்ஷிப்.—பி.ஏ. பரிக்ஷை தேறிய ஒரு ஹிந்து ஸ்த்ரீக்கு இங்க்லண்டில் போய்ப் படிப்பதற்காக, வருஷந்தோறும் 3,000-ரூபாய் பெறுமானமுள்ள ஒருஸ்காலர்ஷிப் கொடுக்கவேண்டுமென்று இந்தியா கவர்ன்மெண்டார் செய்த சிபார்சை இந்தியா மந்த்ரி ஏற்றுக்கொண்டிருக்கிறார். அந்த ஸ்த்ரீ 3, 4, அல்லது 5-வர்ஷகாலம் வைத்யப் பரீக்ஷைக்கு வாசிக்க வேண்டுமாம். ஸ்காலர்ஷிப் வாங்குபவர்கள் சில ஸமயங்களில் வேறு பரீக்ஷைகளுக்கும் படிக்கலாம். கவர்ன்மெண்டாரிடம் ப்ரத்யேகமான அனுமதி பெற்றால் வேறு அன்யநாடுகளுக்கும் வாசிக்கப்போகலாம். இந்த ஸ்காலர்ஷிப்பு அடுத்த வர்ஷமுதல் கொடுக்கப்படும்.

### Medical Inspection of Schools.

பள்ளிக்கூடங்களை வைத்யர்களைக் கொண்டு பரீக்ஷை செய்வது.—பஞ்சாப் கவர்ன்மெண்டார் அந்த மாகாணத்திலுள்ள ஸெகண்டரி பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் ஆண் மாணவர்களுடைய தேக ஸ்திதியைப் பரீக்ஷை செய்வதற்காக பரீக்ஷார்த்தமாக அக்டோபர் மாஸம் 1-தேதி முதல் 1-வர்ஷத்துக்கு 6 அஸிஸ்டெண்ட் ஸர்ஜன்களை நியமித்திருக்கிறார்கள். இவர்கள் 5-பேர் பஞ்சாபில் உள்ள 5-டிவிஷனிலும், ஒருவர் லாகூர் நகரத்திலும் வேலை பார்த்து வருவார்கள்.

# TAMIL LITERATURE.

## தமிழ்க் கல்வி.

**"Yathapi Ganapathim"**

"வாதாபி கணபதிம்".—ஹம்ஸத்வனி ராகத்தை கற்பனம் செய்த ராமஸ்வாமி தீக்ஷிதருடைய மூத்த குமாரராகிய முத்து ஸ்வாமி தீக்ஷதரால் "வாதாபி கணபதிம், பஜேஹம்" என்ற கீர்த்தனம் செய்யப்பட்டதாகத் தெரியவருகிறது. இவரால் செய்யப்பட்ட கவித்வம் விசேஷமாய் வட மொழியிலேயே இயற்றப்பட்டிருக்கின்றன. இந்த "வாதாபி" என்னும் கீர்த்தனத்தில் இப்பொழுது வழங்கிவருகிற ஸங்கதிகள் கீர்த்தனையைச் செய்தவருடையனவல்ல. ஸங்கதிகளொன்றேனு மில்லாமல், வைணீக யுக்தமாய் கமக, ஒரிகை, டால் முதலிய கன நயங்களுடன் இந்த கீர்த்தனை செய்யப்பட்டிருந்தது. இதற்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கிற தாரஸ்தாயி பஞ்சமம் வரையிலுள்ள எல்லா ஸங்கதிகளும் மஹா வைத்யநாதய்யர் காலத்தில் உண்டானவைகளேயாம்.

இந்த கீர்த்தனத்தை ஆராய்ச்சி செய்யு மிடத்து இது சவுக்க கால கீர்த்தனை என்று ஏற்படுகிறது. ஏனெனில் இதில் "கராம்புஜ பாசபீ ஜாபூரம்" என்கிற விடத்திலிருந்து மத்யகால ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிற படியால் கீர்த்தனத்தின் ஆரம்பம் சவுக்க காலமென்று ஸித்தாந்தமாகிறது. இது எத்தனையோ பாடகர்களுடையவும், பிடில் வாத்யக் காரருடையவும் மனதிற் கிசைந்தபடி யெல்லாம் மாற்றப்பட்டு மத்யகால த்ரிகால நடைகளை யடைந்த போதிலும் கீர்த்தனைக் கர்த்தருடைய அஸல் வர்ணமெட்டிலிருந்து நழுவவில்லை. பாடகர்களின் மனோதர்மமான ஸங்கதிகளை பல்லவியில் மாத்ரம் செலுத்தலாமே யொழிய, மற்ற விடங்களிற் செலுத்த இக்கீர்த்தன மிடங்கொடாது.—ஸங்கீத ப்ரகாசிகை.

**Villiputhurar.**

வில்லிப்புத்தூரார்.—மிஸ்டர் வி. ரெங்காச்சாரியார் எம். ஏ. 'தியாஸபிஸ்ட்' என்னும் இங்க்லீஷ் பத்ரிகையில் இந்தக் கவியின் வரலாற்றைப்பற்றி ஒரு வ்யாஸம் எழுதியிருக்கிறார். அதில் அவர் வில்லிப்புத்தூராருடைய காலத்தைப்பற்றி நிச்சயமாய் சொல்லுவதற்கில்லை யென்னும், ஆனால் சரித்ர ஸம்பந்தமான சாஸனங்களையும் தற்போது கிடைத்திருக்கும் கல்வெட்டு முதலிய சாஸனங்களையும் ஆராய்ச்சி செய்து பார்த்ததில் அந்த ஆசிரியர் கி. பி. 1350-ம் வர்ஷ முதல் 1450-வர்ஷத்துக்குள் இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறதென்றும் சொல்லுகிறார்.

**Muthumazhikanji, Moothurai and Nalvali.**

முதுமொழிக்காஞ்சியும், மூதுரை, நல்வழியும் —புதுக்கோட்டையைச் சேர்ந்த கோனாப்பட்டு ஞான ஸம்பந்த நற்சபையார் பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் சிறுவர்களுக்கு உபயோகமாக சிறு நீதிநூல்களை அச்சிட்டு இனாமாகக் கொடுத்துவருகிறார்கள். அவர்கள் இப்படிச் செய்துவருவது மிகவும் ச்லாகிக்கக் தக்கது. தலைப்பில் குறித்த புஸ்தகம் அவர்களுடைய இரண்டாவது ப்ரசுரமாகும். இந்தப் புஸ்தகம் உயர்ந்த கடிதத்தில் நல்ல எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. இந்தப் புஸ்தகத்தின் கடைசியில் நூல்களின் ஆசிரியர்களுடைய வரலாறுகளையும், செய்யுள்களுக்கு குறிப்புரையும் சேர்த்தால் மிகவும் நன்றாயிருக்கும். அந்த ஸபையார் அடுத்த ப்ரசுரங்களில் இவ்விதம் செய்வது விரும்பத்தக்கது. புஸ்தகம் வேண்டுவோர் இந்த ஸபையாருடைய கார்யதர்சிக்கு அரையணா ஸ்டாம்ப் அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

**Our Duties and the Atrocity of Germany.**

நமது கடமைகளும் ஜெர்மனியின் கொடுமையான செய்கையும்.—இது திருஉறந்தை கி. ராஜகோபாலனால் இயற்றப்பட்டது. இதில் கடவுள், பெற்றோர், பிள்ளைகள், ஆசிரியர், யஜமானன், வேலைக்காரன், ராஜாங்கத்தார் ஆகிய இவர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளைப்பற்றியும், இந்திய ராஜாங்கத்தின் அமைப்பைப்பற்றியும் வரிகளைப்பற்றியும் ஜெர்மனியின் கொடுமையான செய்கையைப் பற்றியும் ஸங்க்ரஹமாகக் கூறப்பட்டிருக்கிறது. இந்தப் புஸ்தகம் வேண்டுவோர் திருச்சினாப்பள்ளிக் கடுத்த உறையூர் டி. கே. ராஜ கோபாலனுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**Kamalavathi.**

கமலாவதி.—இது ஒரு தமிழ் நாடகம். விலோனில் மணிப்பாயிலுள்ள அஸிஸ்டெண்ட் போஸ்ட் மாஸ்டர். எஸ். ஸபாபதிபிள்ளை எழுதியது. இது வாசிக்க நேர்த்தியாயிருக்கிறது. இதன் நடை எளிதாயிருப்பதோடு, நாடகத்தின் இடையிடையே பல செய்யுள்கள் ஸமயோசிதமாகச் சேர்க்கப்பட்டுள்ளன. இதன் விலை 6-அணா. வேண்டுவோர் க்ரந்த கர்த்தாவுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

# SCIENCE AND INVENTION.

## சாஸ்த்ரமும் நூதன கற்பிதமும்.

### Risking Death for Science.

**சாஸ்த்ர ஆராய்ச்சிக்காக உயிரைவிடத் துணிந்தது.**—போர்க்களத்திலுள்ள வீரர்களில் அநேகர் காயமடைந்து பற்பல வ்யாதிக்குள்ளாகிறார்கள். அந்த வ்யாதிகளுக்குள் காங்க்ரீன் என்னும் வ்யாதி ரொம்ப கொடுமையானவைகளுள் ஒன்று. இது கண்ட ஸ்வல்ப காலத்துக்குள் வ்யாதியஸ்தர் இறந்துபோவார். இந்த வ்யாதியைத் தொலைக்க வைத்யர்கள் பற்பல ஆராய்ச்சிகள் செய்துவருகிறார்கள். அவர்கள் கினி-பிக் என்னும் ஒரு சிறு ம்ருகத்தின் ரத்தத்தில் காங்க்ரீன் வ்யாதி க்ருமிகளைச் செலுத்தி, அந்த ம்ருகம் அதனால் என்ன கஷ்டமடைகிறதென்று பார்த்து, யுக்தமான மருந்துகளைக் கொடுத்து சொஸ்தப்படுத்த முயலுகிறார்கள். ஒரு மருந்து கினிபிக்கின் அந்த வ்யாதியை ஸ்வஸ்தப் படுத்தக்கூடியதென்று தெரிகிறது. ஆனால் மனிதர் தேகத்தில் அந்த வ்யாதி உண்டானால் அந்த மருந்தால் என்ன பலன் கிடைக்குமென்பது அவ்வளவு வ்யக்தமாகத் தெரியவில்லை. ஸுகதேகமுள்ள ஒரு மனிதருடைய தேகத்தில் ஷை வ்யாதியின் க்ருமிகளைச் செலுத்தி அதற்கு மருந்துகொடுத்துப் பார்த்தால் அது ஸ்வஸ்தமாகும் ஆகாதென்பது தெரியும். ஆனால் அப்படி ஸுக தேகமுள்ள ஒருவர் வ்யாதி க்ருமிகளைத் தமது தேகத்தில் செலுத்த ஸம்மதிப்பது அபூர்வம். இதனால் ம்ருகங்களின்மேல் தான் இதுவரையில் பரீக்ஷைகள் செய்யப்பட்டுவந்தன. ஸமீபத்தில் யுத்த ஆஸ்பத்ரியொன்றில் வேலை பார்த்து வந்த ஒரு ஸ்த்ரீ தான் இதற்கு ஸம்மதித்தால் ஒருவேளை தக்க மருந்து கண்டுபிடிப்பது ஸுலபமாகுமென்று எண்ணி, வைத்யர்களிடம் இதைச் சொன்னால், அவர்கள் தன்னுடைய தேகத்தில் வ்யாதி க்ருமிகளைச் செலுத்த ஸம்மதிக்க மாட்டார்களென்று நினைத்து, ரகஸ்யமாக ஒருநாள் சாஸ்த்ர ஆராய்ச்சி சாலைக்குப் போய் ஒருவருக்கும் தெரியாமல் கொடிய வ்யாதி க்ருமிகள் வ்ருத்தி செய்து வைத்திருக்கும் ஸீஸாவை எடுத்து, சிறிய கினிபிக் ப்ராணிக்கு வ்யாதி உண்டாக்க எவ்வளவு வ்யாதி க்ருமிகள் செலுத்துவார்களோ அதைப்போல் 50-மடங்கு வ்யாதி க்ருமி த்ரவத்தைத் தனது கையில் ஆழமாகக் காயம் செய்து அதில் செலுத்திக்கொண்டாள். பிறகு அவள் டாக்டர்களிடம் போய் விஷயத்தைத் தெரிவித்து, கினிபிக்குக்கு வைத்யம் செய்தது போலவே தனக்கும் வைத்யம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். வைத்யர்களும் கினிபிக்குக்குக் கொடுத்த மருந்துகளைக் கொடுத்ததில் அவள் சீக்ரம் ஸ்வஸ்தமடைந்தாள். இவ்விதம் அவள் தன் தேகத்திலேயே பரீக்ஷை செய்து கொண்டதில், வைத்யர்களுடைய ஆராய்ச்சி பலமடைந்திருக்கிறதென்று தெரிகிறது. அந்த ஸ்த்ரீ சாவுக்குப் பயப்படாமல் இவ்விதம் தன் தேகத்தில் கொடிய வ்யாதி க்ருமிகளைச் செலுத்திக் கொண்டதைப்பற்றி அநேகர் அவளைப்பற்றி ச்லாகித்துப் பேசுகிறார்களாம்.

### Paper from Mullierry.

**முசுக்கட்டைச் செடியிலிருந்து கடுதாசி.**—ஜப்பானியர்கள் முசுக்கட்டைச்செடியிலிருந்து கடுதாசி செய்கிறார்கள். இந்தக் கடுதாசி செய்வதில் சில முறைகளை யனுஸரித்து பற்பல தொழில்களில் உபயோகிக்கிறார்கள். முசுக்கட்டைச்செடியின் நார்களை குறுக்கு நெடுக்குமாய்க் கலந்திராமல் நீளப்போக்கில் அமைத்துச் செய்யப்படும் கடுதாசிதான் ரொம்ப ச்லாக்யமானதாம். இப்படிச்செய்த இரண்டு தாள்களை ஒரு தாளின் நார்கள் இன்னொரு தாளின் நார்களுக்கு குறுக்காக இருக்கும்படி வைத்து ஒட்டி, பிறகு அந்த இரட்டைத்தாளில் ஒருவித மருந்துச் சரக்கைத் தடவிக் காயவைத்தால் அந்தாளை இரண்டுபேர் சேர்ந்து இழுத்தாலும் அது கிழியாதாம். அந்த தாள் செய்வதில் உபயோகிக்கும் மருந்தால், அது ஜலத்தினால் கெடுதலடைவதில்லையாம். அதை வெகுநேரம் ஜலத்தில் அமிழ்த்திவைத்திருந்தாலும் பாதகமடைவதில்லை. இதைக்கொண்டு ஸப்மரீன் கப்பல்களுக்கு உயிர்ப்படகுகள் செய்யப்போகிறார்கள். அந்தக் கடுதாசியைக்கொண்டு அநேக சிறிய குழாய்கள் செய்து அவைகளில் காற்றை யடைத்து படகுகள் செய்வதில் உபயோகிப்பார்கள். இந்தப் படகில் ஏதாவது மோதி, அதில் ஒருபாகம் சேதமடைந்தாலும், பாக்கிக்குழாய்கள் சேதமடையாதிருப்பதால், படகு மூழ்கிவிடுவதில்லை.

இந்தக் கடுதாசியை ஜலந்தாக்காதபடி செய்ய முன் சொன்ன மருந்தைஉபயோகிக்காமல் கொஞ்சம் தாழ்ந்த வகை மருந்துகளை உபயோகித்து குடைத்துணிகள், மழைக்குப போட்டுக்கொள்ளும் சட்டைகள் முதலியவைகள் செய்யலாம். இந்தக் கடுதாசியை கயிறாகவும் திரிக்கலாமாம். ஆகாயவிமானிகள் இறங்குவதற்கு உதவும் பாரச்சுட்டுகள் என்னும் குடைகள் செய்வதற்கும் இது உதவும். இதைக்கொண்டு, ஏரோப்ளேனின் சிறகுகள், ஆகாயவிமானிகளுக்கு உடைகள், வீட்டுச்சுவர்களில் உபயோகிக்கும் கடுதாசிகள், ஜமக்காளங்கள் முதலியவைகளும் செய்யலாமாம்.

# SANITATION AND MEDICINE.

## ஸுகாதாரமும் வைத்யமும்.

### Habits of Mosquitoes.

கோசுக்களின் இயல்பு.—கொசு உபத்ரவம் அதிகமாக உள்ள காலங்களில் மஞ்சள் நிறமான உடைகளை உடுத்திக்கொண்டால், அவைகள் அந்தஉடைகளண்டை வரவே வராவென்று ஒரு பத்ரிகை எழுதுகிறது. ஆழ்ந்த நீலநிறமான உடை உடுத்திக்கொண்டால் சுற்றிலுமுள்ள கொசுக்களெல்லாம் அந்த உடைகளின் மேல் வந்து உட்கார்ந்துகொண்டு, அந்த நீலநிறத்துணியை உடுத்தி யிருப்பவரை ரொம்ப ஹிம்ஸை செய்யும். கொசுக்களுக்கு மஞ்சள் நிறம் ஆகாது. ஆழ்ந்த நீல நிறம் அவைகளுக்கு ரொம்ப ப்ரியமானவை.

இதுமாத்ரமல்ல : கொசுக்களுக்குப் பேசுபவர்களைக் கண்டால் ரொம்ப ப்ரியம். ஸாயங்கால நேரத்தில் நாலைந்துபேர் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தால், கொசுக்கள் பேசுகிறவர்களையே உபத்ரவப்படுத்துமாம். பேசாமல் உட்கார்ந்திருப்பவர்கள் வழிக்குப் போவதில்லையாம்.

வ்யாதியஸ்தர்கள் உள்ள அறைகளிலும் ஹாஸ்பிடல்களிலும் ஒரு மூலையில் ஆழ்ந்த நீலநிறமான துணிகளை (திரை)த் தொங்கவிட்டால் அந்த அறைகளில் இருக்கக்கூடிய கொசுக்கள் வ்யாதிஸ்தர்களை உபத்ரவம் செய்யாமல், திரையின்மேல் உட்கார்ந்து கொண்டிருக்குமாம். ஒரு டாக்டர் இந்தியாவிலுள்ள சில ஆஸ்பத்ரிகளில் இந்தமாதிரி செய்து பார்த்ததில் ரொம்ப அனுகூலமேற்பட்டதாம்.

ஆப்ரிக்காவிலுள்ள காட்டுஜாதியார் வஸிக்கும் தேசங்களின் நிலைமையை ஆராய்ச்சி செய்யப்போன ஒரு வித்வான், புறப்படுவதற்கு முன், தான் எடுத்துக் கொண்டுபோக உத்தேசித்திருந்த ஒரு கூடாரத்தின் ஓரங்களிலெல்லாம் ஆழ்ந்த நீலநிறமான துணிவைத்துத் தைத்தாராம். தாம் உடுத்திக்கொள்ள காக்கி நிறமுள்ள உடுப்புகள் எடுத்துக்கொண்டாராம். அவர் ஆப்ரிக்காவில் கொசுக்கள் நிறைந்த இடங்களில் போகும்போது அவருக்குக் கொசுக்களால் அதிகபாதகம் ஏற்படவில்லையாம். எங்கேயாவது கூடாரத்தை யடித்துத்தங்கினுல், அங்குள்ள கொசுக்கள், அவர் காகி உடுப்பு தரித்திருந்ததால், அவரை விட்டுவிட்டு, கூடாரத்திலுள்ள நீல நிறமான பாகங்களில்போய் உட்கார்ந்துகொள்ளுமாம்.

கொசுக்கள் எந்த நிறங்களை வெறுக்கின்றன ; எந்த நிறங்களை விரும்புகின்றன என்பதை யறியும்பொருட்டு ஒரு வித்வான் பற்பல வர்ணங்கள் பூசிய பல பெட்டிகளை அதிககொசுக்கள் உள்ள இடத்தில் வைத்துப் பார்த்ததில் சிலமணிநேரத்தில் ஆழ்ந்த நீலவர்ணம்பூசியிருந்த பெட்டியில் 108 கொசுக்கள் வந்துதங்கினவாம். இளமஞ்சள் நிறம் பூசியபெட்டியில் ஒருகொசுக்கூட வந்து உட்காரவில்லையாம். கெட்டி சிவப்பு நிறம் பூசியிருந்த பெட்டியில் 90 கொசுக்கள்வந்து தங்கினவாம். இளம்பச்சைநிறம் பூசியிருந்த பெட்டியில் 4 கொசுக்களும், இளம் நீலநிறப்பெட்டியிலும், காவிநிறப்பெட்டியிலும் தனித்தனியே 3 கொசுக்களும், வெள்ளைப் பெட்டியில் 2-ம், ஆரஞ்ச் நிறப்பெட்டியில் 1-ம் இருந்தனவாம்.

### Asiatic Pennywort.

வல்லாரை.—கண்டரோகம், ரத்தக்ரூணியால் உண்டாகிற கடுப்பு, மலக்கழிச்சல், உடம்பெரிவு, மேகம், உள்மூலம், குஷ்டம், புண், மேகப்புடைகள் இவைகளுக்கு இதன் இலையை நிழலிலுலர்த்தி 5-க்ரெய்ன் வீதம், நாள் மூன்றுமுறை கொடுத்துவரின் ஸுகமுண்டாம். இதில் வெளிறல்நிறமும் கைப்புங்காரப்புமுடைய தைலஸத்துண்டு. இது வெயிலில்வைத்தால் கெட்டுப்போகும். இலைச்சூரணத்தைப் புண்ணில் தூவினுலும் அல்லது பச்சையிலையைத்துவைத்துத் தண்ணீர்விட்டு இளக்கிவைத்துகட்டினுலும் புண்கள்மாறும். மேகப்புடைகளுக்கு உள்ளுக்கும் வெளிக்கும் ப்ரயோகிக்கலாம். குஷ்டம் சருமநோய் இவைகளுக்குத் தக்க பூச்சுமருந்து. உள்ளுக்குக்கொடுத்துச் சில நாளின் பின் தேகமுழுதுஞ் சொறிகண்டால், மருந்தைநிறுத்திப் பேதிக்குக்கொடுத்து ஒருகிழமை சென்றபின் மறுபடி கொடுக்கலாம்.

### Garlic for Wounds.

வெள்ளுள்ளி ரணங்களைப்போக்கும்.—இடித்துப் பிழிந்த வெள்ளுள்ளியின் சாறு ஒரு பங்கும், ஆவிநீர் நான்கு பங்கும் கலந்து ஒரு த்ரவம் தயார்செய்யவும். ஒரு வ்யாதிக்கேவில் சீழ்ப்பிடித்துக்கொண்டிருந்த ரணங்களின்மேல் தினத்திற்கு இரண்டுமுறையாக அந்த த்ரவத்தை உபயோகித்ததில், இருபத்திநன்குமணி நேரத்திற்குள் குறிப்பிடத் தகுந்தவாறு அந்த ரணம் ஆறிவந்தது. பிறகு நாற்பத்தினுலுமணி நேரத்தில் மிகவும் த்ருப்திகரமான குணம் உண்டாய் அதனுல் ஏற்பட்ட விகாரங்கள் முறறிலும் நிவர்த்தியாய்விட்டன. வெள்ளுள்ளியின் சாற்றில் நூற்றுக்கு ஒன்று அல்லது இரண்டு பங்கு ஆல்கஹால் என்னும் சாராயத்தை சேர்த்துவைத்தால் ஒன்று அல்லது ஒன்றரைமாதம் வரையில் அதைக் கெட்டுப்போகாமலிருக்கச் செய்யலாமென்று இரண்டு வைத்யர்கள் தெரிவிப்பதாக 'வைத்ய கலாநிதி' எழுதுகிறது.

# LAW.

# சட்டம்.

**Partition of Joint Family.**

அவிபக்தகுடும்பத்தில் பாகம் செய்தல்.—ஒரு தகப்பன் அவருடைய இரண்டு புத்ரர்கள், இறந்துபோன அவருடைய ஒருபுத்ரனின் பிள்ளையாகிய பேரன் ஆகிய நால்வர் சேர்ந்த ஒரு அவிபக்த ஹிந்து குடும்பத்தில் பாகம் செய்யும்போது,ஒவ்வொருவர்வசத்திலுமுள்ளன வாய் பாகம் போடக்கூடிய ஸ்தாவர ஜங்கம ஸொத்துக்களுக்கு தனித்தனி ஜாப்தாக்கள் தயாரித்தார்கள். இவைகளையெல்லாம் ஒரு புஸ்தகத்தில் எழுதி ஒவ்வொரு ஸொத்துக்கும் மதிப்புப்போட்டு, எல்லாவற்றையும் கூட்டி,இன்னருக்கு இவ்வளவு ஸொத்து உண்டென்று தீர்மானித்து அந்தப்புஸ்தகத்தில் எழுதினார்கள். இவைகளினடியில் "இங்கே குறித்த ஸாக்ஷிகளுக்கு முன்பாக நாங்கள் பாகம் செய்து பிரித்துகொள்கிறோம்" என்று எழுதப்பட்டிருந்தது. அதன்கீழ் ஸாக்ஷிகளின் பெயரும், பாகம் செய்துகொண்டவர்களின் பெயரும் எழுதப்பட்டிருந்தன. இப்படிப் புஸ்தகத்தில் எழுதுவதானது ஸாக்ஷிகள் முன்னிலையில் குடும்பம் பாகமாயிற்றென்று காட்டுவதாகும். இது ஸ்தாவர ஸொத்துக்களை பாதிக்கிறதால், இது ரெஜிஸ்டர் செய்யப்பட்டாலொழிய, இதை குடும்பம் பாகமாயிற்றென்பதை ரூபிக்கக்கூட ருஜுவாக ஒப்புக்கொள்ளப்படமாட்டாது.

2 லா வீக்லி 1184.

ஒரு ஹிந்துவும் அவருடைய ஸகோதரர் மகனாகிய மைனர்பையனும் சேர்ந்த ஒரு ஹிந்து அவிபக்த குடும்பத்துக்கு வரவேண்டியதாய் நிலுவையா யிருக்கும் தொகைகள், கையிருப்புரொக்கம், ஸ்தாவரஜங்கம ஸொத்துகள் ஆகிய இவைகளை ஒருதஸ்தாவேஜில் குறிப்பிட்டு, அந்த இரண்டுபேரும் பாகம்செய்துகொண்டதாக எழுதியிருந்தது. ஆனல் அந்தப்பத்ரம் ரெஜிஸ்டர் செய்யப்படவில்லை. அப்படியானல் இருவரும் பாகமாயிற்றென்பதைக் காட்ட இந்தப்பத்ரத்தை ருசுவாக ஏற்றுக்கொள்ளக்கூடாது. இந்த பத்ரத்தில்கண்ட நடவடிக்கை ஒரே நடவடிக்கையாதலால், அந்தப் பத்ரத்தைக் கொண்டு ஜங்கம ஸொத்துக்களை பாகம்பண்ணிக் கொண்டதாகச் சொல்வதற்குமில்லை.

**Mortgage by Conditional Sale.**

விற்பனை நிபந்தனையின்மேல் பெந்தகம் வைத்தல்.—வ்யாஜ்ய ஸொத்துக்கள் ஆதியில் வாதிக்கு ஸொந்தமாயிருந்தன. அவர் அந்த ஸொத்துக்களை தி. என்பவருக்கு விற்பனை செய்வதாக ஒருபத்ரம் எழுதிக்கொடுத்து, ஸொத்துக்களை தி. வசம் சேர்த்தார். வாதி ஸொத்துகளின் க்ரயத்தை ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் தமக்குச் செலுத்திவிட்டால் அந்த ஸொத்துக்களை வாதி வசம் சேர்ப்பதாக தி. என்பவர் வாதிக்கு ஒரு எதிரிடைப்பத்ரம் எழுதிக் கொடுத்தார். பணம் செலுத்துவதற்குக் குறிப்பிட்டிருந்த காலத்துக்குள் வாதி பணத்தைச் செலுத்தாததனல் தி. என்பவர் 1893-ம் வர்ஷம் ஜூன்மாஸம் 16-ந்தேதி வீ. என்பவருக்கு அந்த ஸொத்துக்களை விற்றார். வீ. என்பவருக்கு தி. என்பவர் பெந்தகம் வாங்கினவரென்பது தெரியும். வீ. என்பவர் அந்த ஸொத்துக்களை 1909-ம் வர்ஷம் ஆகஸ்ட்மாஸம் 13-ந்தேதியில் ப்ரதிவாதிக்கு விற்றார். தி-க்கு அந்த ஸொத்துகளின்மேல் பெந்தகபாத்யதை மாத்ரந்தான் உண்டென்னும் விஷயம் ப்ரதிவாதிக்கு ஸொத்துகளை விலைக்கு வாங்கும் போது தெரியாது.

1913-ம் வர்ஷத்தில் வாதி ஸொத்துக்களை மீட்டுக் கொள்வதற்காக ப்ரதிவாதியின்மேல் வ்யாஜ்யம் போட்டார். வ்யாஜ்ய தேதிக்கு முந்தின 3-வர்ஷத்துக்குள்ளாகத்தான் ப்ரதிவாதி வீ-யினிடமிருந்து ஸொத்துக்களை வாங்கின விஷயம் வாதிக்குத் தெரியும்.

அப்படியானல் வாதிக்கு அந்த ஸொத்துக்களை மீட்டுக்கொள்ள அதிகாரமுண்டு.

**Mortgaging Minor's Property.**

மைனருடைய ஸொத்தை பெந்தகம் வைப்பது.—ஒரு ஹிந்து மைனர் பையனுடைய தாயாரும், கார்டியனுமாகிய ஒருஸ்த்ரீ அவனுக்கு ஸொந்தமான ஸ்தாவரஸொத்துக்களை பெந்தகம் வைத்தாள். பெந்தகப்பத்ரத்தில் தாயார் மைனருடைய கார்டியனாக இருந்து பெந்தகம் வைத்ததாக எழுதப்படவில்லை. ஆனல் பெந்தகம் வைத்த ஸொத்தை விவரிக்கும்பாகத்தில், பையனுடைய கார்டியனாகிய அவள்பெயரால் ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருந்ததாக எழுதியிருந்தது.

அப்படியானல், அந்த பெந்தகப்பத்ரமானது தாயாரால் கார்டியன் என்னும் நிலைமையில் ரெஜிஸ்டர் செய்யப்பட்டதாக ஆகவேண்டும். பையன் தான் மேஜராகி 3-வர்ஷமானபிறகு அந்த பெந்தகத்தை ரத்துசெய்ய வ்யாஜ்யங்கொண்டுவந்தால், வ்யாஜ்யம் காலாவதியாகி விடுகிறது.

## PERSONAL NOTES.

## மனிதர்களைப்பற்றிய குறிப்புகள்.

**General Castelnau.**

ஜெனரல் காஸல்நௌ.—ப்ரெஞ்ச் தரைப்படைக்குத் தலைவராயிருந்த ஜெனரல் ஜாப்ரேயுக்கு பதிலாக ஜெனரல் காஸல்நௌ தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்த யுத்தம் ஆரம்பித்த சிறிதுகாலத்துப் பிறகு முதல்கொண்டு அவர் ஜெனரல் ஜாப்ரேயின் ஆப்த மித்ரராக இருந்துவந்தார்.

அவர் 1850-ம் வர்ஷம் ஜனனமானார். அவர் 18-வது வயஸு வரையில் ஒரு பாதிரிக் காலேஜில் வாசித்து வந்து, பிறகு ராணுவப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து வாசித்தார். ஆனால் அவர் தமது ராணுவப்படிப்பை முடிப்பதற்குமுன் 1870-ம் வர்ஷத்தில் ப்ரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் நேரவே அவர் ராணுவப் பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டு, 1870-ம் வர்ஷம் அக்டோபர் மாஸத்தில் ஒரு ரெஜிமெண்டில் ஸப்லெப்டினண்டாகச் சேர்ந்துகொண்டார். பிறகு மூன்று வாரங் கழித்து அவருக்கு காப்டன் பதவிகிடைத்தது. அதற்கு அடுத்த மாஸம் அவர் யுத்தத்தில் சேர்ந்து சண்டை செய்தார். ஆனால் ப்ரான்ஸானது யுத்தத்தில் தோற்றுப்போயிற்று. அதுமுதல்கொண்டு அவர் மற்ற ப்ரெஞ்ச் சேனைத்தலைவர்களைப் போலவே ஜெர்மனியின்மேல் எப்பொழுது பழிக்குப்பழி வாங்குதென்று எண்ணிவந்தார்.

1870-ம் வர்ஷத்து யுத்தம்முடிந்துபோய் ஸமாதானம் ஏற்பட்டபிறகு அவர் ராணுவ உத்யோகஸ்தர்களுடைய காலேஜில் சேர்ந்து வாசித்து, தமது உழைப்பாலும், புத்தி சாதுர்யத்தாலும் தமது ராணுவத் திறமையை அபிவ்ருத்தி செய்து புகழடைந்தார். அவர் 1885-ம் வர்ஷத்தில் 17-வது ஆர்மிகோரில் ஒரு கர்னலாக நியமிக்கப்பட்டார். அடுத்த வர்ஷம் ராணுவ உத்யோகஸ்தர்கள் ஆபீஸில் சேர்ந்துகொண்டார். அங்கே அவர் தமது ஸாமர்த்யத்தைக் காட்ட ஸந்தர்ப்பம் வாய்த்தது. அவர் 3-வர்ஷகாலம் ஸைன்யத்தை சேசரித்தல், ஒழுங்குபடுத்துவது முதலிய விஷயங்களை கவனித்து வந்தார். அதற்குப் பிறகு நான்ஸிபட்டணத்தில் ஒரு ரெஜிமெண்டுக்குத் தலைவராக நியமிக்கப்பட்டார்.

1906-ம் வர்ஷந்தான் அவருக்கு ஜெனரல் பதவி கிடைத்தது.

இந்த யுத்த ஆரம்பத்தில் அவர் லொர்ரெய்னிலுள்ள முக்யமான ஸைன்யத்துக்குத் தலைவராக நியமிக்கப்பட்டார். அவர் அங்கே காட்டிய ஸாமர்த்யத்தால் அவருடைய க்யாதி பரவலாயிற்று. மார்ன் நதிச்சண்டைக்குப்பிறகு அவருடைய ஸைன்யம் வேறிடத்துக்கு மாற்றப்பட்டது. சென்ற ஸெப்டம்பர்மாஸத்தில் அவர் சாம்பேன் ப்ரதேசத்தில் முன் சென்ற ஸைன்யத்துக்குத் தலைவராக இருந்தார். அந்த ஸமயம் அவருடைய ஸைன்யம் 50000-எதிரிகளைக் கைதியாக்கிற்று.

ஜெனரல் காஸல்நௌவுக்கு மன உறுதியும், சரியான தீர்மானம் செய்யும் இயல்பும், தைர்யமும், உண்டு.

**General Sir Douglas Haig.**

ஜெனரல் ஸர் டொக்ளாஸ் ஹேய்க்.—இவர் ஸர் ஜான் ப்ரெஞ்சுக்கு பதிலாக ப்ரிட்டிஷ் படையெடுப்பு ஸைன்யத்துக்குத் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இவர் 1861-ம் வர்ஷம் ஜனனமானார். இவர் பாலயத்தில் ஆக்ஸ்பர்டில் வாசித்துப் பிறகு 1885-ம் வர்ஷத்தில் ராணுவத்தில் சேர்ந்து கொண்டார். இவர் ஸூடானிவிலும், தென்னாப்பிரிக்காவில் போயர் சண்டையிலும், யுத்தம் செய்திருக்கிறார். போயர் சண்டையில் இவர் கர்னல் ப்ரெஞ்சின் கீழ் வேலை பார்த்து வந்தார். அங்கே அநேக இடங்களில் ஸர் ஜான் ப்ரெஞ்சோடு சேர்ந்து போர் செய்திருக்கிறார். இவர் சிலகாலம் யுத்த மந்த்ரி ஆபீஸில் சேர்ந்து வேலை பார்த்திருக்கிறார். யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன் இரண்டு வர்ஷகாலம் இங்க்லண்டில் அல்டர்ஷாட் என்னுமிடத்திலுள்ள சேனைக்குத் தலைவராக இருந்து வந்தார். இந்த யுத்தத்தில் முதலில் அவருடைய பெயர் ப்ரஸித்தமாகவில்லை. ஏனெனில் யுத்தத்தின் முதல் பாகத்தில் நேசத்துருப்புகள் மேற்குப் போர் முகத்தில் பின் வாங்கிக் கொண்டிருந்தன. பின் வாங்கும் ஸைன்யத்தில் எதிரிப்பக்கமாக இருக்கும் பாகந்தான் விசேஷமாக யுத்தம் செய்ய வேண்டியிருக்கும். அந்த ஸமயம் ஸர் டொக்ளாஸ் ஹெய்க் ஸைன்யத்தின் முன் பக்கத்திலிருந்த படியால் அவருடைய கீர்த்தி பரவுவதற்கு ஏற்ற ஸந்தர்ப்பம் வாய்க்கவில்லை. ஆனால் ஏன் நதிச்சண்டை யாரம்பிக்கவே இவருடைய ஸாமர்த்யம் வெளிக்கு வரலாயிற்று. அவர் மன உறுதியோடும், தைர்யத்தோடும் தமது ஸைன்யப்பிரிவை நடத்தி வந்தார். இவரைப்பற்றி ஸர் ஜான் ப்ரெஞ்ச் தமது ரிபோர்ட்டுகளில் அநேக தடவை புகழ்ந்து ப்ரஸ்தாபித்திருக்கிறார்.

இவர் சிறு ஸைன்யப்பிரிவுகளை யன்றி பெரிய ஸைன்யங்களையும் ஸாமர்த்யமாய் நடத்தக் கூடியவர்.

# SOCIETY AND RELIGION.

## ஜன ஸமூகமும் மதமும்.

### Indian Social Conference.

இந்திய ஆசார திருத்த கான்பரேன்ஸ்.—20-வது இந்திய ஆசார திருத்த கான்பரென்ஸ் இந்த மாஸம் 30-ந்தேதியன்று பம்பாயில் கூடிற்று. ப்ரொபஸர் டி. கே. கார்வே ப்ரெஸிடெண்டாக இருந்து ப்ரஸங்கம் செய்தார். அவர் விசேஷமாக பெண்கல்வியைப் பற்றிப் பேசினார்.

எந்த சீர்திருத்தமும் செய்வதற்குக் கல்வி ஆதாரமானது. ஒவ்வொரு ஸ்த்ரீ, புருஷர், குழந்தையும் எழுதப்படிக்க அறிந்திருந்தாலொழிய ஜன ஸமூகத்தை சீர்திருத்துவதென்பது முடியாது. பையன்களுக்குக் கல்வி கற்பிக்கவேண்டியது அவச்யமாவது போலவே பெண்களுக்குக் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்யவேண்டியது அவச்யமாகும்.

கவர்ன்மெண்டார் ரொம்ப உயர்ந்த கல்வி கற்பிக்க எண்ணியிருக்கிறார்கள். எல்லாப் பெண்களுக்கும் ஸாமான்ய கல்விக் கிடைக்கும்படி செய்யவேண்டுமே யொழிய சில பெண்களுக்கு மாத்ரம் உயர்ந்த கல்வி கற்றுக் கொடுக்க நினைக்கக்கூடாது. எல்லாவிடங்களிலும் பெண்பாடசாலைகள் ஸ்தாபிக்கலாமென்றால் பயிற்சியடைந்த உபாத்யாயர்கள் போதுமான அளவு கிடைக்கவில்லையென்று கவர்ன்மெண்டார் சொல்லுகிறார்கள். ஆனால் தற்போது அநேக ஸ்த்ரீகள் பயிற்சியடையத் தயாராயிருக்கிறார்கள். பயிற்சியடைய வேண்டியவளவு ட்ரெய்னிங் பள்ளிக்கூடங்கள் தானில்லை.

பெண்கல்வி ஏற்பாட்டில் சில குறைகள் இருக்கின்றன. (1) பெண்கள் பாடசாலைகளின் தொகை ரொம்ப குறைவாயிருக்கிறது. (2) எத்தனை ஸ்த்ரீகள் உபாத்யாயர் தொழிலுக்குப் பயிற்சியடைய முன் வருகிறார்களோ அதற்குத்தகுந்த அளவு போதனுமுறைப் பள்ளிக்கூடங்கள் இல்லை. (3) இப்போதுள்ள ட்ரெய்னிங் காலேஜுகளில் பெண்கள் சேர்ந்து பயிற்சியடையலாமென்றால் அவர்களை அதிகமாகச் சேர்த்துக்கொள்ளவுமிடமில்லை. (4) காலேஜுகளில் ஸ்த்ரீகளைச் சேர்த்துக்கொள்ள ஏற்படுத்தியிருக்கும் வயஸளவானது ரொம்பக்குறைந்திருக்கிறது.

கவர்ன்மெண்டார் இந்தக் குறைகளை நிவர்த்தி செய்ய வேண்டும்.

உபாத்யாயர்களாகப் பயிற்சியடையவரும் ஸ்த்ரீகளில் பெரும்பாலார் விதவைகளாக இருப்பதாலும், அவர்கள் அதிக வயஸான பிறகே இந்த வேலைகளுக்கு வருவதாலும், அவர்களுடைய ஸௌகர்யத்துக்காக வயஸு அளவை உயர்த்தவேண்டும். இன்னும் அதிகமாக போதனுமுறைப் பாடசாலைகளை ஏற்படுத்தவேண்டும்.

ஒவ்வொரு க்ராமத்திலும் ஒரு பெண்பாடசாலை வீதம் ஏற்படுத்துவதென்பது இன்னும் வெகு காலத்துக்கு முடியாதாகையால், பையன்களுக்கான எலிமெண்டரிப் பள்ளிக்கூடங்களில் பெண்களையும் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யவேண்டும்.

பெண்கள் ஸெகண்டரி ஸ்கூல்களில் சேர்ந்து வாசிக்கப்போதுமான அளவுக்கு பெண்கள்ஸெகண்டரிஸ்கூல்களில்லையாகையால் கவர்ன்மெண்டார் ஒவ்வொரு டிவிஷனிலும் ஒரு பெண்கள் ஹைஸ்கூல் ஸ்தாபிக்கவேண்டும். அதுவும் போதாவிட்டால் பையன்களுக்கான ஸெகண்டரி ஸ்கூல்களில் பெண்களையும் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யவேண்டும். உயர்தரப் படிப்பை அபேக்ஷிக்கிறவர்கள் இப்போதுபோலவே காலேஜுகளில் சேர்ந்து வாசிக்கலாம். அதற்கென்று புதிதாக பெண்கள் காலேஜ் ஸ்தாபிக்கவேண்டியதில்லை.

பெண் கல்வி விஷயத்தில் இரண்டு முக்யமான சீர்திருத்தங்கள் செய்யவேண்டும். (1) பெண்கள் பேசும் பாஷையிலேயே பாடங்களைக் கற்பிக்கவேண்டும். (2) பெண்கள் பிற்காலத்தில் செய்யவேண்டிய கடமைகள் பையன்களுடைய கடமைகளைப்போலிராமல் வேறாக இருப்பதால், அவர்களுடைய பிற்கால வாழ்க்கையை அனுஸரித்து அவர்களுக்குக் கல்வி கற்பிக்க வேண்டும்.

பிறகு ப்ரொபஸர் கார்வே தமது ப்ரஸங்கத்தில், பெண்கள் தங்கள் படிப்பை முடிக்குமுன்னால் அவர்களுக்குக் கல்யாணம் செய்துவைக்கக்கூடாதென்றும், அவர்கள் இஷ்டப்பட்டால் கல்யாணமாகாத கன்னிகைகளாகவே இருக்கும்படி விடவேண்டுமென்றும், சிசுவிவாகத்தை நிறுத்திவிட வேண்டுமென்றும், பெண்களின் கலியாண வயஸை உயர்த்தவேண்டுமென்றும், விதவைகளுக்கு மறுபடியும் கல்யாணம் செய்துகொள்ள அனுமதி கொடுக்கவேண்டுமென்றும், தாழ்ந்த ஜாதிகளை உயர்த்தவேண்டுமென்றும் பேசினார்.

இந்தக் கான்பரென்ஸில் ஜாதி ஏற்பாட்டை ஒழித்தல், விதவாவிவாகம், பெண்களின் கல்யாண வயஸை 16-வர்ஷமாக உயர்த்தல். விதவைகளுக்குக்கல்வி, தாழ்ந்த ஜாதியை உயர்த்துவது முதலிய விஷயங்களைப்பற்றித் தீர்மானங்கள் செய்யப்பட்டன.

## HINTS AND RECIPES.

## யுக்திகளும் முறைகளும்.

**Preserving Fruits.**

பழங்களைக் கெடாமல் வைத்திருத்தல்.—ஸ்வல்ப காலத்துக்குப் பழங்களைக் கெடாமல் வைத்திருக்க வேண்டுமானல், பின்வரும் முறையை அனுஸரிப்பது நல்லது. நல்ல பழங்களைத் தெரிந்தெடுத்து, நன்ருய் சுத்தம் செய்யவேண்டும். கொஞ்சம் அழுகும்போலிருந்தாலும், ரொம்பப் பழுத்துப்போனதாக இருந்தாலும் அவைகளை பத்ரப்படுத்திவைப்பதில் பயனில்லை. பழங்களை பத்ரப்படுத்த நல்ல சுத்தமான தகர டப்பாக்களை உபயோகிக்கவேண்டும். அவைகளுக்குப் போடும் மூடிகள் நன்ருய் பொருந்தி யிருக்கவேண்டும். டப்பாவின் உள்புறம் சுத்தமாயிருப்பதோடு ஈரமாயில்லாமல் காய்ந்து மிருக்கவேண்டும். ஒருசட்டியில் சுத்தஜலத்தை ஊற்றிக் காய்ச்சி, கொதிப்பதற்கு சற்று முன்னல், தெரிந்தெடுத்த பழங்களை ஒருநிமிஷநேரம் ஜலத்தில் அமிழ்த்தி வைத்திருந்து வெளியிலெடுத்து, ஜலம் தானகவடிந்து பழத்தின்மேல் ஈரம்காய்ந்து போன பிறகு டப்பாக்களில் வைத்து மூடிவிடவேண்டும். டப்பாக்களை குளிர்ச்சியான இடங்களில் வைத்திருக்க வேண்டும். பழங்களின்மேல் பூஞ்சண க்ருமிகள் இருக்கும். அவைகளை வெந்நீரில் அமிழ்த்தினல் க்ருமிகள் இறந்துபோகும்.

பழங்களை பத்ரப்படுத்திவைக்க கார்க்கின்தூள் ரொம்ப ச்லாக்யமானது. காற்றின் சீதோஷ்ணபேதத்தால் ஏற்படக்கூடிய கெடுதிகள் பழத்துக்கு வராதபடி கார்க்குத்தூள் காக்கக்கூடியது. கார்க்குத்தூளை உபயோகித்துப் பழங்களைக் கெடாமல்வைத்திருக்கும் முறைபின்வருமாறு. சில நல்ல மரப்பெட்டிகள் ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும். பத்ரப்படுத்தவேண்டிய பழங்களை நல்லதாயும், மேலே ஈரமில்லாததாயும் பார்த்துப் பொறுக்கிக் கொள்ளவேண்டும். பெட்டியின் அடியில் இரண்டங்குல கனத்துக்கு கார்க்குத்தூளைப் பரப்பி அதன் மேல் பழங்களை ஒன்றின்மேலொன்று படாமல் வைத்து அதன்மேல் ஒரு அங்குல கனத்துக்கு கார்க்குத்தூளைத் தூவவேண்டும். பழங்களுக்கு இடையில் உள்ள த்வாரங்களில் கார்குத்தூளைப் போட்டு மூடவேண்டும். பிறகு கார்க்குத்தூளின் மேல் பழங்களும், பழங்களின்மேல் கார்க்குத்தூளுமாக பெட்டி கொள்ளும்வரையில் வைத்துவிடவேண்டும். பிறகு பெட்டியை நன்ருய்மூடி உலர்ந்த இடத்தில் வைத்து விடவேண்டும். இப்படி பத்ரப்படுத்தி வைத்த பழங்கள் 1-வர்ஷகாலம் கெடாமலிருக்கின்றனவாம். பழங்களைப் பெட்டிகளிலிருந்து எடுத்து உபயோகிக்க வேண்டுமானல், உபயோகிக்குமுன் அவைகளை ஜலத்தில் நனைத்து அலம்பி எடுத்துக்கொள்ளவேண்டும்.

கார்க்குத் தூள் அகப்படாவிட்டால் ரம்பத்தூளையும் உபயோகிக்கலாம் ஆனல் ரம்பத்தூள் மூறை அவ்வளவு த்ருப்தியாயில்லையாம்.

மணலைக் கொண்டும் பழவகைகளை பத்ரப்படுத்தலாம். மணல் ரொம்ப சுத்தமாயிருக்கவேண்டும். அதில் வேறு பொருள்கள் இல்லாதபடி அதைப் பல முறை ஜலத்தில் சுத்தப்படுத்தி உபயோகிக்கவேண்டும். பிறகு அதை வெயிலில் காயவைத்து ஈரமில்லாதபடி செய்யவேண்டும். பழங்களை மெல்லிய கடுதாசியில் சுத்தி பெட்டிகளில், கார்க்குத் தூளுக்குச் சொன்ன முறைப்படி மணலோடு வைத்துமூடவேண்டும். இப்படி பத்ரப்படுத்தின பழவகைகளும் சில காய்கறிகளும் வெகுகாலம் கெடாமலிருக்கின்றனவாம். அவைகளை எடுத்து உபயோகிக்குமுன், ஸாதாரண ஜலத்தில் அலம்பி எடுத்துக்கொள்ளவேண்டும்.

பத்ரப்படுத்தி வைத்திருந்த பழங்களை, பெட்டியிலிருந்து எடுத்தவுடன், சீக்ரமாகவே உபயோகித்துவிடவேண்டும். ஏனென்ருல் புதிதாய்ப் பறித்த பழங்கள் கெட்டுப்போவதைவிட பத்ரப்படுத்திவைத்திருந்த பழங்கள் பெட்டிகளிலிருந்து எடுத்த சில நாட்களுக்கெல்லாம் கெட்டுப்போகின்றன.

**Hanging Pictures.**

படங்களைத் தொங்கவிடுதல்.—சுவர்களில் படங்களைத் தொங்கவிடும்போது, சிலர் படங்களின் மேல்பாகம் சுவரில் படாமலும் அடிப்பாகம் சுவரில் பட்டுக்கொண்டு மிருக்கும்படி தொங்கவிடுகிருர்கள். அதனல் மேல்பாகத்திலுள்ள இடைவெளியின் வழியாக, படங்களின் சட்டத்தின் அடிப்பாகத்தில் தூசிகள் படிகின்றன. பின்புறத்துச் சட்டத்தில் அடியிலுள்ளதில் இரண்டு மூலைகளிலும் இரண்டு கார்க்குத்துண்டுகளை வஜ்ரப்பசையினல் ஒட்டிவிட்டால் படத்தின் அடிப்பாகம் சுவரில் படாமல் இரண்டுக்கும் நடுவில் இடைவெளி ஏற்படுகிறது. இதனல் தூசுகள் படத்தில் தங்குவதில்லை.

# AGRICULTURE.

# விவஸாயம்.

## Loss of Water from Weeds.

களைகளால் நீர்ச்சேதம்.—தரிசாய்நிற்கும் நிலங்களில் மழைபெய்தால், ஸ்வல்பபாகம் மழைதான் பூமிக்குள் போய்த் தங்குகிறது. பாக்கி மழைஜலம் நிலத்தின்மேல் ஓடி வேறிடத்துக்குப் போகிறது. ஸ்வல்பீ மழைபெய்யும் ப்ரதேசங்களில் அதாவது வர்ஷத்தில் 13-முதல் 18-அங்குலம் மழைபெய்யும் ப்ரதேசங்களில் 4-அங்குலம் மழைக்குமேல் பூமிக்குள் தங்குவதேகிடையாது. 13, 18-அங்குலம் மழைபெய்தும் அதிகபக்ஷம் 4-அங்குல மழையே பூமிக்குள் தங்கியிருப்பதற்குக் காரணம் மழைஜலத்தில் பெரும்பாகம் பூமியின்மேல் ஓடி வேறு இடங்களுக்குப் போவதும், பூமியின் மேற்பாகத்திலுள்ள ஈரம் ஆவியாய்ப் போவதும், பூமியிலிருக்கக்கூடிய களைகள் பூமியினடியிலுள்ள ஜலத்தை க்ரஹித்து வெளியே ச்வாஸமாக விடுவதுமே.

ஸாதாரணமாய் ½-அங்குலம் மழைபெய்தால், பூமிக்குள் அதிக ஈரம் தங்கியிருக்கமுடியாது. ஆனால் அதிக மழைபெய்து மழைஜலம் பூமிக்குள் 6-அடிக்குக்கீழ் சுவறிப்போனால், மேல்மண் காய்ந்துபோனாலும் அடியில் ஈரம் இருந்துகொண்டே இருக்கும். ஆனால் பூமியில் களைகள் இருந்தாலோ, அவைகளின் வேர்கள் பூமியினடியிலுள்ள ஜலத்தை க்ரஹித்து இலைகள்வழியாக வெளியே விடுகின்றனவாதலால், பூமியினடியிலுள்ள ஈரம் வரவரக் குறைந்துவிடும். சில களைகள் ஸாதாரணப் பயிர்களுக்கு எவ்வளவு ஜலம் வேண்டுமோ அவ்வளவு ஜலத்தை பூமியிலிருந்து க்ரஹித்துக் கொள்ளுகின்றன. களைகள் வ்ருத்தியாகும் தரிசு நிலங்களில் விவஸாயி ஸுலபமாக கால்நடைத் தீவனப் பயிரையோ, அதிகஜலம் வேண்டியிராத புன்செய்ப் பயிரையோ பயிரிட்டு லாபம் அடையலாம்.

களைகளால் பூமியிலுள்ள ஜலம் வீணாவதால், அடிக்கடி பூமியைப் பண்படுத்தி களைகளை அப்புறப்படுத்தி மேல்மண்ணை புலபுலப்பாக வைத்திருந்தால், அடிமண்ணை ஈரமாக வைத்திருக்கலாம். இல்லாவிட்டால், களைகளை மேலாக மண் வெட்டிகொண்டு வெட்டி எடுத்துவிட்டாலும் பாதகமில்லை. இப்படிச்செய்வதால் பூமியிலுள்ள ஈரமானது குறையாமலிருக்கும்.

## Improvement of Indian Agriculture.

இந்தியாவின் விவஸாயத்தை சீர்திருத்தல்.—இந்தியாவின் விவஸாயத்தில் சீர்திருத்தங்கள் செய்வதற்கு இரண்டு விஷயங்கள் தடையாயிருக்கின்றனவென்று திருவாங்கூர் ராஜ்யத்து விவஸாய டிரெக்டராகிய டாக்டர் குஞ்சன்பிள்ளை ஒரு பத்ரிகையில் எழுதுகிறார். அவைகளில் ஒன்று விவஸாயிகள் ஏழையாயிருப்பதும், குறைந்தவட்டியில் அவர்களுக்கு கடன் கிடைக்காததுமாகும். இரண்டாவது, அவர்களுக்குப் படிப்பின்மையும், அதனால் அவர்கள் புதுமுறைகளை அறிந்து அனுஷ்டிக்கமுடியாமல் பின்வாங்குவதுமாகும்.

விவஸாயிகளுக்குப் பணம் கிடைக்கச் செய்வதற்காக கோவாபரெடிவ் ஸங்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் விவஸாயிகளெல்லாருக்கும் உபயோகமாயிருக்கும்படி அபிவ்ருத்தியாக இன்னும் ரொம்பகாலம் செல்லும். விவஸாயத்தில் ஏதாவது சீர்திருத்தம் ஏற்படவேண்டுமென்றால், கோவாபரேஷனை ரொம்ப அபிவ்ருத்திசெய்து, விவஸாயிகளுக்கு குறைந்த வட்டியில் கடன் கிடைக்கும்படி செய்யவேண்டும். அப்போது தான் அவர்கள் செலவு அதிகமான சீர்திருத்தங்களைக் கைக்கொள்வார்கள். அதோடு ஸர்க்கார், விவஸாயிகளுக்குக் கடன்கொடுப்பதில் ஏற்படுத்தியிருக்கும் நிபந்தனைகளையும் சற்று குறைக்கவேண்டும்.

இரண்டாவது தடையை நிவர்த்திசெய்ய ஜனங்களுக்கு விவஸாய ஸம்பந்தமான கல்வி கொடுக்கவேண்டும். ஸாதாரண கல்வி கொடுப்பதுமட்டும் போதாது. தற்போது இந்தியாவில் அநேக இடங்களில் விவஸாய காலேஜுகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இவைகள் ஸாமான்ய விவஸாயிகள் சேர்ந்து வாசிப்பதற் கேற்றவையாயில்லை. ஸாமான்ய விவஸாயிகளுக்குத்தான் முக்யமாய் விவஸாயக்கல்வி கற்றுக்கொடுக்க வேண்டியது அவச்யம். ஸாதாரண இலக்கிய கல்வி கற்பிப்பதோடு பள்ளிக்கூடங்களில் விவஸாய விஷயங்களை சாஸ்த்ரீயமாய்க் கற்பித்துவந்தால் விவஸாய விஷயங்கள் ஜனங்களுக்குள் நன்றாய்ப் பரவ ஹேதுவாகும்.

# CO-OPERATION.

# கோவாபரேஷன்.

**Rural Co-operative Societies.**

க்ிராமாந்தா கோவாரேடிவ் ஸங்கங்கள்.—'மைஸூர் எகனமிக் ஜர்னல்' என்னும் பத்ரிகையில் ஒரு நிருபர் க்ராமாந்தரத்திலுள்ள கோவாபரேடிவ் ஸங்கங்களின் நிலைமையைப் பற்றிப் பின்வரும் விஷயங்களைத் தெரிவிக்கிறார். அநேக மெம்பர்கள், ஜனங்களுக்கு நினைத்தபோது பணம் கிடைப்பதற்காகத்தான் கோவாபரேடிவ் ஸங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றனவென்று எண்ணியிருக்கிறார்கள்.

கோவாபரேஷன் இன்னதென்பதையும் ஸங்கத்தின் நோக்க மின்னதென்பதையும் அறிந்திருக்கக் கூடியவர் ஒரு ஸங்கத்துக்கு ஒரு மெம்பர் இருப்பது அபூர்வம். ஜனங்கள் அபிவ்ருத்தி யடைவதற்குத் தடையாயிருப்பது அவர்கள் தங்களைச் சுற்றிலும் நடக்கும் விஷயங்களில் கொஞ்சமேனும் ச்ரத்தையில்லாமலிருப்பதே. அநேக மெம்பர்களுக்குத் தங்கள் ஸங்கத்தின் பங்கு மூலதனம் இன்னதென்ருவது, ஸங்கத்தில் எத்தனை மெம்பர்களிருக்கிறார்களென்ருவது தெரியாது.

இந்த நிலைமையை சீர் திருத்த சில கார்யங்கள் செய்யவேண்டும். கோவாபரேடிவ் ஸங்கங்கள் ஸர்க்கார் டிபார்ட்மெண்டைச் சேர்ந்தவைகளல்ல; அவைகள் ஜனங்களுக்கு ஸொந்தமானவைகள்; அவைகளில் ஒவ்வொரு மெம்பரும் தனது ஸமூக க்ஷேமத்தின் பொறுப்பை வகிக்கக் கடமைப்பட்டவர்; எல்லாரும் ஒற்றுமையாக உழைக்கவேண்டும்-என்பவைகளை மெம்பர்கள் அறிந்துகொள்ளும்படி செய்யவேண்டும்.

இந்த ஸங்கங்கள் பணம் ஸம்பாதிக்க மாத்ரம் ஏற்பட்ட ஸாதனங்களல்ல; அல்லது பணம் கடன் கொடுக்க மாத்ரம் ஏற்பட்ட ஸங்கங்களல்ல; ஜனங்களுடைய பண நிலைமை, வ்யாபாரம், கைத்தொழில், கல்வி முதலியவைகளை அபிவ்ருத்தி செய்ய ஏற்பட்ட ஸாதனங்களாகு மென்பதை மெம்பர்களுக்குக் கற்பிக்க வேண்டும். ஒவ்வொரு ஸங்கமும் அது இருக்குமிடத்திலுள்ள கைத்தொழில்களையும் வ்யாபாரத்தையும் ஆதரிக்க வேண்டியது அவச்யமென்பதையும், மெம்பர்களுக்குள் உயர்வு தாழ்வின்றி எல்லாரையும் ஸமமாக நடத்தவேண்டு மென்பதையும் அவர்களுக்கு வற்புறுத்த வேண்டும். இந்த விஷயங்களையெல்லாம் அவர்களுக்கு தக்க உதாரணங்களைக் கொண்டு தெரிவித்தால் மெம்பர்களில் சிலராவது அவைகளை யறிந்து தக்கபடி நடந்து ஸங்கங்களை அபிவ்ருத்தி செய்யக்கூடும்.

**Co-operative Implements Societies.**

கோவாபரேடிவ் கருவிகள் ஸங்கம்.—ஐயர்லண்டில் விவஸாயிகளுக்கு விவஸாயக் கருவிகளை வாடகைக்கு விடுவதற்காக அநேக கோவாபரேடிவ் ஸங்கங்கள் இருக்கின்றன. இந்த ஸங்கங்கள் ஏற்பட்ட பிறகு அநேக விவஸாயிகள், இந்த ஸங்கங்கள் வாடகைக்குக் கொடுக்கும் கருவிகளைக் கொண்டு, அதிக நிலங்களை ஸாகுபடிசெய்து வருகிறார்கள்.

இந்த ஸங்கத்தில் சேரும் ஒவ்வொரு மெம்பரும் ஒவ்வொன்றும் ஒரு ஸவரன் (15-ரூபாய்) விலையுள்ள 5-பங்குகள் எடுத்துக்கொள்ளவேண்டும். முதலில் பங்கு ஒன்றுக்கு 1-ரூபா 14-அணு வீதம் பணம் செலுத்த வேண்டும். பாக்கிப்பணத்தை ஸங்கத்துக்கு ரொம்ப பணத்தட்டு ஏற்படும்போது செலுத்தவேண்டும். ஸங்கத்தார் நடைமுதல் பணத்துக்கு தமது ஊரிலுள்ள பாங்கியினிடம் கடன் வாங்கிக்கொள்ளுகிறார்கள். இந்தக் கடனுக்கு ஸங்கத்து மெம்பர்கள் ஜாமீனுக இருக்கிறார்கள்.

ஸங்கத்தார் மெம்பர்களின் பங்குப்பணம், கடன்வாங்கின பணம் ஆகிய இவைகளைக் கொண்டு, விவஸாயிகளுக்கு வேண்டிய விலையுயர்ந்த கருவிகளை வாங்கி வைத்து மெம்பர்களுக்கு வாடகைக்கு விடுகிறார்கள். இந்த புதுக்கருவிகள் வருவதற்கு முன்னுல் விவஸாயிகள் ஒரு வேலையைச் செய்ய என்ன செலவழித்தார்களோ அதில் பாதித்தொகையே வாடகைப்பணமாகும். உதாரணமாக உருளைக்கிழங்கை கையால் தாம்வாரியாகப் பிரிக்க ஒரு டன்னுக்கு $11\frac{3}{4}$-ரூபாயாகும். யந்த்ரத்தை உபயோகித்துப் பிரிக்கவேண்டுமாஞல் யந்த்ரத்துக்கு 5-ரூ. 10-அணு வாடகை கொடுக்கவேண்டும். இப்படியே மற்ற யந்த்ரங்களுக்கும் பாதித்தொகையேற்படுத்தியிருக்கிறார்கள்.

அநேக ஸங்கங்கள், வாங்கின யந்த்ரங்களின் விலைப்பணத்தை சீக்ரத்தில் எடுத்துவிடுகின்றன. சில ஸங்கங்கள் ஒரு யந்த்ரத்தை வாங்கி ஒரு பருவம் உபயோகித்தவுடன் அதில் வரும் லாபத்தைக்கொண்டு, புதிதாக வேறு யந்த்ரம் வாங்கி, அதை மெம்பர்களுக்கு சிறிதுகாலம் வாடகைக்கு விட்டு, அதனுல் கிடைக்கும் லாபத்தைக்கொண்டு வேறு உபயோகமுள்ள ஒரு யந்த்ரம் வாங்கி இப்படியே லாபத்தைக்கொண்டே புது யந்த்ரங்கள் வாங்கி அபிவ்ருத்தியடைகின்றன.

இப்படி ஸங்கங்கள் ஸ்வல்ப அளவில் ஆரம்பித்து கொஞ்சங்கொஞ்சமாய் அபிவ்ருத்தி யடைகின்றன. விவஸாயிகள் இதன் உபயோகத்தை ஒருமுறை கண்டுவிட்டால், அவர்கள் அதிக ஆவலோடு இதில் சேர்ந்துகொள்ளுகிறார்கள்.

# COMMERCE

# வ்யாபாரம்.

## Business Enterprise in India.

இந்தியாவில் வ்யாபார ஊக்கம்.—யுத்தம் நடந்து வருவதாலும், 1914-ம் வர்ஷம் ஏப்ரல் மாஸத்தில் இந்திய கம்பெனிச் சட்டத்தின் கடுமையான நிபந்தனைகள் அமுலுக்கு வந்ததாலும், சென்ற 1914-1915-ம் வர்ஷத்தில் ஜாயின்ட் ஸ்டாக் கம்பெனிகள் அதிகமாக ஏற்படவில்லை. 1913-14-ம் வர்ஷத்தில் 345 ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகள் 66 கோடியே 64 லக்ஷம் ரூபாய் மூலதனத்துடன் ரெஜிஸ்டராயிருக்க, சென்ற 1914-15-ம் வர்ஷத்தில் 107 ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகள் 3 கோடியே 94 லக்ஷம் ரூபாய் முதலுடன் ரெஜிஸ்டராயின.

சென்ற அக்டோபர் மாஸத்தில் இந்தியாவில் அடியில் கண்ட விவரப்படி 10 ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகள் ரெஜிஸ்டர் செய்யப்பட்டன.

| | | ரூ. |
|---|---|---|
| 2 பாங்கி லேவாதேவி கம்பெனி | ... | 1,20,000 |
| 3 வ்யாபாரக் கம்பெனிகள் | ... | 18,00,000 |
| 1 சணல்மில் கம்பெனி | ... | 24,50,000 |
| 2 பருத்தி, சணல் ப்ரெஸ்ஸுகள் | ... | 1,45,000 |
| 1 தேயிலைத் தோட்டக் கம்பெனி | ... | 2,00,000 |
| 1 நிலக்கரிச்சுரங்கக் கம்பெனி | ... | 50,000 |
| 10 | மொத்தம் ... | 47,65,000 |

## Industrial Schools in Mysore.

மைஸூரில் கைத்தொழில் பள்ளிக்கூடங்கள்.—மைஸூர் பட்டணத்திலும் பங்களூரிலும் தற்போது இரண்டு பெரிய தொழில் பாடசாலைகள் இருக்கின்றன. இப்போது மைஸூர் கவர்ன்மெண்டார், ஒவ்வொரு ஜில்லா ஹெட்க்வார்ட்டரிலும் ஒரு தொழில் பள்ளிக்கூடமாக 6 தொழில் பள்ளிக்கூடங்கள் புதிதாக ஸ்தாபிக்க உத்தரவு செய்திருக்கிறார்கள். இந்தப் புதுப் பள்ளிக்கூடங்களில் சித்ரவேலை, தச்சுவேலை, கொல்லர்வேலை ஆகிய இவைகள் கட்டாய பாடங்களாகக் கற்பிக்கப்படும். இவைகளோடு நெசவு, பிரம்புவேலை, கயிறுபின்னுதல், மரத்தில் சித்தரித்தல், உலோகவேலை ஆகிய இவைகளுள் அந்தந்த இடங்களுக்கு ஏற்றவைகளாய் ஏதாவது இரண்டு பாடங்களைத் தெரிந்தெடுத்துக் கற்பிப்பார்கள். இந்தப் புதுப்பள்ளிக்கூடங்களுக்காக கவர்ன்மெண்டாருக்கு 30,000 ரூபாய் அதிகப்படி செலவு ஏற்படுமாம். ஸுமார் 200 பையன்களுக்கு ஸ்காலர்ஷிப்புகள் கொடுப்பார்களாம்.

## Price of Rice.

அரிசி விலை.—இந்த வர்ஷம் அரிசியின் விலை குறையுமென்று தோன்றுவதாக 'சுதேசமித்திரன்' எழுதுகிறது. சென்ற சில வர்ஷங்களாக வங்காளத்தில் நெல்பயிர் செழிக்காமல் தவறிப்போனதால் பர்மாவிலிருந்தும் தென்னிந்தியாவிலிருந்தும் அரிசி அந்த மாகாணத்துக்கு ஏற்றுமதிசெய்யப்பட்டுவந்தது. ஆனால் இந்த வர்ஷம் வங்காளத்தில் நெல்பயிர் குறைவில்லாமலிருப்பதாகத் தெரிகிறது. இதனால் அந்த மாகாணத்திலிருந்து அதிகப்படியான நெல் வேறு மாகாணங்களுக்கும் ஏற்றுமதியாகும். மேலும் தென்னிந்தியாவில் வேர்க்கடலை பயிரிட்டுவந்த விவஸாயிகள் யுத்தத்தால் வேர்க்கடலைக்கு அதிக க்ராக்கியில்லையென்று கண்டு, வேர்க்கடலை பயிராகிவந்த நிலங்களில் நெல் பயிரிட்டு வருகிறார்கள். இதனால் நெல் மாஸூல் அதிகமாகுமாதலால் நெல்லின் விலை குறையுமென்று சொல்லப்படுகிறது.

## The Glass Factory at Amballa.

அம்பல்லாவில் கண்ணாடித் தொழில் சாலை.—இந்தியாவில் கண்ணாடி செய்யும் தொழில் கடைத்தேறாமல் போனதற்குக்காரணம், தொழிலில் தேர்ந்த வேலைக்காரர்களைக்கொண்டு தொழில் நடத்தாமல் போனதே. வடக்கே அம்பல்லாவில் உள்ள 'அப்பர் இண்டியா க்ளாஸ் வொர்க்ஸ்' என்னும் தொழில் சாலையார் ஜப்பானிலிருந்து 6-கண்ணாடித் தொழில்காரர்களை வரவழைத்திருக்கிறார்களாம். இதனால் அந்தத் தொழில்சாலையார் தமது தொழிலை அபிவ்ருத்தி செய்யக்கூடுமென்று சொல்லப்படுகிறது. அந்தத்தொழில் சாலையில் தற்போது விளக்கு சிம்னிகள் செய்யப்படுகின்றன. கூடிய சீக்ரத்தில் அங்கே வளையல் முதலியவை செய்வதற்கும் ஏற்பாடு செய்யப்படுமாம்.

## A New Railway.

ஒரு புது ரெயில்வே.—மானாமதுரை ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து சிவகங்காவுக்கு ரெயில் போட ரெயில்வே போர்டார் ஸாங்க்ஷன் செய்திருக்கிறார்கள். இந்த ரெயில்வே ராமநாதபுரம் ஜில்லா போர்டுக்கு ஸொந்தமானது. தென்னிந்திய ரெயில்வே கம்பெனியார் இதைப் போட்டுக் கொடுப்பார்கள். இந்த மானா மதுரை—சிவகங்கா இருப்புப் பாதையின் நீளம் 12-மைலாகும்.

# ECONOMIC PRODUCTS.
# விலையுள்ள பொருள்கள்.

**Margossa.**

வேம்பு.—வேம்பின் பெருமையைப்பற்றி நம் ஜனங்களுக்கு நாம் ப்ரஸங்கஞ் செய்வது கொல்லத் தெருவில் ஊசிவிற்பது போலாம். ஆயினும் மேல் நாட்டு நாகரீகத்தில் 'அடிபட்ட' நம்மவர்களில் அநேகர் வேம்பை ஸாதாரண மரங்களி லொன்ருகவே கருதியிருக்கிருர்கள். அவர்களுக்காக இதைக்கூறுகிருேம். பின் வருவன ப்ரஸித்தி பெற்ற மேல்நாட்டு வைத்யர் ஒருவர் கூறுவதன் சுருக்கமாகும்.—வேம்பின் மீது வீசிவருங் காற்று மிகவும் ஸௌக்யத்தைத் தருவது. அதனுல் இந்தியாவிலுள்ள ஜனங்கள் தங்கள் வீடுகளுக் கருகே இந்த மரங்களை வைத்து வளர்க்கிருர்கள். வடமேற்கு மாகாணங்களிலும், அயோத்தி என்னு மிடத்திலும் வேப்ப மரங்கள் மிகுதியாக வுள்ள க்ராமங்களில் ஜுரநோயே வருவதில்லையென்றும், அவையில்லாத க்ராமங்களில் ஜுரம் மிகுதியாகப் பரவுகின்றதென்றும் அநேக ஐரோப்பியர்கள் கருதுகிருர்கள். வேம்பின் இலை, பட்டை, வேர், பூ, பழம், கொட்டை, பிண்ணாக்கு, இவை யனைத்தும் ஔஷத குணம் பொருந்தியவை. அதன் எண்ணெய் அநேக வ்யாதிகளைப் போக்குகிறது. அதன் பூவைப் பச்சடிசெய்து சாப்பிடும் வழக்கம் தமிழ் நாட்டில் இன்னும் இருந்து வருகின்றது. மிகுந்த ஜன்னி கண்டவர்களுக்கு வேப்பம் பிண்ணாக்கைக் கொளுத்தி அதன் புகையைக் காட்டினுல் குளிர் குறையும். வேப்பங்குச்சி பல் துலக்குவதற்கு உபயோகமானது. வேம்புக்குப் பல் துலங்கும் என்பது பழம் பாட்டு. வேம்பின் இளந்தளிர்களைத் தின்ருல் சிற்றின்ப ஆசை நீங்குமென்று ஞானிகள் அதனைக் கொள்கிருர்கள். பித்தம் மிகுந்த மலையாளிகளிற் சிலர் தென்னுட்டுக்கு வந்து வேப்ப மரங்களுள்ள வீட்டில் வஸித்த காரணத்தால் தம் வ்யாதி நீங்கி ஸுகமடைந்தார்களாம்—என்று ஒரு பத்ரிகை எழுதுகிறது.

**Prickly Pear.**

சப்பாத்துக் கள்ளி.—ஆஸ்ட்ரேலியாவில் சப்பாத்துக் கள்ளியானது ஏராளமாய் முளைத்திருக்கிறது. சில ரஸாயன வித்வான்கள் இந்தக் கள்ளியிலிருந்து ஏதாவது உபயோகமுள்ள பொருள் தயார் செய்ய முடியுமாவென்று ஆராய்ச்சி செய்து மோட்டார் வண்டிகளையும் மற்றும் மோட்டார் யந்த்ரங்களையும் ஓட்டுவதற்கு உபயோகிக்கும் பெட்ரோல் என்னும் எண்ணெய்க்கு பதிலாக ஒரு புது எண்ணெய் தயார் செய்திருக்கிருர்கள். ஆஸ்ட்ரேலியாவின் ஒரு மாகாணமாகிய க்வீன்ஸ்லண்ட் மாகாணத்தில் இதற்காக ஒரு தொழில்சாலை ஸ்தாபிப்பதைப்பற்றி அநேக தனவான்கள் ஆலோசனை செய்து வருகிருர்களாம். அந்தத் தொழில்சாலை ஸ்தாபிக்கப்பட்டால் தின மொன்றுக்கு 1000-காலன் (காலன் என்பது 2.4-பட்டணம் படி) எண்ணெய் கிடைக்குமாம். தைல மிறக்கிய பின் இருக்கும் கள்ளிச்சக்கை மாடுகளுக்குத் தீனியாகவும் உதவுமாம்.

**Paper from Cotton Stalks.**

பருத்தித்தாளிலிருந்து கடுதாசிசெய்தல்.—அமெரிக்காவில் ஒரு பட்டணத்தில் பருத்திச்செடியின் தண்டு, கிளைகள் ஆகிய இவைகளிலிருந்து கடுதாசிக் கூழ் செய்ய ஒருபெரிய யந்த்ரசாலை ஸ்தாபிக்கப்பட்டு வருகிறது. இதில் தினந்தோறும் 50 டன் காகிதக் கூழ் தயாராகுமாம்.

அமெரிக்காவில் மொத்தத்தில் 7½-கோடி டன் நிறையுள்ள பருத்தித்தாள் கிடைக்குமாம். இதைக் கொண்டு 24 கோடி டன் நிறையுள்ள கடுதாசி செய்யலாமாம். இந்தக் கடுதாசி டன் ஒன்றுக்கு 150 ரூபாய்க்குமேல் விலைபோகுமாம்.

பருத்தித்தாளின் நார் கடுதாசி செய்வதற்கேற்ற சில ச்லாக்யமான குணங்களுடையதாக இருப்பதால், ரொம்ப உறுதியானதும் அதிக நிறையில்லாததுமான உயர்ந்த கடுதாசிசெய்ய அதுரொம்ப ஏற்றதாக இருக்கிறது.

**Potato.**

உருளைக்கிழங்கு.—ஜெர்மனியில் உருளைக்கிழங்கு ஏராளமாய்ப் பயிராகிறது. இது சாப்பாட்டுக்கு உதவுவதோடு கூட கைத்தொழிலிலும் உதவுகிறதாம். அங்கே இந்தக் கிழங்கிலிருந்து அல்கஹால் சாராயம் தயார் செய்கிருர்களாம். யுத்தத்துக்கு முன்னுல் அங்கே 10,000-கோடி காலன் ஆல்கஹால் வர்ஷந்தோறும் தயார் செய்து வந்தார்களாம். (காலன் என்பது 2.4-பட்டணம் படி.) சாராயம் எடுக்கும்போது கிழங்கிலிருந்து கிடைக்கும் தோலையும் மற்ற கழிவுப்பொருளையும் அந்த தேசத்தில் கால் நடைகளுக்கு தீனியாக உபயோகிக்கிருர்களாம். இன்னும் ஜெர்மனியில் உருளைக்கிழங்கைக் காயவைத்து அதிலிருந்து மா தயார் செய்தும் உபயோகிக்கிருர்களாம்.

## BOYS' PAGE.

## பையன்கள் பக்கம்.

**Amount of Food etc., in One's Life-time.**

ஒருவர் தமது ஜீவ்ய காலத்திற்குள் உண்ணும் உணவு முதலியன.—புருஷ ஆயஸு நூறு என்று சிலர் எண்ணிவந்தாலும் நூறுவயஸுக்கு ஜீவித்திருப்பவர்களின் தொகை ரொம்ப குறைவுதான். இந்தக் காலத்தில் 60, 70 வயஸு உயிருடனிருப்பதே ரொம்ப துர்லபமாயிருக்கிறது. இங்க்லண்ட் முதலிய மேல்நாடுகளில் ஜனங்களின் ஆயுள்காலம் சற்று அதிகம். ஸாதாரணமாக ஒருவர் சராசரியில் 50-வர்ஷம் உயிருடனிருப்பதாக வைத்துக்கொள்ளலாம். இந்த 50-வர்ஷ காலத்தில் ஒருவர் மொத்தத்தில் எவ்வளவு உணவு உட்கொண்டிருப்பார்? பானவகைகள் எவ்வளவு குடித்திருப்பார்? உடுப்பு வகையறாக்களுக்கு எவ்வளவு செலவழிந்திருக்கும்? எவ்வளவு தூரம் நடந்திருப்பார்? இவைகளைப்பற்றி ஒரு இங்க்லீஷ் பத்ரிகை சில கணக்குகள் எழுதியிருக்கிறது. இங்க்லீஷ் கணக்காகையால் இங்க்லீஷ் ஆகாராதிகளைப்பற்றியே தெரிவித்திருக்கிறது.

சாகாதிகளும் மாம்ஸ ஆகாரங்களும் உட்கொள்ளும் ஒருவர் சராசரியில் ஸாதாரணமாய் ஒருநாளுக்கு ஒரு பெரிய ரொட்டியும், ஒரு ராத்தல் மாம்ஸமும் தின்பார். இது மிதமான ஆகாரந்தான். ஆனால் 50-வர்ஷத்தில் அவர் சாப்பிடும் ஆகாரத்தின் அளவானது $18\frac{1}{4}$-டன் ரொட்டியும், ஒன்பதே அரைக்கால் டன் மாம்ஸமுமாகும். மேற்குறித்த ரொட்டிகள் முழுவதையும் ஒரே பெரிய ரொட்டியாகச் செய்தால் 125 கனகஜம் உள்ளதாக இருக்கும். பலவகை மாம்ஸங்கள் தின்பதாக வைத்துக்கொண்டு மாம்ஸம் முழுவதையும் சேர்த்தால் அதைத் தயார் செய்ய, ஸாதாரண அளவுள்ளவையான 18-காளை மாடுகளும், 6-பன்றிகளும், 12-ஆடுகளும் வேண்டியிருக்கும். மனிதன் தற்கால நாகரீகத்தின் படி ஜலம், பால், தேயிலை, காப்பி ஆகிய இவைகளைப் பானமாகக் குடிக்கிறான். ஒருவன் சராசரியில் தினந்தோறும் பட்டணம்படியால் $1\frac{1}{4}$-படி பானவகைகள் குடிப்பான். இவைகளையெல்லாம் ஆயுள்நாள் முழுவதுக்கும் சேர்த்துப்பார்த்தால் மொத்தம் 2,19,000 பட்டணம் படி பானமாகும். இவ்வளவு பானத்தையும் சேர்த்துக் கொட்டிவைக்க 100-அடி நீளம், 50-அடி அகலம், $15\frac{1}{2}$-அடி ஆழமுள்ள ஒரு குளம் வேண்டியிருக்கும். இதில் அநேகர் தாராளமாய் நீந்தலாம்.

இவ்வளவு ஆகாராதிகளையும் ஜீர்ணம் செய்ய ஒவ்வொருவரும் தினமும் கொஞ்சமாவது தேகாப்யாஸம் செய்யவேண்டியது அவச்யமாகும். அநேகர் க்ரமமாக தேகாப்யாஸம் செய்யாவிட்டாலும், எல்லாரும் தெரிந்தோ தெரியாமலோ கொஞ்சம் தேகப்பயிற்சி செய்தே வருகிறார்கள். ட்ராம்வண்டி, ரெயில்வண்டி முதலியவைகள் தற்காலம் உபயோகமாயிருந்து வருவதால் அநேகர் நடக்கவேண்டியிருப்பதில்லை. ஆனால் எல்லாரும் ஸ்வல்பதூரமுள்ள இடங்களுக்கு நடந்தே போகிறார்கள். ரொம்ப சோம்பேறியா யிருப்பவர்கூட இவ்விதம் நடந்து தினம் மொத்தத்தில் 8-மைல் நடந்துவிடுகிறார். இப்படி அவர் ஒரு ஊரிலேயே 8-மைலும் நடந்து விடுவதற்குப் பதிலாக சேர்ந்தாற்போல தொடர்ச்சியாக ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்கு நடந்துகொண்டே போவாரானால் அவர் தமது ஆயுள் காலத்தில் பூமியை 6-தடவை ப்ரதக்ஷிணம் செய்துவிடுவார். அதாவது 1,46,000 மைல் நடப்பார்.

அநேகர் சுருட்டுக் குடிக்கிறார்கள். இங்க்லீஷ்காரர்கள் சுருட்டுக் குழாயில் புகையிலைத்தூளைப் போட்டுப் புகைகுடிப்பார்கள். ஸாதாரணமாய் ஒருவர் தினம் $\frac{1}{2}$-ஔன்ஸ் புகையிலை உபயோகிப்பார். இது ஒருவருடைய ஆயுள்காலத்தில் 570-ராத்தல் புகையிலையாகும். இதன் விலை 2,745-ரூபாயாகும். புகையிலைச் சுருட்டுக் குடிப்பவர்கள் தினந்தோறும் 3-புகையிலை குடிப்பார்கள். இதற்கு ஒருவருக்கு தமது வாழ்நாளில் பிடிக்கும் மொத்தச்செலவு 15,000-ரூபாய்க்கு மேலாகும். ஐரோப்பியர்கள் வர்ஷத்தில் 2-புது தொப்பிகள் வாங்கி உபயோகிக்கிறார்கள். 50-வர்ஷத்துக்கு வேண்டிய தொப்பிகளில் உபயோகிக்கும் ஸாமான்களைக்கொண்டு ஒரு பெரிய தொப்பி செய்தால் அது 12-அடி நீளமும் 9-அடி ஆழமும் இருக்கும். இதில் ஒரு யானை தாராளமாக நிற்கலாம். இதேமாதிரி துணிஜோடு ஆகிய இவைகளும் மொத்தத்தில் ஏராளமாகின்றன.

**Depth of Oceans.**

ஸமுத்ரங்களின் ஆழம்.—ஸமுத்ரங்கள் ஸராஸரி 2-மைல் முதல் 3-மைல் வரையில் ஆழமுள்ளன. தென்னமெரிக்காவில் ரையோடி-லா-ப்ளாடா நதியின் முகத்வாரத்தின் பக்கத்தில் அட்லாண்டிக் ஸமுத்ரத்தின் ஆழம் 45,000-அடியாம். அதாவது 8-மைலுக்குமேல் ஆழமாக இருக்கிறதாம்.

# LADIES' PAGE.

## ஸ்த்ரீகள் பக்கம்.

### Fashion in a Ladies' Sabah.

ஒரு ஸ்த்ரீ ஸபையில் புது நாகரிகம்.—சென்னையில் நடைபெற்றுவரும் ஒரு ஸ்த்ரீ ஸபையில் ஒரு விநோத ஸம்பவம் நடந்ததாக அந்த ஸபையின் மெம்பர் ஒருத்தி 'பெண்கல்விப்' பத்ரிகைக்கு ஒரு நிருபம் எழுதியிருக்கிருள். அது பின்வருமாறு:—

"சென்னையிலுள்ள ஒரு மாதர்ஸபையில் என் புருஷர் உத்தரவின்பேரில் ஒரு மெம்பராகச் சேர்ந்தேன். சில வாரங்கள் அந்த ஸபைக்குப் போய்க்கொண்டுவந்தேன். ஒருநாள் ஸபையின் ப்ரெஸிடெண்டம்மாள் மீட்டிங்கு கலைகிற ஸமயத்தில் அடுத்த மீட்டிங்குக்கு ஒரு மேன்மைதங்கிய இங்க்லீஷ்மாது விஜயம் செய்கிருராதலால், எல்லா மெம்பர்களும் தர்மாபுரப் புடவையை உடுத்திக்கொண்டும், ரவைக்கம்மலைப் போட்டுக்கொண்டும் வரவேண்டுமென்று வற்புறுத்தினர். எனக்கும் என் பக்கத்திலுட்கார்ந்த சில ஸ்னேகிதிகளுக்கும் ப்ரெஸிடெண்டின் வார்த்தைகள் அருவெறுப்பைக் கொடுத்தன. அவ்வார்த்தைகளைப் பொறுக்க மாட்டாமல் என் ஸ்னேகிதி யொருவர் உடனே எழுந்திருந்து ஸபையில் சில ஏழையான மெம்பர்களுமிருக்கிருர்களென்பதை ப்ரெஸிடெண்டம்மாள் கவனிக்க வேண்டுமென்று சொன்னர். அதற்கு அவர் ஸ்னேகிதர்களிடத்தில் இரவலாவது வாங்கிக்கொண்டு வரலாமென்று சொன்னர். மேலும் உயர்வும் கௌரவமும் பொருந்திய ஸபையென்று விஜயம் செய்கிறவர் நினைக்கும்படிச் செய்யவேண்டுமென்றும் தெரிவித்தார். இப்படி அவர் சொன்னதற்குப் பிறகு அங்கு ஒரு நிமிஷம் கூட இருக்க என் ஸ்னேகிதிக்குப் பிடிக்கவில்லை. அவர் வெளியே வந்துவிட்டார். உடனே நானும் என் பக்கத்திலுட்கார்ந்த சில ஸ்னேகிதிகளும் வெளியே வந்துவிட்டோம். பிறகு, அந்த ஸபையின்மெம்பர் ஸ்தானத்திலிருந்து வெளியேவந்த மெம்பர்கள் எல்லோரும் நீங்கிக்கொண்டோம்........" இப்படிப்பட்ட ஸங்கங்களில் ஸ்த்ரீகள் சேருவதால் வீண்டம்பமும், பொய்க்கௌரவமும், அனுவச்யமான செலவும் ஏற்படுமேயொழிய அவர்களுக்கு உண்மையில் நன்மை ஏற்படாது.

### Female Education in United Provinces.

ஐக்ய மாகாணங்களில் பெண்கல்வி.—வடக்கே ஐக்யமாகாணங்களிலுள்ள அலகபாத் பட்டணத்தில் ஸ்த்ரீகளுக்கு உயர்தரக் கல்வி கற்பிக்கும் நோக்கத்துடன் ஒரு ஸங்கம் ஸ்தாபிக்கப்பட்டு நடந்து வருகிறது. அந்த ஸங்கத்தார் ஸமீபத்தில் ஒரு மீட்டிங் கூட்டினபோது அதற்கு ப்ரெஸிடெண்டாக வந்திருந்த அந்த மாகாணங்களின் கவர்னர் அந்த மாகாணங்களில் பெண்கல்வியின் நிலைமை த்ருப்திகரமாயில்லையென்றும், கவர்ன்மெண்டாரும் பொது ஜனங்களும் இவ்விஷயமாய் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் சொன்னர்.

பெண்களுக்காக எலிமெண்டரி ஸெகிண்டரி பாடசாலைகளையும், உபாத்தியாயினிகளைப் பழக்கப் பாடசாலைகளையும், படிதாப்பெண்கள் படிக்கப் பாடசாலைகளையும் ஏற்படுத்த வழிதேட வேண்டுமென்றும், பெண்களுக்கு ஸெகிண்டரி படிப்பைக் கற்றுக்கொடுப்பதற்கேற்ற பணப் பொறுப்பை ஒப்புக்கொள்ளும்படி கவர்ன்மெண்டாரை வற்புறுத்த வேண்டுமென்றும், தீர்மானங்கள் செய்யப்பட்டன.

### Infantile Mortality.

சிசுமரணம்.—சென்ற 1914-ம் வர்ஷத்தில் நமது ராஜதானியில் சிசுமரணம் அதிகமாகி யிருக்கிறது. பட்டணங்களின் சராசரி சிசுமரண விகிதமானது பிறந்ததாக தாக்கலான குழந்தைகளின் தொகையில் 1000-த்தில் 261.8 ஆகும். இது 1913-ம் வர்ஷத்தியதைவிட 1000-க்கு 23 அதிகமாகும். க்ராமாந்தரங்களின் சிசு மரண விகிதம் சராசரியில் ஆயிரத்துக்கு 196.5 ஆகும். இது 1913-ம் வர்ஷத்தியதைவிட 1000-க்கு 16·5 அதிகமாகும். க்ராமந்தரங்களுள் பல்லாரி ஜில்லாவில் தான் (271) மரணவிகிதம் அதிகமாகும். நீலகிரி, குண்டூர், செங்கல்பட்டு, தஞ்சாவூர், திருநெல்வேலி, க்ருஷ்ணு, கர்நூல், சேலம், அனந்தபுரம் ஆகிய இந்த ஜில்லாக்களிலும் சிசு மரணவிகிதம் 1000-க்கு 200-க்கு மேலாகும்.

### Poppy Seeds.

கஸகஸா —கஸகஸாத்தோலைச் சிதைத்து ஜலத்தில் போட்டுக் காய்ச்சி அநேகம் காரணங்களால் உண்டாகும் வீக்கங்களுக்கும், எரி புண்களுக்கும், சுளுக்குகளுக்கும், மற்றும் வேதனையைத் தரும் நோய்களுக்கும் ஒற்றடம் கொடுப்பது மிகவும் ஹிதமாயிருக்கும், அல்லது கல்கம்போல ஜலம்விட்டு இதை அரைத்து வதக்கி வஸ்த்ரத்திற் கட்டியும் மேற்கூறிய நோய்களில் ஒற்றடங் கொடுப்பதுண்டு.—வைத்யகலாநிதி.

# INDIANS ABROAD
# இதர தேசங்களில் இந்தியர்கள்.

**Asiatic Traders in the Cape.**

கேப்காலனியில் ஆசியாகண்டத்து வ்யாபாரிகள். தென்னாப்ரிக்காவின் தெற்கு பாகமாகிய கேப்டௌன் பட்டணத்தில் உள்ள இந்தியர்களுக்கு வ்யாபாரம் செய்ய லைஸென்ஸ் கொடுக்கலாமா கொடுக்கக்கூடாதா என்பதைப்பற்றி அந்தப் பட்டணத்து முனிஸிபாலிடியார் ஆலோசித்துவருகிறார்கள். ஐரோப்பியர்கள் வ்யாபாரம் செய்யுமிடங்களில் இந்தியர்களையும் வ்யாபாரம் செய்யவிட்டால், ஐரோப்பியர்களுடைய வ்யாபாரம் குறைந்துபோகும் என்றுசிலர் வாதிக்கிறார்கள். ஏனென்றால் இந்தியர்கள் ஸ்வல்ப செலவில் ஜீவிக்கக்கூடும். ஆகையால் அவர்கள் ஐரோப்பியர்கள் சொல்லும் விலையைவிடக் குறைவாக தங்களுடைய சரக்குகளை விற்று ஐரோப்பியர்களுடைய வ்யாபாரத்தைக் கெடுக்கக்கூடும். இந்தியர்கள் ஸுகாதார விஷயங்களைக் கவனிப்பதில்லை. அவர்கள் தங்கள் தொழிலில் மோசம் செய்கிறார்கள்.

சில ஐரோப்பியர்கள் இந்தியர்களுக்கு ஸாதகமாகப் பேசுகிறார்களாம். எப்பொழுது இந்தியர்கள் தமது தேசத்தில் தங்கியிருக்க ஸம்மதித்தார்களோ, அப்போது அவர்களை ந்யாயமாய் நடத்தவேண்டுமென்று அவர்கள் சொல்லுகிறார்கள்.

இந்த விஷயத்தைப்பற்றி ஆராய்ச்சிசெய்து ப்ரேரணைகள் செய்யும்படி முனிஸிபல் கௌன்ஸில் ஒரு கமிட்டி நியமித்தது. அந்தக் கமிட்டியார் ப்ரேரித்திருக்கிற தென்னவென்றால், தற்போது மொத்த ஐரோப்பிய ஜனத்தொகையில் 81-க்கு ஒருவர் வ்யாபாரியாயிருப்பதாலும், மொத்தம் ஆசியா வாஸிகளில் 3 பேருக்கு ஒருவர் வ்யாபாரியாயிருப்பதாலும் ஆசியாவாஸிகளில் அதிகமான வ்யாபாரிகள் இருப்பதால் இனிமேல் ஒரு ஆசியாவாஸிக்கும் புதிதாக வ்யாபாரம் செய்ய லைஸென்ஸ் கொடுக்கக்கூடாதென்பதே. இதைப்பற்றி 'கேப் டைம்ஸ்' பத்ரிகை எழுதுகையில், இந்தத் தீர்மானம் சரியல்லவென்று சொல்லுகிறது.

வ்யாபார லைஸென்ஸ் கொடுப்பதைப்பற்றி ஆலோசிக்கும்போது, வ்யாபாரம் செய்பவர் வெள்ளைக்காரரா, இந்தியரா, அல்லது நிறமுள்ள வேறு மனிதரா என்பதைக் கவனிக்கக்கூடாதென்றும், ஆசியா வாஸிகளில் அநேகர் வ்யாபாரிகளாயிருக்கிறார்கள் என்பதைக் கொண்டு அவர்களுக்கு இனிமேல் லைஸென்ஸ் கொடுக்கக்கூடாதென்று சொல்வது சரியல்ல வென்றும் அந்தப் பத்ரிகை எழுதுகிறது. வேண்டுமானால், ஆசியா வாஸிகள் ஸுகாதார விஷயங்களை சரியாய் கவனிக்க வேண்டுமென்று விதிகள் ஏற்படுத்தலாமென்றும், அவர்கள் யோக்யமாய் வ்யாபாரம் செய்யாவிட்டால் க்ரிமினல் சட்டத்தைத் தக்கபடி திருத்திக்கொள்ளலாமென்றும் அது சொல்லுகிறது.

**Immigration to Fiji.**

பிஜிதீவுக்கு இந்தியர்கள் குடிப்போவது.—ஒப்பந்தக்கூலி ஏற்பாட்டில் இந்தியர்களை அன்ய நாடுகளுக்குக் கூட்டிக்கொண்டு போவதில் எத்தனை ஆண்கள் வெளியூர்களுக்குப் போகிறார்களோ அதற்குத் தக்க அளவுக்கு ஸ்த்ரீகளையும் கூட்டிக்கொண்டுபோக ஏற்பாடு செய்வதில்லை. ஆண் பெண்களின் தொகைகளில் ரொம்ப வித்யாஸம் ஏற்படுவதால், வெளிநாடுகளுக்குப் போய் தங்கியிருக்கும் இந்தியர்களுக்குள் ஸன்மார்க்கம் ரொம்ப குறைவடைந்துபோய், சண்டை சச்சரவுகளும், கொலை, தற்கொலைகளும் நேரிடுகின்றன. சென்ற 1914-ம் வர்ஷத்தில் மொத்தத்தில் 1622 இந்தியர்கள் பிஜி தீவுக்குக் குடியேறிப் போனார்கள். இவர்களுள் 1055-பேர்கள் பருவமடைந்த ஆண்கள். இவர்களுள் ஆண்கள் இத்தனை பேரிருக்க ஸ்த்ரீகளோ 431-பேர்கள்தான் குடியேறிப்போனார்கள்.

அந்த வர்ஷத்தில் பிஜித்தீவில் இந்தியர்களுக்குள் 72 மாணங்கள் ஏற்பட்டன. கொலை, தற்கொலை, சுட்டுக்கொள்ளுதல் ஆகிய இந்தக்காரணங்களால் மேற்கண்ட மாண விகிதம் ஏற்பட்டது. அங்குள்ள கூலியாட்களுள் ஆண்கள் தினமொன்றுக்கு $12\frac{1}{2}$-அணா வீதமும் ஸ்திரீகள் $6\frac{1}{2}$-அணாவுக்கு சற்று அதிகமாகவும் ஸம்பாதிக்கிறார்கள். இவ்வளவு ஸ்வல்பமான சம்பளத்தில் அவர்கள் எதுவும் மிச்சம் பிடிப்பதென்பது அரிது. ஒப்பந்தக் கூலிவேலை ரொம்ப ச்ரமமான வேலையென்று தெரிகிறது. சென்றவர்ஷம் 448 இந்தியக் கூலிகள் பணங்கொடுத்து ஒப்பந்தத்திலிருந்து விலகிக் கொண்டார்கள். இந்த ஸங்க்யை 1913-ம் வர்ஷத்திய ஸங்க்யையை விட இரண்டு மடங்கு அதிகமாகும். ஒப்பந்த ஏற்பாடு ஸ்வதாவாக முடிந்துபோனவர்களில் நூற்றுக்கு 80 பேர்கள் மறுபடியும் ஒப்பந்த கூலி ஏற்பாடு செய்து கொள்ளவில்லையாம். இதனால் ஒப்பந்தக்கூலி ஏற்பாடு வேலையாட்களுக்கு எவ்வளவு கஷ்டம் கொடுக்கிறதென்று ஒருவாறு அறிந்துகொள்ளலாம்.

## FUN AND ANECDOTE.

## வேடிக்கையும் துக்கடாக்கதைகளும்.

**Horse Purchase.**

குதிரை வாங்கினது.—அமெரிக்கா ஐக்ய நாடுகளின் ப்ரெஸிடெண்டாக இருந்த ஜெனரல் க்ராண்ட் என்பவர் 12-வயது பையனாக இருந்தபோது அவருடைய தகப்பனார் அவரை ஒரு க்ராமத்துக்குப்போய் அங்குள்ள ஒரு குடியானவனிடம் ஒரு குதிரை வாங்கி வரச்சொன்னார். "முதலில் 50-டாலர் (டாலர் என்பது 3-ரூ-1½-அணாக்கொண்ட ஒரு அமெரிக்க நாணயம்.) கொடுப்பதாகச் சொல். அதற்கு ஸம்மதிக்காவிட்டால் 55-டாலர் கொடுப்பதாகச் சொல். அதற்கும் ஸம்மதிக்காவிட்டால் 60-டாலர் கொடுப்பதாகச் சொல். அதற்கு மேல் கொடுக்க வேண்டாம். எதற்கு ஸம்மதிக்கிறானோ அதைக் கொடுத்துக் குதிரையை ஓட்டிவா" என்று தகப்பனார் சொல்லிக் கொடுத்தார். பையன் க்ராமத்துக்குப் போய் குடியானவனைக்கண்டு குதிரையை விலைக்குக் கேட்டான். குடியானவன் பையனைப் பார்த்து, "உன் தகப்பனார் குதிரைக்கு என்ன விலை கொடுத்து வாங்கச் சொன்னார்" என்று கேட்டான். அதற்கு க்ராண்ட் "என் தகப்பனார் சொன்னதென்னவென்றால், முதலில் 50-டாலர் கொடுப்பதாகச் சொல்லவேண்டும். அதற்கு நீ ஸம்மதிக்காவிட்டால் 55-டாலர் கொடுப்பதாகச் சொல்லவேண்டும். அதற்கும் ஸம்மதிக்காவிட்டால் 60-டாலர் கொடுப்பதாகச் சொல்லவேண்டுமென்றார்." என்றான். குடியானவனும் 60-டாலருக்கு குறைந்தால் குதிரையை விற்க முடியாதென்று சொல்லிவிட்டான். பையன் 60-டாலர் கொடுத்து குதிரையை ஓட்டிக்கொண்டு போனான்.

**The King and a Sentry.**

அரசரும் ஒரு பாராக்காரனும்.—நமது அரசர் ஒரு நாள் ஸாண்ட்ரிங்ஹாம் என்னும் ஊரில் தமது அரண்மனைத் தோட்டத்தில் உலாவிக்கொண்டிருக்கையில் பாராவிலிருந்த ஒரு ஸோல்ஜர் 'நில், யார் அங்கே போகிறது?" என்று சொன்னான். அரசர் பதில் சொல்லவில்லை. மறுபடியும் பாராக்காரன் முன் சொன்னதையே சொன்னான். அப்போது அரசர் 'தி கிங்' (அரசர்) என்று சொன்னார். உடனே பாராக்காரன் "போகலாம், கிங். ஆனால் என் முன்னமேயே எனக்கு நீயார் என்று தெரிவிக்கவில்லை" யென்றான். அரசர் "கிங்" என்று சொன்னதை ஒரு மனிதனின் பெயரென்று எண்ணினானே யொழிய, அங்கு போனது தனது அரசர் என்பதை அவன் அறியவில்லை. இங்க்லண்டில் 'அரசன்' என்ற பொருள் படும் 'கிங்' என்னும் வார்த்தையை மனிதர்களுக்குப் பெயராக இடும் வழக்கம் உண்டு.

**The Boys' Answers.**

பையனுடைய பதில்.—ஒரு உபாத்யாயர் தமது வகுப்புப் பிள்ளைகளை, "லக்ஷம் ரூபாய் திடீரென்று உனக்குக்கிடைத்தால் என்ன செய்வாய்" என்பதைப் பற்றி ஒரு வ்யாஸம் எழுதச் சொன்னார். ஒரு பையன் கால்மணி நேரம் தனது பேனாவைக்கடித்துக் கொண்டிருந்து பிறகு ஒன்று மெழுதாத ஒரு கடுதாசியை உபாத்யாயரிடம் கொடுத்தான்.

உபாத்யாயர் "இதென்னடா இது" என்றார். பையன், "லக்ஷம் ரூபாய் கிடைத்தால் என்ன செய்வேனென்று கேட்டீர்களே. அப்படிக் கிடைத்தாலென்ன செய்வேனோ அதைச் செய்து காட்டினேன்." என்றான்.

**Women Can Keep Secrets.**

ஸ்திரீகள் எந்த விஷயத்தையும் ரஹஸ்யமாய் வைத்திருக்கக்கூடும்.—வக்கீல் (ஒருகேஸில் ஒருவாக்கு மூலத்தை ஆக்ஷேபித்து): "ஒருவிஷயத்தை ஒருவருக்கும் சொல்லாமல் ரகஸ்யமாய் வைத்திருப்பதென்பது எந்த ஸ்த்ரீக்கும் முடியாது."

ஸ்த்ரீ (சாக்ஷி): "அந்த வார்த்தை சரியல்ல. எனது 24-வது வயஸுமுதல் எனது வயஸு இன்னதென்பதை ஒருவரிடமும் சொன்னதேயில்லை."

வக்கீல்: "சரிதான். என்றாலும் என்றைக்காவது ஒருநாள் நீர் இந்த ரஹஸ்யத்தை வெளியிடாமலிருக்கப் போகிறதில்லை. எப்படியும் இது வெளிவந்துவிடும்."

ஸ்த்ரீ (ரொம்ப தைர்யத்துடன்): "நீர் அப்படி எண்ணிக்கொண்டேயிரும். 21-வர்ஷகாலமாக தனது வயஸை மறைத்துவைத்திருந்த ஒரு ஸ்திரீக்கு அதை இனிமேலும் ரஹஸ்யமாய் வைத்திருக்கமுடியாதா?"

**Enquirng the Bride's Mind.**

கல்யாணப்பெண்ணின் அபிப்ராயத்தை விசாரித்தது.—தனது பெற்றோர்களால் கட்டாயப்படுத்தப்பட்டு ஒரு கிழவனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்கப்படும் ஒரு கிறிஸ்தவப் பெண்ணைப்பார்த்து கல்யாணம் நடத்திவைத்த பாதிரியார், "குழந்தாய், இவரை மணக்க உனக்குப் பூர்ண ஸம்மதந்தானா?" என்று கேட்டார். இவ்விதம் கேட்கவேண்டுவதும் அவர்களுள் அத்யாவச்யம்.

"ஐயா ஒருநாளும் இல்லை. ஆனால் இது விஷயமாக என்னுடைய அபிப்ராயத்தைக் கேட்ட புண்யவான் நீங்கள் ஒருவர்தான்." என்றாள்.

# CURIOSITIES.
# விநோதங்கள்.

## A Novel Police System.

ஒரு நூதன போலீஸ் ஏற்பாடு.—ஐரோப்பாவிலுள்ள ஸ்பெய்ன் தேசத்தில் அநேக அபூர்வ வழக்கங்கள் வரவர அழிந்து போகின்றன. ஆயினும் ஒரு க்ராமத்தில் மட்டும் ஒரு பழைய வழக்கம் இன்னும் இருந்து வருகிறது. நாய்த்தூக்கம் தூங்குகிறவர்கள் இதனைத் தொலைக்க ப்ரியப்படுவார்கள். இவ்வழக்கம் யாதெனில்:—இரவில் 12-மணி முதல் விடியற்காலம் 5-மணி வரையில் போலீஸ்காரர்கள் ஒவ்வொரு மணி நேரத்தையும் உரக்கக் கூவிச் சொல்லிக் கொண்டே தெரு நெடுகப் போவார்கள். அந்த ஸந்தர்ப்பம் கால இயற்கையையுங் கூடத்தெரிவிப்பார்கள். "12-மணி; ஸுகமான காலம்" என்று உரக்கக் கூறுவார்கள். காலநிலைமை மாறிப்போனால் "2-மணி, சிறிது மந்தாரப்பொழுது; 4-மணி, மழை" என்று உரக்கக் கூவிச் செல்வார்கள். இந்தச் சத்தம் எந்தக் கும்பகர்ணனையும் எழுப்பி விடும். இதைப் பெரும் ஸங்கடமாக நினைத்து அநேகர் நிறுத்த வேண்டுமென்று முயன்றார்கள். 'இதனால் என்ன ப்ரயோஜனம். தூக்கங்கெடுவதைத் தவிர்த்து வேறு பயனைக் காணோம். பெருந்தலைவலியாக இருக்கிறது. தொலைத்து விடவேண்டும்' என்றார்கள். ஆயினும் இதனை நிறுத்த முடியவில்லை. போலீஸ்காரர் தங்கள் கடமையைச் சரிவரச் செய்கிறார்களா என்று இதனால் தெரியவருவதால் இதனை நிறுத்தக்கூடாது என்று அதிகாரிகள் கூறிவிட்டார்கள்.—வித்தியாபானு.

## Origin of Hand Shake.

கைகுலுக்கும் வழக்கத்தின் காரணம்.—கைகுலுக்கும் வழக்கம் எப்படி உண்டாயிற்றென்பதைப்பற்றி சிலர் பின்வருமாறு சொல்லுகிறார்கள். சரித்ரகாலத்துக்கு முற்பட்டகாலத்தில் ராஜ்யமென்றாவது ராஜாவென்றாவது ஒன்றும் கிடையாது. அவனவன் தன்னை விரோதிகளிட மிருந்து காத்துக்கொள்ள வேண்டியிருந்தது. வல்லான்வகுத்ததே வாய்க்காலென்ற,எவன் பலவானோ அவன் இட்டதே சட்டமாக இருந்தது. யாராவது ஒருவர் இன்னொருவரை வழியில் ஸந்தித்துப்பேசினால் அந்தமற்றவர் தம்மை ஏதாவது கஷ்டப்படுத்தினால் என்னசெய்வதென்று அதற்காக முன்ஜாக்ரதையாக இருக்கவேண்டியிருந்தது. ஆகவே அப்படி இரண்டுபேர்கள் ஸந்திக்கும்போது ஒவ்வொருவரும் ஆயுதங்கள் பிடிக்கும் வலதுகையை நீட்டி, கையில் கத்தி, ஈட்டி, தடி முதலியவை இல்லையென்றும், ஆகையால் சண்டையாவது மோசமாவது நடக்காதென்றும் தெரிவிப்பதற்காக ஒருவர் கையை மற்றவர் பிடித்துக் குலுக்கினார்களாம். அதுமுதல் நாளதுவரையில் கைபிடித்துக் குலுக்கும் வழக்கம் இருந்துவருகிறதாம்.

## A Chinese Typewriter.

சீனபாஷையில் ஒரு டைப்ரைட்டர்.—ந்யூயார்க்கில் வாசித்துவரும் ஒரு சீனதேசத்து வாலிபன் சீனபாஷையை டைப் அடிக்க ஒரு டைப்ரைட்டர் யந்த்ரம் கண்டுபிடித்திருக்கிறார். அந்த யந்த்ரத்தில் 3-கீ போர்டுகள்தான் இருக்கின்றன. இவைகளில் ஒன்றுதான் அச்சடிக்க உதவும். இதற்கடியில் சீனபாஷையின் எழுத்துக்கள் அமைந்த ஒரு பெரிய குழாய் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தக் குழாயில் 4,200 அக்ஷரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. எந்த எழுத்தை அச்சடிக்கவேண்டுமோ அந்த எழுத்து கீ போர்டுக்கு நேராக வரும்படி குழாயைச் சுழற்றிப் பிறகு கீ போர்டை அமிழ்த்தினால் கடுதாசியில் அந்த எழுத்து அச்சடிக்கப்படும். 4,200 எழுத்துக்கள் உள்ள டைப்ரைட்டரை உபயோகிப்பது ரொம்ப ச்ரமமாகத்தானிருக்கவேண்டும்.

## Protection for Duck's Legs.

வாத்து லாடம்.—குதிரைக்கும் மாட்டுக்கும் லாடந் தைத்தல் வழக்கம். மனிதலாடம் அவர் பாதரக்ஷையே. வாத்திற்கும் லாடமுண்டாக்கும் வழக்கம் ரஷ்யாவிலுண்டாம். அங்கே சில இடங்களில் வாத்து ஏராளமாய்ப் பலுகுகின்றன. ஆனால் அந்தந்த இடங்களிலே அவை விலையாகாமல் வெகுதூரம் விற்பனைக்காக அவைகளைக் கொண்டுபோகையில் அவைகளின் பாதங்களில் காயமுண்டாகும். இதைத்தவிர்க்க முதலாவது வாத்தைக் கீலிலே நடக்கவிடுவார்கள். பிற்பாடு அதை மணலிடங்களில் விரட்டுவார்கள். அப்பொழுது அவைகளினுடைய பாதங்களின் அடியில் ஒரு மணற்கீல்க்கட்டி உண்டாகும். அத்துடன் அது 200-மைல் தூரம் நடந்தாலுங் காலிலே காயமுண்டாகாது. இது தான் வாத்துலாடம்.

## MISCELLANEOUS NEWS.

## நாநா ஸங்கதி.

### Permanent Settlement.

சாச்வத ஸெட்டில்மெண்டு.—பம்பாய் மாகாணத்தில் கத்தியவார் என்று ஒரு நாடு இருக்கிறது. அதில் தாரங்கதரா என்று ஒரு சிறு ஸமஸ்தான மிருக்கிறது. ஸ்வதேசமன்னரொருவரால் அது ஆளப்படுகிறது. ப்ரிட்டிஷ் இந்தியாவில் பல மாகாணங்களில் 30 வருஷத்துக்கொருதடவை நிலத் தீர்வையை மாற்றிக்கொண்டே இருப்பதுபோலில்லாமல், அந்த ஸமஸ்தானபதி தம்முடைய ஸமஸ்தானத்தில் சாச்வத ஸெட்டில் மெண்டை ஏற்படுத்தியிருக்கிறார். இதைக்குறித்து லாகூரில் ப்ரசுரமாகும் "ட்ரிப்யூன்" என்ற பத்ரிகை பின்வருமாறு எழுதுகிறது.—இந்தியர்கள் ஓயாமல் வற்புறுத்திவரும் சில திருத்தங்களை அனுஸரிக்கும் விஷயத்தில் சில சிறிய ஸமஸ்தானங்கள்கூட ப்ரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கு முந்திப்போய் விடுகின்றன. கல்வி அபிவ்ருத்தி, க்ராம நிர்வாகம், மதுபானத்தை மட்டுப்படுத்தல், முதலிய விஷயங்களில் பெரிய ஸ்வதேச ஸமஸ்தானங்கள் நமக்கு வழிகாட்டுகின்றன. கத்தியவார் நாட்டிலுள்ள தாரங்கதரா என்ற ஸமஸ்தானத்தில் சாச்வத ஸெட்டில்மெண்டு ஏற்பட்டுவிட்டதாக அறிகிறோம். ப்ரிட்டிஷ் இந்தியாவில் சில மாகாணங்கள் இந்தத் திருத்தத்தைச் செய்யவேண்டுமென்று வற்புறுத்தி வருவதெல்லாம் இதுவரையில் பயன் தரவில்லை. ஆனால் தாரங்கதரா ஸமஸ்தானத்தில் சாச்வத ஸெட்டில் மெண்டை அனுஸரிக்க ஸமஸ்தானாதிபதி தீர்மானித்த பிறகு, அநேகம் க்ராமங்கள் புதிதாக உண்டாயிருக்கின்றனவாம். இந்த வருஷத்தில் இரண்டு க்ராமங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. வீடு கட்டும் செலவை ஸமஸ்தானத்தில் கொடுக்கிறார்களாம். சாச்வத ஸெட்டில்மெண்டு ஏற்பட்டதிலிருந்து நிலம் உடையவர்களுக்கு நிலத்தில் ஒரு புது அபிமானம் உண்டாய் விட்டது தரிசு நிலம் வெகுவாக இப்பொழுது ஸாகுபடிக்கு வந்திருப்பதும், வெளியிலிருந்து க்ருஷிகர்கள் அந்த ஸமஸ்தானத்திற்குப் போய் ஊன்றியிருப்பதும் இதற்கு அத்தாட்சியாகும். விவஸாய அபிவ்ருத்தியே ஸர்க்காருக்கு முக்யமான ஆதாரம்; ஆகையால் மேற்சொன்ன அபிவ்ருத்தி அந்த ஸமஸ்தான கவர்ன்மெண்டுக்கு மிக முக்யமாகும்."

### How Russia was Crippledt his Year.

இந்த வர்ஷத்தில் ரஷ்யா பின்வாங்கினதற்குக் காரணம்.—இந்த வர்ஷம் ரஷ்யாவானது கலீஷ்யாவின் பெரும்பாகத்தைப் பிடித்து ஹங்கேரியில் நுழையத் தயாராயிருந்தபோது, அதை ஜெர்மனியும் ஆஸ்ட்ரியாவும் துரத்தியடித்து, கலீஷ்யா, போலண்ட், கோர்லண்ட் முதலிய ப்ரதேசங்களைக் கைப்பற்றி ரஷ்யாவில் வெகுதூரம் சென்றுவிட்டன. இதற்கு காரணமென்னவென்பதை யுத்த சரித்ரப் பத்ரிகை பின்வருமாறு எழுதுகிறது.

ரஷ்யாவுக்கு வேண்டியிருந்த வெடிகுண்டு வகையருக்களில் பெரும்பாகம் பிட்ரோக்ராடுக்குப் பக்கத்திலுள்ள ஆக்டா என்னும்ஊரில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் வெடிகுண்டு சாலையில் செய்யப்பட்டுவந்தது. அதில் வேலைசெய்து வந்தவர்களில் அநேகர் மேற்கு ரஷ்ய மாகாணங்களில் வஸித்துவந்த ஜெர்மன் ஜனங்களாவர். அவர்கள் ரொம்ப ஸாமர்த்யசாலிகளாம், ஜெர்மனியைச் சேர்ந்த உளவாளிகள் இந்த ஜெர்மன் வேலையாட்களில் சிலரை வசப்படுத்திக்கொண்டுவிட்டார்கள் என்று தெரிகிறது. இதனால் நேர்ந்த பலன் என்னவென்றால் ஜெர்மானியர்கள் இந்த வர்ஷத்து வஸந்த காலத்தில் யுத்தம் ஆரம்பித்தபோது, ஆக்டாவிலுள்ள எல்லா வெடிகுண்டு யந்த்ரங்களும் கட்டிடங்களும் அங்கிருந்த மருந்துகளாலேயே நாசம் செய்யப்பட்டன. பிட்ரோக்ராடிலுள்ள எல்லா ஜனங்களும் இதைக் கேட்டு நடுங்கினார்கள். அந்த வெடிகுண்டு சாலையில் வேலைசெய்த ஆயிரக்கணக்கானவேலையாட்கள் இறந்து போனார்கள். மருந்து தயார்செய்யும் யந்த்ரங்களெல்லாம் நாசமாயின.

ரஷ்யா காலொடிந்ததுபோலாயிற்று. அதனிடத்தில் க்ருப், ஸ்கோடா பீரங்கிகளுக்கு ஸமமான ருட்டிலோப் பீரங்கிகள் இருந்தன. ஆனால் அந்த பீரங்கிகளுக்கு வேண்டிய குண்டுகளில்லாததால், அவைகளை உபயோகிக்க முடியாமல்போயிற்று. ஸோல்ஜர்களுக்கு வேண்டிய புகையில்லாத வெடிமருந்தும் ரொம்ப குறைந்து போயிற்றாம். இதனால் எதிரிகளுடைய பீரங்கிகளுக்கு முன்னால் ரஷ்ய ஸைன்யங்கள் நிற்கமாட்டாமல் பின்வாங்கவேண்டியதாயிற்று.

ரஷ்ய ஸைன்யங்கள் எதிரிகளால் நாசமடையாமல் பின்வாங்குவதே பெரிய கார்யமாயிற்று. அந்த வர்ஷம் ப்ரான்ஸும் க்ரேட் ப்ரிட்டனும் ஜெர்மனியின் மேல் மறுபடியும் யுத்தம் தொடங்க எண்ணியிருந்தன. ரஷ்யாவுக்கு குண்டு, வெடிமருந்துகள் இல்லை யென்பது தெரிந்தவுடன், தாங்கள் யுத்தம் செய்ய எண்ணியிருந்ததை நிறுத்தி, தங்களிடம் உள்ள குண்டுகள், மருந்து முதலியவைகளில் எவ்வளவு கொடுக்கமுடியுமோ அவ்வளவையும் ரஷ்யாவுக்கு அனுப்பிவந்தன.

## New Year Honors.

புது வர்ஷப் பட்டங்கள்.—அடியில் கண்ட சென்னை கனவான்களுக்கு புது வர்ஷப் பட்டங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன.

மதராஸ் பாங்கியின் ஸெக்ரெடரியாகிய மிஸ்டர் டபள்யூ. பி. ஹண்டருக்கு—நைட் (ஸர்) பட்டம்.

கொச்சி ஸமஸ்தானம் திருப்பணித்துறையிலுள்ள ராஜா ஸம்ஸ்க்ருத காலேஜ் ப்ரின்ஸ்பலாகிய ப்ரும்மஸ்ரீ பழமானேரி பஞ்சாபகேச சாஸ்த்ரிகளுக்கு—மகாமஹோபாத்யாயப் பட்டம்.

மௌல்வி ஸையத் ஷால் அப்துல் லடீப் ஸாகிப் காதிரி அவர்களுக்கு—ஷம்ஸ்-அல்-உலாமா பட்டம்.

மலையாளம் ஜில்லா போர்ட்டு வைஸ் ப்ரெஸிடெண்டாகிய ராவ் பகதூர் ஜார்ஜ் தாமஸ் வர்கீஸ் அவர்களுக்கு—திவான் பகதூர் பட்டம்.

கண்ணனூர் முனிஸிபல் கௌன்ஸில் சேர்மனாகிய ஒவியனகாத் மம்மி குன்ஹி ஹாஜி; பங்கனபள்ளி ஸமஸ்தானம் திவான் காஜா அக்பர் ஹுஸ்ஸென் ஸாகிப் பகதூர்; வாணியம்பாடி ஹாஜி பத்ருடீன் ஸாகிப்; இவர்களுக்கு—கான் பகதூர் பட்டம்.

ஸெஷ்ஷன்ஸ் ஜட்ஜ் தொட்டி வெங்கோபராவ்; ஸப் ஜட்ஜ் ஆர்ணி ரகுநாத ராவ் பந்துலுகாரு;—இவர்களுக்கு ராய் பகதூர் பட்டம்.

மதுரை தாலுகா போர்ட்டு ப்ரெஸிடெண்ட் பெரிய கோட்டை ஸுப்பராய அய்யர்; மலையாளம் ஜில்லா மலப்புரம் தாலுகா போர்ட் வைஸ் ப்ரெஸிடெண்ட் மிஸ்டர் க்ருஷ்ணவர்ம ராஜா; நெல்லூர் மிஸ்டர் லக்ஷ்மி நரஸய்ய செட்டிகாரு; ரிடயர்ட் போலீஸ் இன்ஸ்பெக்டர் மிஸ்டர் டி. ராமலிங்க ஸ்வாமி பந்துலுகாரு; மைஸூர் ஆர்க்கியலாஜிகல் டிபார்ட்மெண்ட் மிஸ்டர் ஆர். ஏ. நரஸிம்மாசார்யார்;—இவர்களுக்கு ராவ் பகதூர் பட்டம்.

## How Submarines Are Destroyed.

ஸப்மரீன் கப்பல்களை யழித்தல்.—ஜெர்மன் ஸப்மரீன் கப்பல்கள் போகக்கூடிய இடங்களில் ப்ரிட்டிஷ் கப்பல் படை அதிகாரிகள் பெரிய வலைகளை ஜலத்திற்குள் போட்டுவைக்கிறார்களாம். இந்த வலைகள் விசேஷமாய் இங்க்லீஷ் சான்னல் கடலில்தான் அதிகமாம். மற்ற விடங்களிலும் ப்ரிட்டிஷ் கப்பல்கள் இருக்குமிடங்களுக்குப் பக்கத்திலும் வலைகளைப் போட்டுவைக்கிறார்கள். இந்த வலைகளின் நுனிகளில் மிதக்கக்கூடிய ஸாமான்களைக்கட்டி ஜலத்தின்மேல் மிதக்கவிடுவார்கள். ஸப்மரீன் கப்பல் ஜலத்திற்குள் போகும்போது, வலைகளில் மாட்டிக்கொண்டால், உடனே மிதப்பு ஸாமான் ஜலத்தில் அமிழ்ந்துவிடும். இதனால் ஸப்மரீன் கப்பல் வலையிலகப்பட்டு விட்டதென்று தெரியும். பாராக் கொடுக்கும் யுத்தக்கப்பல்கள் உடனே அந்த விடத்தில் கூடிவிடும். ஸப்மரீன் கப்பல் வலையிலிருந்து விடுபடவேண்டுமானால் ஜலமட்டத்துக்குமேல் வரவேண்டும். அப்படி வரும்போது பாராக்கப்பல்கள் ஸப்மரீன் கப்பலைத்தாக்கி நாசம் செய்யும். இல்லாவிட்டால் அதைப் பிடித்துக்கொள்ளும்.

## A Sweetmeat Factory in France.

ப்ரான்ஸில் ஒரு மிட்டாய்க்கடை.—இந்திய மிட்டாய்வகைகளை இங்க்லண்டில் செய்வதற்கு ரொம்ப செலவு ஏற்படுவதாலும், இந்திய சிப்பாய்களுக்கு நெய்யில் செய்த மிட்டாய் வகைகளைப்போல் இங்க்லீஷ் மிட்டாய்கள் பிடிப்பதில்லையாகையாலும், இந்திய ஸோல்ஜர்ஸ் பண்ட் ஸங்கத்தார் ப்ரான்ஸிலேயே ஒரு இந்திய மிட்டாய்க்கடை வைக்க ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார்கள். இந்தியாவிலிருந்து மிட்டாய் செய்பவர்களை அழைத்துக்கொண்டுபோய் அங்கே மிட்டாய் தயார்செய்ய உத்தேசித்திருக்கிறார்கள்.

## An Inscription.

ஒரு கல்வெட்டு.—ஹைதராபாத்தில், ரேச்சூருக்கும், ஹட்டி சுரங்கங்களுக்கு மிடையிலுள்ள ஓரிடத்தில் ஒரு கல்வெட்டு கிடைத்திருக்கிறது. அது 23 நூற்றாண்டுகளுக்கு முன் இந்தியா முழுவதையும் அரசாண்ட அசோக சக்ரவர்த்தியின் காலத்திலேற்பட்ட சிலாசாஸன மென்று தெரிகிறது. இதற்கு முன்பு சோளதேசத்தில் டாலி, ஜங்காடா என்னுமிடங்களிலும், மைஸூரில் சித்தபுரத்திலும் அசோக சக்ரவர்த்தி காலத்திலேற்பட்ட மூன்று கல்வெட்டுக்கள்

அகப்பட்டிருக்கின்றன. இந்தக் கல்வெட்டுக்களினால், அசோக சக்ரவர்த்தியின் அரசாட்சி தென்னிந்தியாவிலும் வ்யாபித்திருந்ததென்று நிச்சயமாகத் தெரிந்துகொள்ளுவதற் கிடந்தருகிறது.

**The Clever Belgian Lads.**

தந்த்ரமுள்ள பெல்ஜிய வாலிபர்கள்.—பெல்ஜியத்திலுள்ள லீயெஜ் நகரில் வஸிக்கும் சில பெல்ஜியவாலிபர்கள் ஜெர்மன் அதிகாரிகளிடம் பைஸிகல் பந்தயம் விட உத்தரவு பெற்றார்கள். அப்பந்தயம் பெல்ஜியத்திற்கும் ஹாலண்டிற்கு மிடையிலுள்ள எல்லை ப்ரதேசத்தில் நடைபெற்றது; அந்தப் பந்தயத்தில் 115 பெல்ஜிய வாலிபர்கள் சேர்ந்திருந்தார்கள். அவர்கள் பைஸிகல் பந்தயம் விடுவதுபோல நடித்து, ஹாலண்டின் எல்லையை யடைந்ததும், வேகமாய்த் தமது பைஸிகல்களை விட்டுக்கொண்டு போய் ஹாலண்டுக்குள் ப்ரவேசித்து விட்டார்கள்.

**Indian Prisoners in Germany.**

ஜெர்மனியில் இந்தியக் கைதிகள்.—ஜெர்மனியின் தலைநகருக்கு அருகே வின்ஸ்டாப் என்ற சிறிய நகரம் ஒன்றுண்டு. அந்த இடத்தில் மட்டும் ஏறக்குறைய 400-இந்திய கைதிகளிருக்கிறார்கள். அவர்களில் 95-பெயர் முகம்மதியர்கள். 160-பெயர்கள் கூர்க்கர்கள். 65-பெயர்கள் ஸீக்கியர். 71-பெயர்கள் தக்கூர் எனப்படும் ஜாதியார். அவர்களிருக்கும் இடம் காற்று தாராளமாய் வரக்கூடியதோடு அதிக சுத்தமாயும் இருக்கிறது.

இந்திய கைதிகளை எவ்வித வேலையையும் செய்யும்படி ஜெர்மானியர் சொல்வதில்லை. அந்த இந்திய கைதிகளாகிய முகம்மதியர், ஸீக்கியர், ஹிந்துக்கள்முதலிய பலர்க்கும் தனித்தனி சமையலறைகள் இருக்கின்றன. அவர்கள் தங்களுடைய ஜாதிக்குரிய ஆகாரத்தைப் பாகம் பண்ணும்படியான ஸ்வதந்தரமுண்டு. மகம்மதியருக்கென்று ஒரு பள்ளிவாசலும் கட்டப்பட்டிருக்கிறது. அதில் மகம்மதியர் தொழுகிறார்கள். அவர்கள் அனைவரும் தங்களது மதக்கொள்கைகளை அனுஷ்டிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. பொதுவாக இந்தியகைதிகள் அனைவரும்ஸௌகமாகவும்த்ருப்திகரமாகவும் நடத்தப்படுகிறார்கள்-என்று 'சத்தியவேத பாதுகாவலன்' எழுதுகிறது.

**Shells for Russian Guns.**

ரஷ்ய பீரங்கிகளுக்கு குண்டுகள்.—லண்டனில் பின்வரும் வதந்தி ஸமீபத்தில் பரவிவந்ததாம். அது எவ்வளவு தூரம் வாஸ்தவமோ தெரியவேண்டும். ரஷ்யர்கள் தங்களுக்கு குண்டுகள் வேண்டுமென்று ஜப்பானிலுள்ள சில தொழில்சாலைகளுக்கு ஆர்டர் கொடுத்தார்களாம். குண்டுகள் வந்துசேர்ந்தவுடன், பீரங்கிகளில் உபயோகிக்க முயன்றபோது, அவைகள் பீரங்கிவாய்களுக்கு சரியாயில்லையாம். ஜப்பானுக்கு ஆர்டர் அனுப்பினபோது, குண்டுகளின் அளவு ஆர்டர் பத்ரத்தில் சரியாகத்தான் குறிக்கப்பட்டிருந்ததாம். ஆனால் அந்த அளவுகள் நடுவில் மாற்றப்பட்டிருந்தனவாம். எங்கே யார் மாற்றினார்களென்பது தெரியவில்லை. ரஷ்ய ராணுவ உத்யோகஸ்தர்கள் ஜெர்மானியர்களிடமிருந்து லஞ்சம் வாங்கிக்கொண்டு இவ்விதம் செய்திருக்கலாமென்று சொல்லப்படுகிறது.

**Podanur Pollachi Railway.**

போதனூர் பொள்ளாச்சி ரெயில்வே.—சென்ற அக்டோபர் மாஸம் 15-ந்தேதி யன்று, சென்னை கவர்னர் போதனூரில், போதனூர் பொள்ளாச்சி ரெயில்வேயைத் திறந்துவைத்தார். இந்த ரெயில்வே போடும் வேலைஸுமார் 23 மாஸங்களுக்கு முன்னால் ஆரம்பிக்கப்பட்டது.

**The 42 Centimetre Guns.**

17-அங்குல ஜெர்மன் பீரங்கியின் விவரம்.—ஜெர்மானியரிடமுள்ள பீரங்கிகளில் கிட்டத்தட்ட 17-அங்குலம் (16. 8-அங்குலம்) குறுக்களவுள்ள குழாய்கள் கொண்ட பீரங்கிகள் மிகப்பெரியன என்பதை நேயர்கள் அறிவர். அம்மாதிரியான பீரங்கியில் வேலை செய்வதற்கு 200-மனிதர்கள் வேண்டும். அதை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டு போகும்பொழுது அதை 127-பாகங்களாகப் பிரித்து விடவேண்டும். இதுபற்றியே அந்த பீரங்கியை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தில் கொண்டுபோனால் அமைப்பதற்கு மாத்ரம் 26-மணி நேரம் ஆகிறது. அப்பீரங்கியானது 87-டன் எடையுள்ளது. அந்த பீரங்கிகளில் ஒன்றை எடுத்துச் செல்வதற்கு ரயில்வே வாகன்வண்டிகளில் 12-வேண்டும். மின்ஸார விசையினால் தான் அப்பீரங்கியிலிருந்து குண்டுகள் ப்ரயோகிக்கப்படுகின்றன. குண்டுகளைப் ப்ரயோகிக்கும் பொழுது அதில் வேலைபார்க்கும் மனிதர் அனைவரும் 300-கஜத்திற்கு அப்பாலிருக்க வேண்டும். அதிலிருந்து ப்ரயோகிக்கப்படும் ஒரு குண்டானது 882-பவுண்டு எடையுள்ளதாயிருக்கிறது. அப்பீரங்கியிலிருந்து ஒருமுறை குண்டை ப்ரயோகிக்க 8250-ரூபாய் செலவாகிறதாம்.

# DIARY OF THE MONTH.

## மாஸ வர்த்தமானம்.

### THE WAR IN EUROPE.

### ஐரோப்பிய யுத்தம்.

### ப்ரான்ஸிலும் பெல்ஜியத்திலும் யுத்தம்.

டிஸம்பர்மீ 21-தேதி.

ப்ரிட்டிஷ் போர்முகத்தின் தெற்கு, மத்யபாகங்களில் பீரங்கியுத்தம் நடைபெற்றது. ஜெர்மானியர்கள் யிப்ரஸ், ஹல்லூச் ஆகிய இடங்களைத் தாக்கினார்கள்.

23-தேதி.

யிப்ரஸுக்கு பக்கத்திலும், லூஸுக்கு வடக்கிலும் எதிரிகள் ப்ரிட்டிஷ் துருப்புகளைத் தாக்கினார்கள்.

ப்ரெஞ்ச் துருப்புகள் ஹார்ட்ஸ்மான்வீலர்காப் என்னும் ஊரிலுள்ள எதிரியின் ராணுவ வேலைகளைக் கைப்பற்றினார்கள்.

28-தேதி.

மேற்குப் போர்முகத்தில் சிலவிடங்களில் பீரங்கி யுத்தம் நடக்கிறது.

29-தேதி.

மேற்குப் போர்முகத்தில் பலமான பீரங்கி யுத்தம் நடந்தது.

ஜனவரிமீ 4-தேதி.

வாஸ்ஜஸ் ப்ரதேசத்தில் பீரங்கி யுத்தம் பலமாக நடக்கிறது.

7-தேதி.

சாம்பேன், ஆர்மெண்டியர்ஸ், யிப்ரஸ் என்னு மிடங்களில் பீரங்கியுத்தம் நடக்கிறது.

10-தேதி.

மேற்குப் போர்முகத்தில் சில இடங்களில் யுத்தம் நடக்கிறது. ஹிட்ஸ்டீன் என்னு மிடத்துக்கு வடக்கிலுள்ள ஒரு சிறு குன்றை ஜெர்மானியர்கள் பிடித்துக்கொண்டார்கள்.

11-தேதி.

சாம்பேன் ப்ரதேசத்தில் எதிரிகள் பலமாய்த் தாக்கி முன் சென்றும் பின் தள்ளப்பட்டார்கள்.

### ரஷ்யாவுக்கும், ஆஸ்ட்ரியா ஜேர்மனி இவைகளுக்கும் யுத்தம்.

டிஸம்பர்மீ 23-தேதி.

ரஷ்யர்கள் ரிகா, ஜகாப்ஸ்டாட், ட்வின்ஸ்க் என்னுமிடங்களுக்குப் பக்கத்தில் பீரங்கிகளால் தாக்கி, அங்கே பாதுகாப்பு வேலைகள் செய்துகொண்டிருந்த ஜெர்மானியர்களைத் துரத்தினார்கள்.

ரஷ்யர்கள் வான்வரி ப்ரதேசத்தில் பினா கணவாயைப் பிடித்தார்கள்.

28-தேதி.

ரிகாவுக்கும் சார்ட்டரிஸ்குக்கும் மேற்கில் ஜெர்மானியர்களுடைய கோட்டைகளை ரஷ்யர்கள் தாக்கினார்கள். கருங்கடலிலுள்ள ஒரு ரஷ்ய டார்ப்பிடோ கப்பல் இரண்டு பல்கேரிய கப்பல்களை மூழ்கடித்தது. ரஷ்யர்கள் பாரஸிகத்தில் ஹாமடானுக்கு மேற்கில் ஆஸாடாஸாட் என்னுமிடத்தைப் பிடித்துக் கொண்டார்கள். டெஹிரானுக்கு 30-மைல் தென்மேற்கில் ரஷ்யர்களுக்கும் எதிரிகளுக்கும் யுத்தம் நடந்தது.

29-தேதி.

ரிகாவுக்கு மேற்கில் ஜெர்மானியர்கள் முன் செல்ல முயன்றதை ரஷ்யர்கள் தடுத்துவிட்டார்கள். கிழக்குப் போர்முகத்தில் சிலவிடங்களில் கடுமையான யுத்தம் நடக்கிறது.

30-தேதி.

பெஸ்ஸரேபியாவில் ஆஸ்ட்ரியர்களை ரஷ்யர்கள் தாக்கினதில் ரஷ்யர்களுக்கு ரொம்ப சேதமாம்.

31-தேதி.

கிழக்கு காலீஷ்யாவில் யுத்தம் பலமாக நடக்கிறது. மற்ற கிழக்குப் போர்முகங்களிலும் சண்டை நடந்து கொண்டிருக்கிறது.

ஜனவரிமீ 3-தேதி.

கோவல் ஸார்னி ரெயில்வேயுக்கும் சார்ட்டோரிஸ்க்குக்கும் மத்தியில் ஸ்டர் நதியோரமாக பலமான யுத்தம் நடக்கிறது. ரஷ்யர்கள் ஸ்டர் நதியைக் கடந்து க்ரியாஸ்க் என்னும் ஊரைப்பிடித்தார்கள். மற்றவிடங்களில் பலமான யுத்தம் நடக்கிறது.

ரஷ்யர்கள் காகேஷ்யாவில் காப் என்னுமிடத்தை

யும், பெர்வியாவில் ஸெர்ரா வென்னுமிடத்தையும் பிடித்தார்கள்.

4-தேதி.

சார்ட்டோரிஸ்குக்குப் பக்கத்திலும், ஸெர்னேவிட்ஸுக்கு வட கிழக்கிலும் யுத்தம் நடக்கிறது.

6-தேதி.

ஸெர்னேவிட்ஸுக்கு வடகிழக்கிலும், பிங்க்ஸுக்கு தென் மேற்கிலும் யுத்தம் நடக்கிறது.

8-தேதி.

ரஷ்யர்கள் சார்ட்டோரிஸ்கைப்பிடித்திருக்கிறார்கள். ரிகாவிலும் ஸெர்னேவிட்விலும் யுத்தம் நடக்கிறது.

10-தேதி.

எதிரிகள் முதலில் சார்ட்டரிஸ்க் பட்டணத்தை மறுபடியும் கைப்பற்றினார்கள். ஆனால் ரஷ்யர்கள் அதை மறுபடியும் பிடித்துக்கொண்டார்கள். எதிரிகள் அதை இரண்டு தடவை பிடிக்க முயன்றும் முடியவில்லை.

ஸ்ட்ரிபாவின் மத்ய பாகத்தில் கிழக்குக்கரையிலிருந்த எதிரிகளை ரஷ்யர்கள் துரத்தியடித்தார்கள்.

11-தேதி.

கலீஷ்யாவிலும், ஸெர்னேவிட்ஸுக்குக் கிழக்கிலும் எதிரிகளுக்கு ரொம்ப சேதமாம்.

## பொது விஷயங்கள்.

டிஸம்பர்மீ 20-தேதி.

ப்ரமன் என்னும் ஜெர்மன் க்ரூஸரும், ஒரு டார்பிடோக் கப்பலும் பால்டிக்கடலில் மூழ்கடிக்கப்பட்டன. பெல்ஜியன் கடல்கரைக்குப் பக்கத்தில் ஒரு ப்ரெஞ்ச் டார்ப்பிடோக்கப்பல் ஒரு ஜெர்மன் ஸீப்ளேன் என்னும் ஆகாயக்கப்பலை மூழ்கடித்தது.

21-தேதி.

காலிபொலி தீபகல்பத்தில் ஸுவ்லாவுக்குப் பக்கத்திலிருந்த இங்க்லீஷ் துருப்புகளை வேறு இடங்களுக்குக் கொண்டு போய் விட்டார்கள்.

30-தேதி.

'பெர்ஷியா' என்னும் ப்ரிட்டிஷ் தபால் கப்பல் இங்க்லண்டிலிருந்து புறப்பட்டு மத்ய தரைக்கடல் வழியாக வரும்போது ஒரு எதிரி ஸப்மரீனால் மூழ்கடிக்கப்பட்டது. 250-ப்ரயாணிகளுக்கு மேல் சேதமாம்.

30-தேதி.

இட்டாலியர்கள் கொரிஷியாவுக்கு மேற்கிலுள்ள மலைகளிலுள்ள அரண்களை பலப்படுத்தி வருகிறார்கள்.

31 தேதி.

கால்டிலானு என்னுமிடத்தை ஆஸ்ட்ரியர்கள் தாக்க முயன்றதில் அவர்களை இட்டாலியர்கள் தடுத்து விட்டார்கள். டால்ஷிக்னே என்னுமிடத்துக்குப் பக்கத்தில் ஆஸ்ட்ரியக் கப்பல் படைக்கும் இட்டாலியக் கப்பல் படைக்கும் யுத்தம் நடந்தது. இரண்டு ஆஸ்ட்ரியக் டிஸ்ட்ராயர் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன.

ஜனவரிமீ 1-தேதி.

நேடால் என்னும் ப்ரிட்டிஷ் க்ரூஸர் மூழ்கிப் போயிற்று.

4-தேதி.

ஜெர்மனிக்கு ஸொந்தமான காமரூன்ஸ் ப்ரதேசத்தின் தலை நகராகிய யாண்டி என்னுமிடத்தை ப்ரிட்டிஷ் துருப்புகள் பிடித்தன.

9-தேதி.

ஹாலண்ட் கடல் கரையோரமாக ஒரு ப்ரிட்டிஷ் ஸப்மரீன் கப்பல் மூழ்கிப்போயிற்று.

10-தேதி.

நேசத்துருப்புகள் காலிபொலி தீபகல்பம் முழுமையும் காலி செய்தாய் விட்டது. பழையதாகப் போன [illegible] பீரங்கிகளைத் தவிர மற்ற பீரங்கிகளெல்லாம் அப்புறப்படுத்தப் பட்டன. ஒரேஒரு ஆள்தான் காயமடைந்தார்.

கிங் எட்வர்ட் தி ஸெவந்த் என்னும் யுத்தக்கப்பல் கடல் வெடிகுண்டில் பட்டு மூழ்கிப் போயிற்று.

## பால்கன் ப்ரதேசத்து யுத்தம்.

டிஸம்பர்மீ 20-தேதி.

ஆஸ்ட்ரியர்கள் மாண்டிநிக்ரார்களைத் துரத்திக்கொண்டிருக்கிறார்கள்.

21-தேதி.

ஸெர்வியாவிலிருந்த ப்ரெஞ்ச் துருப்புகளெல்லாம் ஸலோனிக்காவுக்கு வந்துவிட்டன

23-தேதி.

ரஷ்யயுத்தக் கப்பல்கள் வார்ன என்னும் பல்கேரியத் துறைமுகத்தைத் தாக்கின. எதிரிகள் இன்னும் க்ரீஸுக்குள் நுழையவில்லை.

24-தேதி.

ஒரு ரஷ்ய டார்பிடோ கப்பலுக்கும் வார்னவிலுள்ள பீரங்கிப்படைக்கும் யுத்தம் நடந்தது. துருக்கியர்கள் காகேஷ்யாவில் ஆச்சா என்னுமிடத்தில் ரஷ்யர்களைத் தாக்கினார்கள்.

ரஷ்யர்கள் பாரஸீகத்தில் ஹாமாடான என்னுமிடத்துக்கு வடமேற்கில் ஆர்பாரிக் என்னும் ப்ரதேசத்திலிருந்து பெர்ஷியக் கலகக்காரர்களைத் துரத்தினார்கள்.

27-தேதி.

ஜெர்மானியர்கள் நிஷ்பட்டணத்தில் அரசாட்சி ஏற்படுத்தியிருக்கிருர்கள்.

30-தேதி.

டாராநதி யோரமாக ஆஸ்ட்ரியர்களுக்கும் மாண்டிநிக்ரர்களுக்கும் பலமான யுத்தம் நடந்தது.

அல்பேனியாவில் பல்கேரியர்கள் ஸெர்வியர்களைத் துரத்திவருகிருர்கள். பல்கேரியர்கள் அல்பேனியாவில் முன்சென்று கொண்டிருக்கிருர்கள்.

ஜனவரிமீ 1-தேதி.

பாரவீகத்தில் உஷராவுக்குக் கிழக்கிலுள்ள ப்ரதேசத்திலும் ஹாமடானுக்குத் தெற்கிலுள்ள விர்க்கான் ப்ரதேசத்திலும் ரஷ்யர்களுக்கும் எதிரிகளுக்கும் யுத்தம் நடந்தது.

10-தேதி.

கருங்கடலில் ரஷ்ய டார்ப்பிடோக் கப்பல்கள் 'கீபன்' என்னும் துருக்கியக் கப்பலோடு யுத்தம்செய்து பின் வாங்கின. 'கீபனு'ம் பாஸ்பரஸுக்குப் பின்வாங்கிற்று.

11-தேதி.

ஆஸ்ட்ரியர்கள் மாண்டிநிக்ரர்களை எல்லா விடங்களிலிருந்தும் தாக்குகிருர்கள். மாண்டி நிக்ரர்கள் பெரேன் என்னுமிடத்தைக் காலி செய்து விட்டார்கள். லாவ்ஸன் குன்றை ஆஸ்ட்ரியர்கள் பலமாகத் தாக்கி சில பாகங்களைப் பிடித்திருக்கிருர்கள்.

12-தேதி.

ஆஸ்ட்ரியர்கள் லாவ்ஸென் குன்றைப் பிடித்துக் கொண்டார்கள்.

13-தேதி.

ஆஸ்ட்ரியர்கள் ஸெட்டிஞ்ஜை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிருர்கள்.

அல்பேனியாவிலிருந்து வரும் ஸெர்வியர்களை ஒன்று சேர்ப்பதற்கு ஸௌகர்ய மேற்படுவதற்காக ப்ரெஞ்சுக்காரர்கள் ஒரு ஸைன்யத்தை கார்பூதீவில் கொண்டுவந்திருக்கிருர்கள்.

14-தேதி.

ப்ரெஞ்ச் குருப்புகள் க்ரீஸின் எல்லை ப்ரதேசத்திலுள்ள டெமிர், ஹிஸ்ஸார்கிலிண்டிர் என்னுமிடங்களிலுள்ள பாலங்களை ராணுவபாதுகாப்பு ஸௌகர்யங்களை உத்தேசிக்க நாசம்செய்துவிட்டன.

## SEASON

## காலஸ்திதி

---

### Rainfall.

மழை.—1915ஞு எப்ரல்மீ 1உயி லிருந்து 1915ஞு டிஸம்பர்மீ 14உ வரையில் பெய்த மழையின் அளவும், இந்தக் காலத்தில் ஸராஸரியில் பெய்திருக்கவேண்டிய மழையின் அளவும், கீழே அங்குலம் ஸெண்டுகளாகக் குறிக்கப்பட்டிருக்கின்றன.

| மழை பெய்த ஊரின் பெயர். | பெய்த மழை. அங்குலம். | பெய்திருக்க வேண்டிய மழை. அங்குலம். |
|---|---|---|
| கோபால்பூர் | 61·61 | 43·19 |
| வால்டேர் | 52·48 | 35·11 |
| காக்கிநடா | 46·06 | 37·41 |
| மஸூலிப்பட்டணம் | 61·04 | 38·74 |
| நெல்லூர் | 51·41 | 31·65 |
| மதராஸ் | 46·05 | 45·10 |
| கூடலூர் | 28·55 | 45·13 |
| நாகபட்டணம் | 29·74 | 44·53 |
| பாம்பன் | 26·94 | 29·80 |
| கொழும்பு | 83·15 | 71·66 |
| திருவனந்தபுரம் | 80·64 | 59·49 |
| கொச்சி | 120·93 | 109·74 |
| கள்ளிக்கோட்டை | 120·82 | 115·17 |
| மங்களூர் | 106·60 | 126·59 |
| மெர்க்காரா | ... | ... |
| ஐதராபாத் | 52·20 | 30·09 |
| பல்லாரி | 32·92 | 19·59 |
| கர்நூல் | 23·05 | 26·22 |
| கடப்பை | 28·85 | 30.50 |
| ஹாஸ்ஸான் | 33·65 | 35·05 |
| பெங்களூர் | 34·82 | 34·37 |
| கொடைக்கானல் | 43·59 | 53·11 |
| உதகமண்டலம் | 62·72 | 51·69 |
| கோயம்புத்தூர் | 22·55 | 20·06 |
| வேலூர் | 39·90 | 41·70 |
| சேலம் | ... | ... |
| திருச்சிநாப்பள்ளி | 32·38 | 29·58 |
| புதுக்கோட்டை | 33·18 | 30·72 |
| மதுரை | 40·16 | 31·72 |
| திருநெல்வேலி | 23·91 | 21·80 |

## Calendar—பஞ்சாங்கம்.

| ருதி பாக | உதய லக் கா வி | அஹஸ் நா வி | துலு உ | இங் உ | தமி உ | வாரம் | கலி-5017, சாலி-1838, கொல்லம்-1091 பஸலி-1325, இங்கி-1916-ஜனவரி-பிப்ரவரி } 49-ராக்ஷஸஸ்ரு தைமீ { புஷ்யம-மாகம், உத்தராயணம்-ஹேமந்தருது, ஹிஜரி-1334ஸ்ரு ரப்யூலவல்-ரப்யூஸானிமீ |
|---|---|---|---|---|---|---|---|
| கி | 4 48 | 2833 | 8 | 14 | 1 | வெ | தச-46-58, பர-26-5, சாத்-8-33, தை-14-11, ரா-30-56, மகாதசமீதி, உத்தராயணபுண்யகாலம், கிருத்திகை, விருத்யர்க்ஷம், கரிநாள். |
| அ | 38 | 34 | 9 | 15 | 2 | ச | ஏகா-53-6, கிரு-33-5, சுப-10-5, வணி-19-58, சே-3-30, ஸர்வ ஏகாதசீ, மன்வாதி, கோபூஜை, கரிநாள் |
| கி | 28 | 35 | 10 | 16 | 3 | ஞா | த்வா-59-40, ரோ-40-36, சுப்-12-8, பவ-26-21, தி-18-4, ரா-27-47, இராமா, கரிநாள் |
| அகி | 18 | 36 | 11 | 17 | 4 | தி | த்ர-60-0, மிரு-48-15, ப்ரா-14-24, கவு-32-58, ப்ரதோஷம், த்ரிதினஸ்பிருக், திவாமா |
| மகி | 4 9 | 37 | 12 | 18 | 5 | செ | த்ர-6-15, திரு-55-43, மா-16-39, கர-39-17, தி-11-54, வைசிரா |
| கி | 3 59 | 37 | 13 | 19 | 6 | பு | சகி-12-34, புன-60-0, வை-18-39, பத்-45-32, ரா-0-40, பூர்ணிமாதிதி |
| அ | 49 | 38 | 14 | 20 | 7 | வி | ○-18-21, புன-2-43, விஷ்-20-15, பால-50-58, தி-24-55, அதிதி, தைப்பூசம் |
| உம | 39 | 39 | 15 | 21 | 8 | வெ | ப்ர-23-22, பூச-9-4, ப்ரீ-21-18, தை-55-32, ரா-15-27, கும்பாயன-19-0, ப்ரதமாதி, அப-அந்தம்-22-55, பௌஷபகுள, இஷ்டி |
| மஅ | 30 | 40 | 16 | 22 | 9 | ச | த்வி-27-30, ஆயி-14-34, ஆயு-21-39, வணி-59-10, ரா-18-19 |
| மகி | 20 | 41 | 17 | 23 | 10 | ஞா | த்ரி-30-33, மக-19-8, ஸவு-21-14, பத்-30-33, ரா-11-43 ஸங்கடசதுர்த்தீ |
| கி | 10 | 42 | 18 | 24 | 11 | தி | சது-32-27, பூர-22-34, சோ-19-57, பவ-1-39, ரா-12-39, கரிநாள் |
| அகி | 3 0 | 43 | 19 | 25 | 12 | செ | பஞ்-33-5, உத்-24-48, அதி-17-43, கவு-2-56, ரா-17-32 |
| மகி | 2 51 | 44 | 20 | 26 | 13 | பு | ஷஷ்-32-19, ஹஸ்-25-43, சுக-14-26, கர-2-52, ரா-16-58 |
| கிஅ | 41 | 45 | 21 | 27 | 14 | வி | ஸப்-30-11, சித்-25-16, திரு-10-3, பத்-1-24, பால-58-35, ரா-10-14, காலாஷ்டமீ |
| கி | 31 | 46 | 22 | 28 | 15 | வெ | அஷ்-26-38, சுவா-23-28, சூல-4-35, கண்-58-2, தை-54-21, ரா-8-5, அஷ்டமீதி, அஷ்டகா, இராமா |
| கி | 21 | 47 | 23 | 29 | 16 | ச | நவ-21-46, விசா-20-23, வ்ரு-50-31, வணி-45-55, ரா-0-59, திதித்வயம், திவாமா |
| ம | 12 | 48 | 24 | 30 | 17 | ஞா | தச-15-46, அனு-16-7, திரு-42-8, பவ-42-23, ரா-0-10, ஏகாதசீதி, கரிநாள் |
| கி | 2 2 | 50 | 25 | 31 | 18 | தி | ஏகா-8-47, கேட்-10-55, வ்யா-33-4, கவு-35-1, ரா-0-11, ஸர்வஏகாதசீ |
| அகிப | 1 52 | 51 | 26 | 1 | 19 | செ | த்வா-1-8, த்ர-53-6, மூல-5-3, பூரா-58-50, ஹர்-23-35, கர-27-9, தி-1-27, தி-26-35, ப்ரதோஷம், அவம |
| அகி | 42 | 52 | 27 | 2 | 20 | பு | சகி-45-4, உரா-52-39, வஜ்-13-54, பத்-19-3, தி-16-45, மாஸசிவராத்ரி, போதாயன அமா |
| கி | 33 | 53 | 28 | 3 | 21 | வி | ●-37-22, சிர-46-52, வித்-4-20, வ்ய-55-9, சது-11-9, தி-1-39, ரா-27-4, வ்யசிரா, அமாதி, பிண்டபிதிரு, சிரவண உபவாஸம், போதா இஷ்டி |
| கி | 23 | 55 | 29 | 4 | 22 | வெ | ப்ர-30-23, அவி-41-52, வரீ-46-40, கிம்-3-45, பால-57-17, ரா-29-41, மாகசுத்த, இஷ்டி, சந்திரதர்சனம் |
| அம | 13 | 56 | 1 | 5 | 23 | ச | த்வி-24-30, சத-38-2, பரி-39-10, தை-52-5, சே-2-35, ரா-24-20, த்விதீயாதி |
| கிஅ | 1 3 | 57 | 2 | 6 | 24 | ஞா | த்ரி-20-4, பூட்-35-42, சிவ-32-54, வணி-49-30, ரா-30-18, திதித்வயம், குந்தசதுர்த்தீ |
| கி | 0 54 | 2858 | 3 | 7 | 25 | தி | சது-17-22, உட்-35-7, சித்-28-1, பவ-46-43, சே-3-15, பஞ்சமீதி, சதுர்த்தீவிரதம் |
| கி | 44 | 29 0 | 4 | 8 | 26 | செ | பஞ்-16-34, ரே-36-27, சாத்-24-40, கவு-46-56, தி-5-32, ஷஷ்ட்யுபவாஸம், வஸந்தபஞ்சமீ |
| மகி | 34 | 1 | [illegible] | 9 | 27 | பு | ஷஷ்-17-46, அசு-39-41, சுப-22-50, கர-49-5, ரா-[illegible]-50, ஸப்தமீதி |
| கிம | [illegible]4 | 2 | [illegible] | 10 | 28 | வி | ஸப்-20-51, பர-44-40, சுப்-22-28, பத்-53-2, [illegible]-5-29, அதிதி, ரதஸப்தமீ, மன்வாதி |
| கிம | 15 | 4 | [illegible] | 11 | 29 | வெ | அஷ்-25-33, கிரு-51-[illegible], ப்ரா-23-17, பால-58-[illegible]4, [illegible]-7-41, அஷ்டமீதி, கிருத்திகை, பீஷ்மாஷ்டமீ |
| அகி | 0 5 | 29 5 | | | 30 | ச | நவ-31-28, ரோ-58-21, மா-25-2, கவு-31-28, ரா-6-46, கும்பாவி-30-4, மகாநவமீதி, விஷ்ணுபதிபுண்ய காலம் |

| | | | |
|---|---|---|---|
| குரு | | | ச |
| சு | 21-கட-செ<br>25-மீன-சு | | கே |
| ர-பு ரா | | | செ |
| | | | |